# வையாபுரிப்பிள்ளையின் தமிழ்ப்பணி

முனைவர் இராதா செல்லப்பன்



தில்லித் தமிழ்ச் சங்கம்

வையாபுரிப்பிள்ளையின்

# தமிழ்ப்பணி


முனைவர் இரா. தா. செல்லப்பன்

(பேராசிரியர், பாரதிதாசன் பல்கலைக் கழகம்)






தில்லித் தமிழ்ச் சங்கம்

தமிழ்ச் சங்கம் மார்க்

இராமகிருஷ்ணபுரம்

புதுதில்லி - 110022.

BIBLIOGRAPHICAL DATA

| | |
|---|---|
| Title | : VAIYAPURI PILLAIYIN THAMIZHPANI |
| Author | : Dr. Radha Chellappan |
| Language | : Tamil |
| Content | : A brief note on Prof. Vaiyapuri Pillai's Works and his unpublished Poems. |
| Publishers | : Delhi Tamil Sangam<br>Tamil Sangam Marg<br>Ramakrishnapuram<br>New Delhi-110022 Ph :674217 |
| Sales Right | : New Century Book House (P) Ltd.<br>41-B, Sidco Industrial Estate,<br>Ambattur, Madras-600 098. |
| Edition | : First |
| Date of Publication | : Dec. 1992 |
| Size of the Book | : 21 X 14 Cms |
| Printing type used | : 10 Pt. |
| No. of Pages | : 112 + 12 |
| Price | : Rs. 20-00 |
| No. of Copies | : 1000 |
| Printer | : KANAKA DHURGA PRINTERS. MS-96. |
| Binding | : Paper back. |



பேராசிரியர் : **எஸ். வையாபுரிப்பிள்ளை**

தோற்றம் : 12-10-1891 மறைவு : 17-2-1956

# வெளியீட்டாளர் நூன்முகம்

1946ஆம் ஆண்டில் ஒரு சில தமிழன்பர்களால் ஓர் அறையில் ஆரம்பிக்கப்பட்ட தில்லித் தமிழ்ச்சங்கம் இன்று பன்மாடிக் கட்டிடமாய் பாரதத்தின் தலைநகராம் தில்லியில் தலை நிமிர்ந்து நிற்கிறது. தில்லியில் அமைந்துள்ள மன்றங்களிலேயே மூத்த அமைப்பாக விளங்குகிறது தில்லித் தமிழ்ச் சங்கம்.

தாய்த் திருநாடாம் தமிழகத்திலிருந்து முன்னும் பின்னுமாக வந்த தமிழர்கள்தாம் இங்கு வாழ்கிறார்கள். எனினும், தமிழ் நாட்டைக் கூறுபோட்டு அதன் வளர்ச்சியையும் முன்னேற்றத்தையும் தடுத்துக் கொண்டிருக்கும் சாதி, சமய, கட்சி வேறுபாடுகள் இன்றித்தலைநகர் வரும் தமிழ்ப் பேரறிஞர்களுக்கு வரவேற்பளித்தல், இலக்கியக் கூட்டங்கள் நடத்துதல், தமிழ்க்கலை, கலாச்சாரம் ஆகியவற்றைப் பரப்புதல், தமிழ் வகுப்புகள் நடத்துதல், தமிழ் நூலகத்தின் வழி தமிழ்ச் செழுமையை மற்றையோர் அறிய வாய்ப்பளித்தல், தமிழ்ப் பெரியோர்களின் நூற்றாண்டு விழா கொண்டாடுதல் ஆகியவற்றைத் தமிழ்ச் சங்கம் இடைவிடாது செய்து வருகின்றது.

அச் செயல்பாடுகளில் ஒன்றுதான் தமிழ்ப் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை அவர்களின் நூற்றாண்டு விழா. எண்ணத்தளவில் மிகப் பெரிய திட்டம் தீட்டப்பட்டுள்ளது. தமிழ்ப் பேரகராதியின் தந்தையாகிய, தமிழ் ஆய்வுத் துறையில் விஞ்ஞான முறை அணுகியலைக் கொண்ட, நாற்பதற்கும் மேலான நூல்களை வெளியிட்ட தமிழ்ப் பேராசிரியர் அவர்களைத் தில்லி வாழ்த் தமிழர்களுக்கும், பிற மொழியாளர்களுக்கும் அறிமுகப்படுத்தும் வகையில் தமிழிலும் ஆங்கிலத்திலும் சிறப்புச் சொற்பொழிவுகளை அமைத்தல், தில்லிப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர்களையும் மற்றும் சில பேரறிஞர்களையும் கொண்டு கருத்தரங்கு நடத்துதல் ஆகியவை அத்திட்டத்தின் ஒரு சில கூறுகளாகும். இதற்காகவே தமிழ்நாட்டிலிருந்து அவர் பேத்தி ராதா செல்லப்பன் அவர்களையும், மற்றும் பேராசிரியரோடு நெருங்கிய தொடர்பு கொண்டவர்களையும் வரவழைத்துச் சிறப்புச் சொற்பொழிவாற்றச் செய்ய எண்ணியுள்ளது.

எத்துணை வல்லமை பெற்றவராயினும் ஒருவர் தம் வாழ் நாளிலேயே தாம் செய்ய எண்ணிய செயல்களை எல்லாம் செய்து முடித்து விட முடிவதில்லை. பேராசிரியர் அவர்கள் தமிழ்த் துறையில் ஆற்றிய பணி ஏராளம் எனினும் இன்னும் சில வற்றைச் செய்யலாம் என்று எண்ணி இருந்திருப்பார். அவரு டைய ஆய்வுக் கட்டுரைகள் அவர் காலத்திலேயே பதிப்பிக்கப் பெற்ற போதிலும் விடுபட்டவை சில இருக்கலாம். அத்தகைய கருத்துக் குவியல் ஒன்றை வெளியிடலாம் என்று எண்ணியது தில்லித் தமிழ்ச் சங்கம்.

மூளையைத் தீய்க்கும் தீவிர ஆராய்ச்சிப் பணியில் ஈடுபட்டி ருந்த பேராசிரியருக்குத் தென்றலாகத் தவழ்ந்து வந்து இதமளித்த கவிதைக் கற்பனைகள்தாம் எஞ்சியுள்ளன என்னும் செய்தி அறிந்து அவருடைய பேத்தியின் மூலமாகவே அவற்றைத் தொகுத்து வெளியிட முன் வந்தது தில்லித் தமிழ்ச் சங்கம். அதன் விளைவே உங்கள் கையில் தவழும் இந்நூல்.

மறைந்த தமிழறிஞருக்குச் செய்யும் அஞ்சலியாகவும் தமிழ் உலகுக்கு அளிக்கும் சிறு காணிக்கையாகவும் இந்நூலை வெளி யிடுகிறது தில்லித் தமிழ்ச் சங்கம். இந்நூல் வெளிவருவதற்குப் பெரிதும் துணை புரிந்த இராதா செல்லப்பன் அவர்களுக்கும், குறுகிய கால அவகாசத்தில் சிறப்பாக அச்சேற்றித் தந்த கனக துர்கா அச்சகத்தாருக்கும் எங்கள் நன்றி உரித்தாகுக.

தில்லித் தமிழ்ச் சங்கம்

# பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளையின் தன்வரலாற்றுக் குறிப்புகள்

## எனது ஜனனம்

எனது ஜனனம் 1891 அக்டோபர் 12. திருநெல்வேலியைச் சேர்ந்த வண்ணார் பேட்டையில் வேளாள வகுப்பில் நான் பிறந்தேன். எனது தந்தையார் வாழ்ந்துவந்த இடம் அடுத்துள்ள குறுக்குத் துறையாகும். எனது தந்தையும் தமிழிலும் சைவ சித்தாந்த சாஸ்திரத்திலும் மிக வல்லவர்கள். தந்தையின் பிதாவாகிய எனது தாத்தா அவர்களும் தமிழில் நல்ல புலமையுடையவர்கள். வீரராகவபுரத்தில் கிராம முன்சீப்பாக வெகு காலம் விளங்கியவர்கள். தாம்பிரபரணிப் புராணமும் மற்றும் சில தோத்திர நூல்களும் இயற்றியுள்ளார்கள்.

## எனது கல்வி

திருநெல்வேலியில் முன் காலத்தில் சிறப்பாக விளங்கிய உபாத்தியாயர் கணபதிப் பிள்ளை அவர்களிடம் சில காலம் தமிழ் வாசித்தேன். பின்னர் இந்து கலாசாலையிலும் செயிண்ட் சேவியர் ஹைஸ்கூலிலும் ஆங்கிலம் கற்றேன். இந்து கலாசாலையில் எனது தமிழ் ஆசிரியராக இருந்தவர், நுண்ணறிவாளரும் சிறந்த ஆராய்ச்சியாளருமாகிய சிவராம பிள்ளை அவர்கள். திருவாவடுதுறை ஆதினத்துப் பண்டார சன்னிதிகளாக விளங்கிய சுப்ரமணிய தேசிகர் அவர்கள் மரபில் வந்த எம். எஸ். சுப்பிரமணியக் கவிராயரும் எனக்குச் சிலகாலம் தமிழ் ஆசிரியராய் இருந்தார். இளமையிலேயே தமிழில் கவிதை இயற்றும் ஆற்றல் எனக்கு இருந்தது.

ஆங்கிலம் முதலிய பாடங்களைக் கூடப் புறக்கணித்துவிட்டு தமிழ் நூல்களையும் பிரபந்தங்களையும் கற்பதே எனக்கு வழக்கமாக இருந்தது. இளமையில் தெய்வ வழிபாட்டிலும் கோயில் வழிபாட்டிலும் மிக்க ஈடுபாடுடையவனாய் இருந்தேன்.

தேவாரக் கோஷ்டிகளில் சேர்ந்து விழாக் காலங்களில் பாடிச் செல்வதும் உண்டு. அக்காலத்தில் சென்னையிலிருந்த குமர குருதாச சுவாமிகள் எங்கள் ஊருக்கு வந்திருந்தார்கள். அவர்கள் எனது தமிழ்க் கல்வியைக் கண்டு என்மீது மிகவும் அன்பு கொண்டிருந்தார்கள். சுமார் இருபத்தைந்து முப்பது வருடங்களுக்குப் பின்னர் அவர்களை நான் சென்னையில் கண்டபொழுதும் முன்பு கொண்டிருந்தது போலவே என்மீது பேரன்பு பாராட்டினார்கள்.

இந்துக் கலாசாலையை விட்டுச் சென்னையில் கிறிஸ்துவக் கலாசாலையில் பி. ஏ. வகுப்பில் சேர்ந்தேன். பி. ஏ.யில் தமிழில் முதலாவதாகத் தேறினேன். எனது பாடம் சரித்திரமும் பொருளாதாரமும். கிறிஸ்தவக்கலாசாலையில் மறைமலையடிகள் என்று வழங்கும் நாகை வேதாசலம் பிள்ளை அவர்கள் எனது தமிழ் ஆசிரியர். பின்னர் திருவனந்தபுரத்தில் சட்டப் பரீட்சைக்குப் படிக்க வந்தேன். அப்பரீட்சையில் 1915-ல் தேறினேன்.

## எனது உத்தியோகம்

திருவனந்தபுரத்தில் சில காலமும் திருநெல்வேலியில் சில காலமும் மொத்தம் பத்து ஆண்டுகள் வக்கீல் தொழில் புரிந்து வந்தேன். ஆனால் அக்காலத்திலும் சங்க இலக்கியங்கள், கம்பராமாயணம் முதலியவற்றில் பெரிதும் ஈடுபட்டுக் கற்று வந்தேன். பல அன்பர்களும் என்னுடனிருந்து கற்றதுண்டு. நான் முதன் முதலில் தமிழ் ஆராய்ச்சி பற்றி எழுதிய கட்டுரை செந்தமிழில் வெளிவந்தது. அதன் பத்திராதிபரான திரு. நாராயண அய்யங்காரை மறுத்து, பதின்மூன்றாம் புறப்பாட்டைக் குறித்து நான் செய்துவந்த விவாதம் பற்றியதாகும் இக்கட்டுரை. இது எழுதுவதற்குக் காரணமாக இருந்தவர் திருவிதாங்கூரில் ஹைகோர்ட்டு ஜட்சாக விளங்கிய திரு. கே. ஜி. சேஷையர் அவர்களின் மாப்பிள்ளை கே. ஜி. சங்கர ஐயர் பி.ஏ., பி.எல். ஆவர். இக்கட்டுரை என்னைப் பல வித்வான்களுக்கும் அறிமுகப்

படுத்தியது. பின்னர் பல கட்டுரைகள் பலப்பல பத்திரிகைகளுக்கு எழுதிவந்தேன்.

1926-நவம்பரில் சென்னை சர்வகலாசாலையார் வெளியிட்டு வந்த தமிழ் லெக்ஸிகனுக்குப் பதிப்பாசிரியனாக நியமனம் பெற்றேன். இந்த அகராதி வேலை 1936-ல் முடிவாயிற்று. ஏழு தொகுதிகள் வெளிவந்துள்ளன. ஒவ்வொரு தொகுதியிலும் நான்கு பகுதிகள் உண்டு. இவற்றுள் முதல் தொகுதி தவிர மற்றத் தொகுதிகள் அனைத்தும் என்னால் பதிப்பிக்கப் பட்டனவே. எனக்கு உதவியாளராக இருந்தவர்கள் திரு. ராவ்சாகிப் மு. இராகவையங்கார், திரு. வி. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியர், டாக்டர் பி. எஸ். சுப்பிரமணிய சாஸ்திரி, திரு. வி. நாராயண ஐயர் எம்.ஏ. எம்.எட் முதலானோர். அகராதி முடிந்ததும் அரசாங்கத்தினர் எனக்கு ராவ்சாகிப் என்ற பட்டம் அளித்துக் கௌரவித்தனர்.

பின்னர் சென்னை சர்வகலாசாலைத் தமிழாராய்ச்சித் துறைத் தலைவனாக 1936 முதல் 1946 அக்டோபர் மாதம்வரை தமிழ்ப்பணியாற்றி வந்தேன். நான் எழுதிய கட்டுரைகளும் பதிப்பித்த நூல்களும் இயற்றிய நூல்களும் பலபல. 1946-ல் நாகபுரியில் நடந்த ஓரியண்டல் கான்பிரன்ஸில் திராவிடமொழிப் பகுதிக் கூட்டத்திற்குத் தலைமை தாங்கினேன். அங்குப் பேசிய சொற்பொழிவு ஆங்கிலத்திலும் தமிழிலும் வெளிவந்துள்ளது.

தொகுப்பு : பேராசிரியர் மு. சண்முகம் பிள்ளை

# ஆசிரியர் உரை

தமிழன்னைக்குத் தொண்டாற்றப் பலரை ஈன்றெடுத்த பெருமை திருநெல்வேலிக்கு உண்டு. அவர்களுள் வழக்கறிஞர் களாக இருந்து தமிழ்த்தொண்டில் தம்மை முழுதாக ஈடுபடுத்திய பெரியோர்களும் அடங்குவர். டி.கே.சி., கா. சுப்பிரமணியபிள்ளை, நாவலர் சோம சுந்தர பாரதியார், முதலானோர் குறிப்பிடத் தகுந்தவர்கள். இவ்வரிசையில் திரு. எஸ். வையாபுரிப் பிள்ளையும் சிறப்பிடம் பெறுகிறார்கள்.

பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளையின் மாணவரும் என் பேராசிரியருமாகிய டாக்டர் வி. அய். சுப்ரமணியம் (தமிழ்ப் பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர்) தம் பேராசிரியரைப் பற்றி கூறியுள்ளது அவரை நேரில் பார்க்கும் வாய்ப்பினைப் பெறாத இளைய தலைமுறையினருக்கு அவரை நன்கு படம் பிடித்துக் காட்டும். ''சின்ன உருவம், மெலிந்த உடல்வாகு பரந்து விரிந்த தமிழ் இலக்கியத்தை ஆழமாக அகலமாக உழுத கருவிகளாகிய கண்கள்; ஒளி பொருந்திய கண்கள்; எப்பொழுதும் நூல்களைப் படித்துக் கொண்டேயிருக்கும் காரணத்தால் கண் களைச் சுற்றியுள்ள சிறிய வீக்கம்; அமைதியான தோற்றம், மாணவர்களிடத்தே அன்பு; தன்னை அணுகும் ஆய்வாளர்களைத் தெளிவடையச் செய்வதில் காட்டும் பொறுமை. இவற்றின் ஒட்டு மொத்த உருவம்தான் பேராசிரியர்.''

ஆராய்ச்சி அறிஞர், ஆராய்ச்சி மன்னர், அகராதியியல் அறிஞர் என்றெல்லாம் புகழப்பட்டவர் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை. மொழியை உணர்வு பூர்வமாக அணுகாமல் அறிவு பூர்வமாக அணுகிய முன்னோடி ஆய்வாளர் என்ற பெருமைக் குடையவராகவும் திகழ்ந்தார். அது போன்றே சமுதாயத்தை யும் இலக்கியத்தையும் ஒருசேரப் பார்க்க வேண்டும் என்ற உணர்வு, ஆய்வு அறிஞர்களிடையே ஏற்படக் காரணமாக இருந்த வரும் பேராசிரியர்தான்.

பேராசிரியர் தம்மை இலக்கிய உலகிற்கு வெளிப்படுத்திய காலக் கட்டம் 1918. அக்காலம் சுதந்திரப் போராட்டத்திலே காந்தியடிகள் ஈடுபடத்துவங்கிய காலம். இந்தியா முழுமை யிலும் சுதந்திரப் போராட்டம் தீவிரமடைந்த காலம், அரசியல் தலைவர்களுடன் இணைந்து பொதுமக்களும் அந்நிய ஆட்சிக்கு எதிராகக் குரல் எழுப்பினர். ஆங்கிலேய ஆட்சியின்மீது இந்திய

மக்களுக்கு ஏற்பட்ட எதிர்ப்புணர்வு அவர்தம் மொழியான ஆங்கிலத்தின் மீதும் எதிரொலித்தது. அரசியல் தலைவர்கள், தலைசிறந்த அறிஞர்கள், எழுத்தாளர்கள், பத்திரிகை ஆசிரியர்கள், கவிஞர்கள் எனப் பலதிறத்தவரும் தத்தம் வழிகளிலே ஆங்கிலேயரை எதிர்த்து நின்றனர். தமிழகத்திலும் வ.உ. சிதம்பரனார், வ. வே. சு. ஐயர் போன்றோர் போராட்டக் களத்தில் குதித்தனர். இவர்களுடைய எதிர்ப்பு முறை ஒருவகையாக இருக்க, சுப்பிரமணிய பாரதியார் போன்ற கவிஞர்களின் போராட்டம் வேறுவகையாக இருந்தது. தம் எழுத்து வன்மையினால் மக்களிடையே சுதந்திர வேட்கையை உருவாக்க இவர்கள் முனைந்தனர். பாரதியார் தம் கவிதைகளின் வாயிலாகவும் கட்டுரைகளின் வாயிலாகவும் அடிமைத் தனத்தை நீக்கப் பாடு பட்டார். ஆங்கிலேயர் ஆட்சியில் பெரிய பதவிகளில் பொறுப்பேற்று நன்மை பெற்ற இந்தியர்களிடம் சுதந்திரப் போராட்ட உணர்வு கொண்டவர்களுக்குப் பெருவெறுப்பு ஏற்பட்டது. மேலும் பெரிய பதவிகளில் இருந்தவர்கள் பெரும்பான்மையோரும் உயர் வகுப்பினராகவே இருந்தனர். அவர்கள் ஆங்கிலம் அல்லது வடமொழியில் அல்லது இரண்டிலும் நல்ல தேர்ச்சி பெற்றவர்கள். எனவே சுதந்திரப் போராட்ட வீரர்களின் தேசியப் பற்றானது, அவர்கள் மீதுள்ள வெறுப்பை அவர்கள் பயன்படுத்திய மொழிகளின்மீது திருப்பியது. இதன் விளைவாக இம்மொழிகளுக்கு எதிர்ப்பு தெரிவிக்கும் வகையில் தாய்மொழியாம் தமிழ் மொழியின் உயர்வினை எடுத்துக்காட்ட வேண்டும் என்ற உணர்வு தமிழறிஞருலகில் தோன்றியது. ஆங்கில மொழி எதிர்ப்பும் வடமொழி எதிர்ப்பும் தமிழ் மொழி போற்றுதலும் தீவிரமடைந்தன. இக்காலத்தில்தான் மறைமலையடிகளின் தனித்தமிழ் இயக்கமும் தோன்றியது. இந்நிலையில் சுதந்திரப் போராட்டத்திற்குத் தேசியப்பற்றும் மொழிப்பற்றும் இரு கண்களாக மாறின. உலகிலேயே தொன்மை வாய்ந்த மொழி தமிழ் மொழிதான் என்று நிறுவும் முயற்சி தமிழகமெங்கும் தலையெடுத்துத் தீவிரமடைந்தது. இக்காலக் கட்டம்தான் வையாபுரிப்பிள்ளை இலக்கிய உலகிலே அடியெடுத்து வைத்த காலம்.

வையாபுரியின் ஆய்வு முடிவுகள் தமிழ் நூல்களின் காலத்தை முக்கியமாக, தொல்காப்பியம், திருக்குறள், சிலப்பதிகாரம் ஆகியவற்றின் காலத்தைப் பிற்படுத்திக் காட்டின, தமிழ்ச் செல்வங்களான இவற்றைக் காலத்தால் பிற்படுத்திக் காட்டிய

தால் தமிழின் தொன்மைக்கு மாசு ஏற்பட்டதாகப் பலரும் கருதினர். தமிழ் இலக்கியங்களின் தொன்மையைக் குறைப்பதால் தமிழ் மொழிக்கு இழுக்கு நேரும் என்று கருதிய அவர்கள் வையா புரியார் தமிழின் தொன்மையை மறுப்பதாகவே கருதிக் கொதித் தெழுந்தனர். தம்மை இகழ்ந்தவர்களுக்குப் பேராசிரியர் கூறிய பதில் ''குழந்தைக்கு உணவு கொடுக்காமல் அதன் அழகைப் புகழ்ந்து கொண்டு மட்டும் இருந்தால் அதன் உடலும் அறிவும் வலிவுற்று வளர்ந்துவிட மாட்டா. இங்ஙனமே தமிழ்மொழியின் வளர்ச்சிக்கு உதவுபவற்றைச் செய்யாது அதன தொன்மை யையும் பெருமையையும் பற்றியே நம்மவர் பேசிக் கொண்டிருந் தால் அது முன்னேற்றம் அடைந்துவிட மாட்டாது. அதன் வளர்ச்சியைப் பேணுவது நம் கடமையாகும்''. தமிழின் தொன் மையை, பெருமையைப் பேசிப் பேசியே காலம் கழிக்காமல் அதன் வளர்ச்சிக்கு ஆவன செய்ய வேண்டும் என்ற கருத்தை வெளிப படுத்துகிறார். இவ்வாறு தம்முடைய ஆய்வுமுறைகளின் மூலம் தமிழறிஞருலகில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தினார்.

தமது ஆய்வு முடிவுகளோடு தமிழறிஞருலகம் மாறுபட்ட போது, ''தமிழன்னைமீதுள்ள உண்மையான பக்தியால் அவளுக்கு உளமாரத் தொண்டு புரிதல் வேண்டும் என்ற நோக்கமொன்றே எனது உணர்வுகளுக்குக் காரணம்'' (இலக்கியச் சிந்தனைகள் : 114) என்று தம்மை வெளிப்படுத்த விழைகிறார். இவ்வாறு,

*காய்தல் உவத்தல் அகற்றி ஒரு பொருட்கண்*
*ஆய்தல் அறிவுடையதார் கண்ணதே—காய்வதன்கண்*
*உற்ற குணம் தோன்றாதாகும் உவப்பதன்கண*
*குற்றமும் தோன்றாக் கெடும்.*

என்ற முனைப்பாடியாரின் கூற்றுக்கிணங்கத் தம் ஆய்வை நடத்தினார்.

பேராசிரியரைப் பற்றிய குறைநோக்குடையோர் பலரும் தங்கள் கருத்துக்களைத் தமது மாணவ சந்ததிகளிடையே பரப்பி தமது ஆதங்கத்தைத் தீர்த்துக் கொண்டனர். பின்னால் வந்த வர்களும் பேராசிரியருடைய கருத்துக்களை நேரிடையாகப் படித்துத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பும் பெறமுடியவில்லை. தம் கட்டுரைகள் பலவற்றையும் முதலில் பத்திரிகைகளில் வெளியிட்டு, பின்னர் பல ஆண்டுகளுக்குப் பிறகே அவற்றிற்கு நூல்வடிவம் தருவது பேராசிரியர் அனுகு முறை. அவையும்

1947க்குப் பிறகே நூல் வடிவம் பெறத் தொடங்கின. எனவே அதுவரையிலும் பேராசிரியரின் ஆய்வு முடிவுகளைப் பெரும் பாலும் செவிவழிச் செய்தியாகவே கேட்டு வந்த இளந்தலை முறையினருக்கு, அவற்றை நடுநிலையோடு அணுக இயல வில்லை. அவரது நூல்கள் பலவும் பின்பதிப்பு பெறவில்லை என்பதும் இதற்கு மற்றொரு காரணம். இப்போது இந்நிலை மாறிவிட்டது. பேராசிரியரின் பெயரால் அமைக்கப் பெற்ற வையாபுரிப் பிள்ளை நினைவு மன்றம் பேராசிரியரது நூல்களைத் தொகுதிதொகுதிகளாக வெளியிடும் பணியில் ஈடுபட்டுள்ளது. இலக்கியச் சிந்தனைகள், தமிழின் மறுமலர்ச்சி, காவிய காலம், இலக்கிய உதயம் ஆகிய நான்கு தொகுதிகள் பவனி வந்துள்ளன. பேராசிரியரின் நூற்றாண்டு விழாக்கள் 1991 இலிருந்து கொண்டா டப்பட்டு வருகின்றது. திருவனந்தபுரத்திலுள்ள சைவப்பிரகாச சபை, தமிழ்ப் பல்கலைக் கழகம், பாண்டிச்சேரி பல்கலைக் கழகம், கேரளப்பல்கலைக்கழகம், சென்னைப் பல்கலைக்கழகம், என்.சி.பி.எச், சாகித்திய அகாதமி ஆகிய பல நிறுவனங்களும் இன்று பேராசிரியருக்கு நூற்றாண்டு விழாவும் கருத்தரங்குகளும் நடத்தி மகிழ்ந்தன. பேராசிரியரின் தமிழ்ப்பற்றையும் அறிவு பூர்வமான ஆய்வு அணுகுமுறையையும் தமிழுலகம் கண்டு உண்மையை அறிந்து மகிழ்ந்தது.

இந்நூல் தமிழோடிணைந்த வாழ்வுநெறி, இலக்கியப் படைப்புகள், ஆய்வுக் களங்கள் என்ற மூன்று கட்டுரைகளைக் கொண்டது. தமிழோடிணைந்த வாழ்வுநெறி என்ற கட்டுரை பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளையவர்களின் வாழ்க்கைநெறி தமிழ் ஆய்வோடு இரண்டறக் கலந்து அமைந்திருந்ததைப் புலப்படுத்துகிறது.

பேராசிரியர் ராஜி என்ற நாவலையும், பல சிறுகதைகளையும் கவிதைகளையும் எழுதியதின் மூலம் தமது படைப்பார்வத்தை வெளிபடுத்தியுள்ளார் அவர். தமது கைப்பட எழுதி வைத்திருந்த இருபத்திரண்டு கவிதைகளும், என்ன வாழ்க்கை இது, முத்தம், பரிசு, பிரிவு, ஆகிய நான்கு மொழிபெயர்ப்புக் கவிதைகளும் இந் நூலில்தான் முதன் முதலில் அச்சேறுகின்றன. பேராசிரியர் 1926 சனவரித் திங்கள் முதல் 1956-இல் அவர் மறைவதற்குச் சில நாட்களுக்கு முன்னர் வரையிலும் ஒரு நாள் கூடத் தடை படாமல் நாட்குறிப்புகள் எழுதியுள்ளார். அவற்றிலிருந்து இக்

கவிதைகளில் சில எழுதப்பட்ட நாளும் ஆண்டும் தெரிய வந்தன. அவற்றைக் கவிதைக் குறிப்பில் தந்துள்ளேன். பேராசிரியரது மொழி பெயர்ப்புத் திறனை அறிய விரும்புவோருக்கு உதவும் நோக்கில் அவரது ''இலக்கிய உதயம்'' நூல்களில் (இரு தொகுதிகள்) இடம்பெற்ற மொழி பெயர்ப்புக் கவிதைகளும் இந் நூலில் தொகுத்துத் தரப்படுகின்றன. இதனால் அவரால் மொழிபெயர்க்கப்பட்ட கவிதைகள் அனைத்தையும் ஒருசேரப் பார்க்கும் வாய்ப்பு கிடைக்கிறது.

பேராசிரியர் தமிழியல் துறையின் பரந்துபட்ட பல்வேறு களங்களில் ஆய்வுகளை நிகழ்த்தியுள்ளார். அவரது ஆய்வுக்குட் பட்ட துறைகளைப் பற்றி விளக்குகிறது ஆய்வுக்களங்கள் என்ற கட்டுரை.

பேராசிரியரின் சுய சரிதையும் முதன்முதலாக இந்நூலில் இடம் பெறுகிறது. இச்சுயசரிதையின் கையெழுத்துப் பிரதியைத் தந்துதவிய பேராசிரியரின் மாணாக்கரான வித்வான் மு. சண்முகம் பிள்ளையவர்களுக்கு நன்றி.

தமிழ்த் தொண்டு ஆற்றிய, மறைந்த பெரியோர்களை நினைவுகூர்ந்து அவர்களுக்கு ஆர்வத்துடன் விழாக்கள் எடுத்துச் சிறப்புச் செய்துவரும் தில்லித் தமிழ்ச்சங்கம், பேராசிரியர் அவர் களது நூற்றாண்டு விழாவினை நடத்தி வருவது போற்றுதற் குரியது. இவ்விழாவினை ஒட்டித் தமிழ்ச் சங்கத்தினர் பேராசிரி யரைக் குறித்து நூல் ஒன்று வெளியிட முனைந்து அதன் ஆக்கப் பணியினை எனக்கு அளித்தனர். இதனை ஒரு பெருமையாகக் கருதுகிறேன். இந்நூலினை விழாவில் வெளியிட முடிவெடுத்து துள்ளனர். நூலினை உருவாக்க எனக்கு ஊக்கம் அளித்து அதனைச் சிறப்புற வெளியிட முன்வந்த தில்லித் தமிழ்ச் சங்கத் திற்கு எனது உளமார்ந்த நன்றி.

முனைவர் இராதா செல்லப்பன்

## தமிழோடிணைந்த வாழ்வுநெறி

தமிழ்ப் பேரகராதியின் தலைமைப் பதிப்பாசிரியராகவும் சிறந்த ஆராய்ச்சியாளராகவும் திறனாய்வாளராகவும் விளங்கிய பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளையவர்களை அறியாதார் தமிழுலகில் எவரும் இல்லை. ஆய்வுப்பணி, பதிப்புப்பணி, படைப்புப்பணி எனத் தமிழியல் பரப்புகளிலே தம்மை முழுமையாக ஈடுபடுத்திக்கொண்டு தமிழுலகிலே தமக்கென ஓரிடத்தை நிலை நிறுத்திக்கொண்ட வையாபுரியார் தமிழோடு இணைந்த வாழ்க்கையையே தமது வாழ்வு நெறியாகக் கொண்டு திகழ்ந்தார்.

## தோற்றமும் குலப்பெருமையும்

பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையவர்கள் திருநெல்வேலி நகரைச் சார்ந்த சிக்க நாகையன் கிராமத்திலே 12-10-1891இல் பிறந்தார். இவர் தந்தையார் சரவணப் பெருமாள் பிள்ளை. தாயார் பாப்பம்மாள் என்ற பிரம்மநாயகி.

கல்விச் செல்வம் நிரம்பிய குடும்பத்தைச் சேர்ந்தவர் பேராசிரியர். இவரது தந்தைவழிப் பாட்டனார் சங்கரலிங்கம் பிள்ளை திருநெல்வேலியிலுள்ள வீரராகவபுரத்தில் கிராம முன்சீப்பாக வேலை பார்த்தவர். தமிழிலே புலமை படைத்தவர்; கவிதைகள் இயற்றுவார். திருநெல்வேலியை எழில்கூட்டும் தாமிரவருணி ஆற்றைப் புகழ்ந்து 'தாம்பிரபரணிப் புராணம் அல்லது பொருநை மாதா புராணம்' என்ற கவிதை நூல் இயற்றி அச்சேற்றினார். பக்திச் சொற்பொழிவுகள் ஆற்றுவதிலும் வல்லவராகத் திகழ்ந்தார்.

தாய்வழிப் பாட்டனாரின் பெயர் வையாபுரிப்பிள்ளை. தாய் வழிப் பாட்டனாராகிய இவரது பெயர்தான் நம் பேராசிரியருக்கு இடப்பட்டது. இவர் திருநெல்வேலியிலுள்ள வண்ணாரப் பேட்டையைச் சார்ந்தவர். சிறந்த பொறியாளராக விளங்கியவர்.

பேராசிரியரின் தந்தையார் சரவணப்பெருமாள் பிள்ளை வருவாய்த் துறைக் கண்காணிப்பாளராகப் பணியாற்றியவர். பெற்றோர் இருவருமே சிறந்த சிவபக்தர்கள்; சிவதீட்சை பெற்ற வர்கள். தமிழிலும் சைவ சித்தாந்தங்களிலும் வல்லவராகத்திகழ்ந் தவர். சைவப்பணியில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொள்ளக் கருதி அலுவலகப் பணியை இடையிலேயே உதறி எறிந்து விட்டார். இந்நிகழ்ச்சியைப் பேராசிரியரின் புதல்வியார் தங்கம் மாள் ''எங்கள் அப்பாவும் தந்தையாரைப் போலத்தான். ஒரே ஒரு வித்தியாசம். பாட்டையா சிவ பூசைக்காக வேலையை விட்டவர். அப்பாவோ தமிழ்ப் பூசைக்காக வக்கீல் தொழிலை விட்டவர்'' என்று குறிப்பிடுகிறார். சரவணப்பெருமாள் பிள்ளை யவர்களின் இறைவழிபாட்டில் தேவார, திருவாசகப் பாடல்கள் தினந்தோறும் இடம்பெறும். இறைவன் வீதியுலா வரும்போது தேவாரம் இசைக்கும் பக்தர்களுள் வையாபுரியாரும் ஒருவர். தாயாரும் புராணக் கதைகளையும் துதிப் பாடல்களையும் குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுத்தார். எனவே தமிழ்ப் புலமையுடைய, தமிழார்வமுடைய குடும்பத்திலே பிறந்த பிள்ளை யவர்களது உள்ளத்திலே தமிழார்வம் ஆழமாக ஊன்றியதில் வியப்பில்லை. அவரது தமிழ்ப்பற்று மேன்மேலும் வளர அவர் சூழ்நிலையும் காரணமாக அமைந்தது.

## பேராசிரியரின் பிற பெயர்கள்

இவர் பாலையா (பாலறாவாயர்), சம்பந்தன் ஆகிய பெயர் களாலும் அழைக்கப்பட்டார். எஸ். வையாபுரிப் பிள்ளை என்ற பெயரில்தான் அவரது நூல்கள் வெளிவந்தன எனினும் சாத்தூர் நொண்டி நாடகமும், சிறுகதை மஞ்சரியும் இதற்கு விலக்குகள். சாத்தூர் நொண்டி நாடகப் பதிப்பினைச் 'சம்பந்தன்' என்ற பெயரிலும், சிறுகதை மஞ்சரியைப் 'பாலையா' என்ற பெயரிலும் வெளியிட்டுள்ளார் பேராசிரியர்.

## இளமைச் சூழல்

சைவச் சமயச் சூழலிலே வாழ்ந்த பிள்ளையவர்களுக்கு வைணவ சமயத்தைப் பற்றியோ வைணவ இலக்கியத்தைப்

பற்றியோ அறிவது என்பது எண்ணிப் பார்க்க முடியாத ஒன்று. அப்போதைய காலச் சூழல் அவ்வாறு இருந்தது. அவருடைய தந்தையாருக்கோ வைணவத்தைப் புறக்கணிக்கும் அளவிற்குச் சைவ சமயப் பற்று. எனவே தமது சிறு வயதில் தந்தையாருக்குத் தெரியாமல், பிறர் அறியாமல் பொருநையாற்றங்கரையில் நண்பர்களோடு அமர்ந்து கம்பராமாயணப் பாடல்களை இரகசியமாகப் படிக்கத் துவங்கினார். அதன் சுவையை அறிய அறிய அவரது சமய நெறியில் நெகிழ்ச்சியும் விரிந்த மனப்பான்மையும் ஏற்பட்டன. பிற்காலத்தில் விருப்பு வெறுப்பற்ற ஆராய்ச்சியாளராக, திறனாய்வாளராக அவர் உருப்பெற இந்நிகழ்ச்சி ஒரு களனாக அமைந்தது எனலாம்.

## தொடக்கக் கல்வி

வையாபுரியாரின் தொடக்கக் கல்வியும் உயர்நிலைக் கல்வியும் நெல்லையில்தான். 'விளையும் பயிர் முளையிலே' என்பதுபோலத் தொடக்கப் பள்ளியில் படிக்கும்போதே தம் ஆசிரியர் கணபதிப் பிள்ளையின் கருத்தைக் கவர்ந்தார் வையாபுரியார். பிறகு பாளையங்கோட்டை செயின்ட் சேவியர் பள்ளியில் இடைநிலைக் கல்வி கற்றார். 1905இல் திருநெல்வேலியிலுள்ள மதுரை திரவியம் தாயுமானவர் இந்துக் கல்லூரிப் பள்ளியில் மெட்ரிகுலேஷன் கல்விக்காகச் சேர்ந்தார். இங்கு பள்ளியில் முதல் மாணவராக இருந்ததோடு கட்டுரைப் போட்டிகளிலும் கலந்து கொண்டு பரிசுகள் பலவற்றையும் பெற்றார். பள்ளியைத் தவிரத் தனிப்படவும் சில தமிழ்ப் பெரியோர்களிடத்தில் தமிழ் நூல்களைக் கற்கும் பேறு அவருக்கு வாய்த்தது. அவர்களுள் பாம்பன் தவத்திரு குமரகுருதாச சுவாமிகள் ஒருவர். பிள்ளையவர்களிடத்தில் சுவாமிகளுக்கு மிகுந்த ஈடுபாடு உண்டு. பிள்ளையவர்கள் சுவாமிகளிடம் இலக்கிய இலக்கணத்தோடு தத்துவத்தையும் கற்கும் பேறு பெற்றார். இவ்வாறே அங்கு வேலை பார்த்த யாழ்ப்பாணம் சுவாமிநாத பண்டிதரிடம் பலகாலம் பாடம் கேட்டுத் தமது தமிழ்க் கல்வியைப் பெருக்கிக் கொண்டார்.

இப்பள்ளியில் படிக்கும்போதுதான் உடன்பயின்ற அறிவியல் எழுத்தாளர் பெ. நா. அப்புசாமி ஐயருடைய தோழமையும் கிடைக்கப்பெற்றார். அன்றுமுதல் பேராசிரியரின் இறுதிக் காலமான 1957 வரையிலும் ஏறத்தாழ அரை நூற்றாண்டு காலம் இருவரும் குடும்ப அளவிலும் சரி இலக்கிய உலகிலும் சரி இணை

பிரியாத நண்பர்களாகவே விளங்கினர். இரட்டையர்கள் என்று பிறர் கூறுமளவிற்கு அன்புடையவர்கள். பத்மாவதி சரித்திரம் எழுதிய அ. மாதவையர் இவரது சிறிய தகப்பனார். பெ. நா அப்புசாமி ஐயர் அறிவியலைத் தமிழில் தரவேண்டுமென்ற நோக்கில் உழைத்தவர். பேராசிரியரோடு தமக்குள்ள தொடர்பை பெ. நா. அப்புசாமி கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார். "நாங்கள் இருவரும் பல விஷயங்களில் ஈருடலும் ஓருயிருமாக இருந்தோம் என்று சொன்னால் அது மிகையாகாது. என்னுடைய விஞ்ஞானக் கட்டுரைகள், கதைகள், பேச்சுக்கள் எல்லாவற்றையும் அவனிடம் படித்துக் காட்டித் திருத்தம் செய்துகொள்வதும் அவனிடமிருந்து இலக்கிய விஷயங்கள் பலவற்றைத் தெரிந்துகொள்வதும் அக்காலத்தில் நான் பெற்ற நன்மைகளுள் சில".

## கல்லூரிக் கல்வி

பள்ளிக் கல்வியை முடித்த பிள்ளையவர்கள் 1906இல் திருநெல்வேலி இந்துக் கல்லூரியிலே எஃப். ஏ வகுப்பில் சேர்ந்தார். இங்கே கல்லூரித் தமிழாசிரியர்களான சிவராமபிள்ளையும் எம். எஸ். சுப்பிரமணியக் கவிராயரும் பிள்ளையவர்களின் தமிழ் ஆற்றல் மேலும் வளரத் துணை நின்றனர்.

பேராசிரியர் இந்துக் கல்லூரி மாணவராக இருந்த காலத்தில் வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்களின் நாட்டுப்பற்று மிகுந்த சொற்பொழிவைக் கேட்கும் பேறு பெற்றார். அப்போதுதான் அவரது நாட்டுப்பற்று பேராசிரியரை அவர்பால் ஈர்த்தது. பின்னர் வ.உ.சி. தமிழ்த்தொண்டில் ஈடுபட்டபோது, தொல்காப்பிய இளம்பூரணருரையைப் பதிப்பிக்க எண்ணினார். பேராசிரியரிடம் இந்த ஏட்டுச் சுவடி இருப்பதை அறிந்து வ. உ. சி. அவரோடு தொடர்பு கொண்டார். பிள்ளையவர்கள் சென்னையில் வாழ்ந்த காலத்தில் வ. உ. சி. பலமுறை அவரைச் சந்தித்து இலக்கிய, இலக்கண விவாதங்கள் நடத்தியிருக்கிறார். வ. உ. சி. இளம்பூரணத்தின் முதல் இரண்டு இயல்களையும் பதிப்பித்தார். அவரது வேண்டுகோளுக்கிணங்க எஞ்சிய இயல்களுள் 3, 4, 5 இயல்களை 193லும், 6, 7, 8, 9 இயல்களை 1935லும் பதிப்பித்தார். வ. உ. சி. யால் தொடங்கப் பெற்ற இப்பதிப்புப் பணியைப் பேராசிரியர் முற்றுவித்தார் வ. உ. சி. இதன் முன்னுரையில், "இவ்வேழு இயல்களுக்கும் பெயரளவில் பதிப்பாசிரியன் யான், உண்மையில் பதிப்பாசிரியர் திரு. வையாபுரிப் பிள்ளையவர்களே" என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

பள்ளிக்கால நண்பர் பெ நா. அப்புசாமியைத் தவிர க. அ. நீலகண்ட சாஸ்திரி (சரித்திரப் பேராசிரியர்), வே. சாரநாதன் (திருச்சி தேசியக் கல்லூரி முன்னாள் முதல்வர்), பி. ஸ்ரீ. ஆச்சாரியா, ஆராய்ச்சி வல்லுநர், கே. ஜி. சங்கரய்யர் ஆகியோர் பிள்ளையவர்களுடன் கூடப்பயின்ற மாணாக்கர்கள். பிள்ளையவர்களின் நண்பர்கள் பலரும் பிற்காலத்தில் வரலாற்றாராய்ச்சியாளராக, பத்திரிகை ஆசிரியர்களாக, நீதிபதிகளாக, வழக்கறிஞர்களாக, பிறமொழி அறிஞர்களாக எனப் பல்வேறு துறையறிஞர்களாகப் பரிணமித்தனர் என்பதுவும் இந்நண்பர்கள் தொடர்பு அவரது ஆய்வு வாழ்விலும் தொடர்ந்தது என்பதும் குறிப்பிடத்தக்கது.

இளமைப் பருவத்தில் தன் தந்தையாரின் தூண்டுதலால் சமஸ்கிருதத்தையும் சைவ புராணங்களையும், நூல்களையும், சைவ தத்துவங்களையும் கருத்தூன்றிக் கற்கும் பேறு பெற்றார். சைவ சமய நூலில் நன்கு பயிற்சியும் பெற்றார். சமஸ்கிருத மொழியுடன், ஆங்கில மொழியையும் கற்கும் விருப்பம் அவருக்கு ஏற்பட்டது. பிற்காலத்தில் லகுசித்தாந்த கௌமுதியை ஆங்கிலத்தின் மூலம் மொழிபெயர்ப்பதற்கும், ஷெல்லி, வால்ட் விட்மன், ஹென்றி டேவிஸ் முதலானோரின் கவிதைகளை மொழிபெயர்ப்பு செய்யவும் அவருக்கு தூண்டுதல் ஏற்படுவதற்குக் காரணம் இளமையிலேயே ஏற்பட்ட ஆங்கில மொழிப் பயிற்சியும் ஆர்வமும் தான் என்று கூறலாம்.

மேலும் பட்ட முன் படிப்பு (எஃப்.ஏ.) வகுப்பில் படிக்கும் போதே அச்சில் வெளிவந்த இலக்கிய நூல்களை ஏட்டுப் பிரதிகளோடு ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும் என்ற ஆர்வமும் அவருள் முளைவிட்டது. எடுத்துக் காட்டாக முதன் முதலில் சி. வை. தாமோதரம்பிள்ளை வெளியிட்ட கலித்தொகைப் பதிப்பை அந்நூலின் ஏட்டுப் பிரதியோடு ஒப்பிட்டுப் படித்ததைக் கூறலாம். இந்த ஆர்வமே பிற்காலத்தில் அகராதிப் பணியில் அவர் ஈடுபட்டிருந்தபோது பல நூல்களைப் பதிப்பிக்கும் பணியில் அவரை ஈடுபடுத்தியது.

இவர் இளம் பருவத்திலேயே கவிதைபாடும் ஆற்றலையும் பெற்றிருந்ததாக அறிகிறோம். பின்னர், தமது ஆராய்ச்சித் துறைப் பணிகளுக்கிடையேயும் தம் மனநிறைவிற்காகவே பல கவிதைகளை எழுதினார் எனலாம்.

சுருக்கமாகக் கூறினால் இளமைக் காலத்தில் அவரிடம் முளைவிட்டிருந்த திறமைகள் நாளாவட்டத்தில் பெருமரமாக வளர்ந்து பயன் தந்தது என்றே கொள்ளவேண்டும்.

## சென்னையில் பட்டப்படிப்பு

பேராசிரியரின் வாழ்க்கையில் முதல்கட்ட திருநெல்வேலி வாழ்க்கை எஃப்.ஏ. படிப்புடன் முடிந்தது. பிறகு அவர் பி.ஏ. படிப்பிற்காகச் சென்னைக்குச் சென்றார். அங்கு சென்னை கிறித்தவக் கல்லூரியில் 1910-12 வரையிலும் பயின்றார். சரித்திரத்தையும் பொருளாதாரத்தையும் சிறப்புப் பாடங்களாகக் கொண்டிருந்தார். அப்போது தமிழ்நாட்டில் மிகச் சிறந்து விளங்கிய மறைமலையடிகள் இவருக்குத் தமிழாசிரியராக இருந்தார். தமிழ்க் கல்வியில் பிள்ளையவர்கள் சிறந்துள்ளமை கண்டு இவரிடம் அடிகள் மிகுந்த அன்பு காட்டினார். இதன்மூலம் அடிகளின் பேராதரவும் பிள்ளையவர்களுக்குக் கிடைக்கப் பெற்றது. கல்லூரித் தமிழ்ச் சங்கத்தின் செயலாளராகப் பொறுப் பேற்றுச் சிறந்த முறையில் பணியாற்றினார். இப்பொறுப்பின் மூலம் சென்னையில் தி. கனகசுந்தரம் பிள்ளை முதலிய தமிழ்ப் பேரறிஞர்களோடு பழகும் வாய்ப்பும் இவருக்குக் கிடைத்தது. 1912இல் பி.ஏ. பட்டமும் பெற்றார். அத்துடன், மதுரைத் தமிழ்ச் சங்கம் கல்லூரி மாணவர்களுக்காக நடத்திய தமிழ்த் தேர்வில் மாநிலத்திலேயே முதலாமவராக வையாபுரியார் தேர்ச்சி பெற்று சேதுபதி தங்கப்பதக்கத்தையும் பெற்றார்.

கல்லூரியில் படிக்கும் காலத்தும், ஏட்டுச் சுவடிகளைப் படிக்கும் அவரது திறமை வளர்ந்து வந்தது. ஏடு வாசிப்பதற்குத் தனிப்பட்ட பயிற்சி தேவை. சிதைந்த எழுத்துக்களை அறுதி யிடுவது எளிதான பணியன்று. செய்யுள் அமைப்பு, பொருள் பொருத்தம், சொல் வழக்கு முதலியவற்றை ஆராய்ந்து உண்மை யான பாடத்தைக் கண்டறிய வேண்டும். பொறுமைக்கும் அறிவுக்கும் சவால்விடும் இப்பணியில் ஈடுபாடு கொண்டார் பேராசிரியர். பி.ஏ. தேர்வு முடிந்த விடுமுறையில் தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணருரைச் சுவடியைக் கனகசுந்தரம் பிள்ளையவர்களிடம் பெற்றுக் காகிதத்தில் படி எடுத்துவைத்தார் பின்னாளில் 1934இல் அவரது இளம்பூரணருரைப் பதிப்பிற்கு இம்முயற்சி பெரிதும் உதவியது.

1912ஆம் ஆண்டு, திருநெல்வேலி பாளையங்கோட்டையில் முதன் முதலாக இலக்கியச் சொற்பொழிவாற்றும் வாய்ப்பும் கிடைத்தது. நெடுநல்வாடையும் நக்கீரரும் என்ற பொருள் பற்றிப் பேசினார். பின்னர் இக்கட்டுரை சற்குணர் மலரில் வெளி வந்தது. பிறகு, இக்கட்டுரை இலக்கிய தீபம் நூலிலும் சேர்க்கப் பட்டது. இங்கு ஒரு முக்கியமான செய்தியை நினைவுகூர வேண்டும். பி.ஏ. படிப்பில் இவர் தமிழை முதன்மைப் பாடமாகக் கொள்ளவில்லை. இருப்பினும் பட்டக் கல்வி படித்து முடித்த அந்த 21 வயது இளைஞர் அச்சிறு வயதிலேயே இலக்கியச் சொற் பொழிவு, அதுவும் சங்க இலக்கியச் சொற்பொழிவாற்றும்வண்ணம் திறமை பெற்றிருந்தார் என்பது வியத்தகு ஆற்றலேயாகும்.

## திருமணம்

பி.ஏ. படித்துக் கொண்டிருக்கும்போதே இவருக்குத் திருமண மும் நடைபெற்றது. இவர்தம் மனைவியார் சிவகாமி அம்மையார் திருவனந்தபுரத்திலுள்ள பாலராமபுரம் ஊரைச் சேர்ந்தவர். பெரும் செல்வந்தரும் கல்விமானுமாகிய வேலாயுதம் பிள்ளையின் ஒரே மகள். வேலாயுதம் பிள்ளை 'கம்பௌண்டராகப் பணி யாற்றியவர். ஆங்கிலம், தமிழ், மலையாள மொழிகளை நன்கறிந் தவர். தமிழிலே இராஜதந்தரம் என்ற நாவலை எழுதியுள்ளார். சிவகாமி அம்மையாரும் ஆங்கிலம், தமிழ், மலையாள மொழிகளில் பயிற்சியுடையவர். எனவே கல்வியின் அருமையை நன்கு அறிந் திருந்த அவர், தம் கணவரின் தமிழ்த் தொண்டுக்கு மிகவும் ஒத்தாசையாக இருந்தார். குடும்பப் பொறுப்பைத் தாமே ஏற்றுக் கொண்டு தம் கணவருக்கு அக்கவலையே இல்லாமல் அவரது தமிழ் ஆய்விற்கு பக்கபலமாக இருந்தார். வேலாயுதம் பிள்ளை தம் ஒரே பெண்ணின் குடும்பத்திற்கு உறுதுணையாக வாழ்ந்து வந்தார். இச்சூழல் பேராசிரியரின் ஆய்வுப் பணிகளுக்கு உர மிட்டது. ஒவ்வொரு ஆணின் வெற்றிக்கும் பின்னால் ஒரு பெண் இருக்கிறாள் என்ற உரை பேராசிரியரைப் பொறுத்தவரையில் உண்மையே. மனைவியின் ஊர் என்ற நிலையில்தான் அவருக்குத் திருவனந்தபுரத்தோடு தொடர்பு ஏற்பட்டது என்பதையும் இங்கு குறிப்பிட வேண்டும். இவ்வூர் வாழ்க்கையால் அவர் பெற்ற பலன்கள் பல. எனவே திருமண வாழ்க்கை பேராசிரியரைப் பொறுத்தவரையில் ஒரு வரப்பிரசாதம்.

## சட்டக் கல்வி

சட்டக் கல்வியில் எஃப்.எல். படிப்பைச் சென்னையிலும் பி.எல். படிப்பைத் திருவனந்தையிலும் கற்றார் பிள்ளையவர்கள். சென்னை சட்டக் கல்லூரியில் அவருக்கு நண்பர்களாக விளங்கியவர்கள் ஆர். கே. சண்முகம் செட்டியாரும், சுவாமிநாத பிள்ளையும் (சுவாமிநாத பிள்ளை பின்னர் திருவிதாங்கூரில் அரசாங்க வழக்கறிஞராகப் பணியாற்றினார்). மணமான இவர்கள் மூவரும் தம் இல்லறத் துணைவியரோடு சென்னையில் ஒரே வீட்டிலேயே குடியிருந்தனர்.

## திருவனந்தபுரத்தில் பேராசிரியர்

திருவனந்தபுரம் மகாராஜா சட்டக் கல்லூரியில் தம் (1913-14) பி. எல். படிப்பை முடித்தார். அவ்வாண்டிலேயே திருவனந்தபுரத்தில் உயர்நீதிமன்ற வழக்கறிஞராகவும் பதிவு செய்துகொண்டார். இங்கு 1922 வரையிலும் எட்டு ஆண்டுகள் வழக்கறிஞராகப் பணியாற்றினார். பேருக்குத்தான் வழக்கறிஞர் தொழில்; ஆனால் நீதிமன்றத்திற்குப் போக பேராசிரியருக்கு விருப்பமே இருந்ததில்லை. சிறுவயதில் பாம்பன் தவத்திரு குமர குருதாச சுவாமிகள், மறைமலையடிகள் முதலிய தமிழ்ப் பெரியாரிடம் பாடம் கேட்டதால் மொழியறிவும் ஆய்வு மனப்பான்மையும் அவருடன் வேரூன்றின. தம்மைப்போல இலக்கிய ஆர்வம்மிக்க நண்பர்களுடன் சேர்ந்துகொண்டு இலக்கியச் சர்ச்சை செய்வதில் தான் அவர் பொழுது பெரும்பாலும் கழிந்தது. அக்காலகட்டத்தில் அந்நகரில் பல தமிழன்பர்கள் அவருக்கு நண்பர்களாயினர். அவர்களுள் அப்போது நீதிபதியாக இருந்த கே. ஜி. சேஷையர் ஒருவர். அவர் தமிழாராய்ச்சியில் மிகுநத ஆர்வமுடையவர். இவர்தம் மருமகனார் கே. ஜி. சங்கரய்யர் நெருங்கிய நட்பும் பேராசிரியருக்குக் கிடைத்தது. இவர் பேராசிரியருடன் வழக்கறிஞராக உடன் பணியாற்றியவர். தமிழாராய்ச்சியிலும் சரித ஆராய்ச்சியிலும் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். இவரது தூண்டுதலால்தான் பேராசிரியர் தமது முதற் கட்டுரையான 13ஆம் புறப்பாட்டு பற்றிய கண்டனவுரையை எழுதினார். இதுவே முதல் ஆய்வுக் கட்டுரையாகும். மேலும் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, கெ. என். சிவராசபிள்ளை, கெ.என். குமரேச பிள்ளை, இசையரசு தி. இலக்குமண பிள்ளை, ஹரிஹர சாஸ்திரி, பண்டித முத்துசாமிப் பிள்ளை, பி. எஸ். நடராசப் பிள்ளை முதலி

யோரும், மலையாள அறிஞர்களான திவான்பகதூர் கோவிந்தப் பிள்ளையும், எம். சி. நாராயண பிள்ளையும் உற்ற நண்பர் களாயினர். கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அப்போது மகாராஜா பெண்கள் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியிலே தமிழாசிரியராக இருந்தார். கவிமணியுடன் சேர்ந்து சிறுவயதில் தாம் கற்றிருந்த சமஸ்கிருதப் படிப்பைத் தொடர்ந்தார்.

கெ. என். சிவராச பிள்ளை தத்துவ இயலில் பி. ஏ. பட்டம் பெற்றவர். வையாபுரிப் பிள்ளையின் (அத்தையின் பேரர்) உறவு முறையினர். காவல்துறையில் பணியாற்றிய அவர், அத் தொழிலை விட்டுவிட்டுப் பத்திரிகைத் துறையில் ஈடுபட்டவர். 'மலபார் குவார்ட்டர்லி ரெவியூ' என்ற பத்திரிகையின் ஆசிரியராக இருந்தார். நல்ல கவிஞருங்கூட. அவருடைய கவிதைகள் செந் தமிழ் இதழ்களில் வெளிவந்தன. இன்னும் வெளிவராத கவிதை களும் உள்ளன. பின்னர் சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த் துறைத் தலைவராகப் பணியாற்றினார். புறநானூற்றின் பழமை, Agastia in Tamil Land, Chronology of early Tamils, சில தமிழ்ச் சொற்களின் ஆராய்ச்சி முதலான பல ஆய்வு நூல் களை உருவாக்கியவர். இவர் தமையனார் கெ. என். குமரேச பிள்ளையும் கம்பராமாயணச் சொற்பொழிவாற்றுவதில் வல்லவர். பேராசிரியருக்கு இளமையிலேயே இசையோடு பாடும் திறமையும் கவிதைபாடும் ஆற்றலும் இருந்தது என்பதை முன்னரே குறிப் பிட்டோம். இந்த இசை ஆர்வம் தடைபடாதிருக்க இசையரசு இலட்சுமண பிள்ளை நட்பு பெருதவியாக அமைந்தது. பி. எஸ். நடராச பிள்ளை 'மனோன்மணியம்' சுந்தரனாரின் திருமகனார். தமிழ்ப்பற்று வாய்ந்தவர். பண்டித முத்துசாமி பிள்ளை 'தமிழன்' பத்திரிகையின் ஆசிரியர். ஹரிஹர சாஸ்திரி திருவிதாங்கூர் அரசாங்கத் தொன்னூல் நிலையத்தில் பணியாற்றி யவர். பேராசிரியருக்குத் தொன்னூல் நிலையத்தில் பல ஏட்டுச் சுவடிகளோடு (எ. கா. நவநீதப்பாட்டியல்) அறிமுகம் ஏற்படவும் இவருடைய நட்பு பேராசிரியருக்கு உதவியிருக்க வேண்டும். இக் காலத்தில் பேராசிரியர் லகுசித்தாந்த கௌமுதியை Cowel எழுதிய ஆங்கில மொழிபெயர்ப்பின் உதவியோடு தமிழில் மொழி பெயர்த்தார். இதற்கு முன்னுரையாக பாணினிய லகு தீபிகை என்ற கட்டுரையை எழுதிச் செந்தமிழில் வெளியிட்டார். இதற்குத் துணைபுரிந்தவர் ஹரிஹர சாஸ்திரியார் என்ற செய்தியை அக் கட்டுரையில் அடிக்குறிப்பாகத் தருகிறார் வையாபுரியார். திவான் பகதூர் கோவிந்தப்பிள்ளை திருக்குறளை மலையாளத்தில்

மொழிபெயர்த்த இருமொழி அறிஞர். திருவனந்தபுரம் உயர்நீதி மன்றத்தில் நீதிபதியாகப் பணிபுரிந்தவர்.

மேற்குறிப்பிட்ட இலக்கிய அறிஞர்கள் அனைவரும் பேராசிரிய ரோடு ஒத்த வயதுடையவர்களென்றோ, ஒரே தொழிலைச் சேர்ந்தவர்களென்றோ, ஒரே இனத்தினரென்றோ கூறமுடியாது. சிலர் வயதில் பெரியவர்கள்; சிலர் வழக்கறிஞர் தொழில் புரிந் தவர்கள்; சிலர் கல்லூரி ஆசிரியர்கள்; சிலர் நீதிபதிகள்; சிலர் பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டவர்கள். இசைத்துறை அறிஞர், பிறமொழி அறிஞர்கள் என பல்வேறு நிலையினர். இவர்கள் அனைவரையும் ஒன்றாக இணைத்தது இலக்கிய ஆர்வமும் மொழி யார்வமும்தான். இங்கு பேராசிரியரின் கூற்றைக் குறிப்பிடுவது சாலப்பொருத்தம்.

> ''எனது நட்பு பிராமணர் அல்லாதார் என்ற ஜாதி வேறு பாடுகளைக் கடந்தது, வடமொழி, தமிழ் என்ற வேறு பாடுகளைக் கருதாதது. பண்டிதர்கள், ஆங்கிலம் கற்ற தமிழர்கள் என்ற சிறு வரம்புகளை மதியாதது. சைவம், வைணவம் முதலிய மதவேறுபாடுகளைக் கனவிலும் நினையாதது. சங்ககாலத் தமிழ், இடைக்காலத் தமிழ், தற்காலத் தமிழ் என்றனவற்றில் ஏதேனும் ஒன்றில் அபிமானம் வைத்து அதையே கற்பது என்ற நியதியைக் கொள்ளாதது. அறிவு வளர்ச்சியும், தமிழுணர்வுப் பெருக்கமும் உண்மை நாட்டமும், நடுநிலையுமே என்னை ஊக்கிவந்தன''.
>
> (அகராதி நினைவுகள் : 3)

திருவனந்தபுரத்தின் மையத்தில் புத்தன்சந்தை எனும் இடத்தில் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை போன்றோரால் தமிழை யும் சைவத்தையும் வளர்க்க வேண்டுமென்ற நோக்கில் நிறுவப் பட்டது 'சைவப்பிரகாச சபை'. இங்குதான் ஞாயிறுதோறும் இந்த இலக்கிய அறிஞர்கள் ஒன்றுகூடி திருக்குறள் முதலான இலக்கியங்களை முறைப்படி ஆராய்ந்தனர். திருவள்ளுவர் மீதும், திருக்குறள் மீதும் பேராசிரியர் கொண்ட அளவிறந்த பற்று அவரது உரையிலேயே வெளிப்படக் காணலாம். திருவள்ளுவர் வாழ்ந்த காலச் சூழலை குறிப்பிடுகிறார்.

''பெருமக்களது அருந்தோற்றத்தால் விசேஷித்து விளங்கும் பிரகாசமின்றித் தமிழ்ச் சரித்திர மண்டலம் வறிதே இருந்த காலத்தில் வள்ளுவர் என்ற ஒளி தோன்றியது. சங்கப் புலவர்கள் என்று நாம் கருதும் நக்கீரர், கபிலர், மாங்குடி மருதனார் முதலியோர் ஒன்றுகூடிச் சிற்றொளி நல்கித் திகழ்ந்து வந்தனர். சிலப்பதிகாரம் இயற்றிய சேரர் பெருமானாகிய பெருநக்ஷத்திரம் இன்னும் விண்ணில் ஒளிரவில்லை. தண்ணிய அருளோடு மிளிரும் தேவார ஆசிரியர்களும் ஆழ்வாராதியர்களும் இன்னும் இன்னொளி நல்கவில்லை. சிந்தாமணியை உதவியருளிய திருத்தக்க தேவர் என்னும் செவ்விய நல்லொளி இன்னும் முகம் செய்து திகழவில்லை. திருத்தொண்டர் புராணம் என்னும் சைவ மெய்நூல் அருளிய சேக்கிழார் எனப்படும் விடிவெள்ளி இன்னும் அரும்பவில்லை. விண்ணையும் மண்ணையும் தன்னிடமாகக் கொண்டு தனது பேரொளிப் பெருவெள்ளத்தால் இருபேருலகையும் நெறி ஸ்ரூபமாக்கிய கம்பர் என்னும் கவிகுல பாஸ்கரன் இன்னும் உதயம் செய்யவில்லை. பேரொளி மண்டலங்கள் ஒன்றுமின்றிச் சிறுவெள்ளிகள் சிற்றொளி செய்து விளங்கிய தமிழ்ச் சரித்திர மண்டலத்தே நாம் இன்று போற்றித் தொழு கின்ற தெய்வ ஒளியாகிய திங்கள் உதயமாயிற்று'' என்று வருணிக்கிறார் (தமிழ்ச்சுடர் மணிகள் : 5.-52).

பேராசிரியர், சுப்பிரமணிய பாரதியாரைக் காணும் பேறு பெற்றதும் இங்கு வைத்துத்தான். 'சின்னஞ்சிறு கிளியே', 'ஊழிக்கூத்து' ஆகிய பாடல்களைப் பாரதியாரே பாடக் கேட்டு மகிழும் வாய்ப்பும் பெற்றார். அந்நிகழ்ச்சியை உடல் புல்லரிக்கும்படி விளக்குகிறார் பேராசிரியர். ''பின்னர் ஊழிக்கூத்துப் பாடலைப் பாடும்படி வேண்டினேன். இப்பொழுது நீண்டநேரம் அவர் கண்கள் மூடியிருந்தன. முகத்திலே ஒரு துடிதுடிப்பு, சரீரம் முழுவதிலும் ஒரு வேகம், 'வெடிபடு அண்டத்திடி பலதாளம் போட' என்ற சொற்கள் கம்பீரத்தோடு வெளிவந்தன. ஒவ்வொரு சொல்லும் ஒவ்வோர் அடியும் அவரது ஆத்மசக்தியினின்று பொருளும் ஆற்றலும் பெற்று எங்கள் மனக்கண்முன் கூத்தாடின; உலகம் தகர்வது, ஊழி முடிவது; ஒவ்வொன்றும் மனக்கண்முன் திகழ்வதுபோலவே இருந்தது. பாட்டின் பொருளோடு ஒன்றுபட்டு லயித்து அவர் பாடும்போது, அவர் கண்கள் சுழன்றன. கருவிழிகள் மேலேறி மறையத் தொடங்கின. 'ஊழிக் கூத்தில் அகப்பட்டுவிட்டோம்' என்ற பீதி எங்களுக்கும் உண்டாயிற்று. சங்கீதத்தின் ஆற்றலை நான் அன்று உணர்ந்ததுபோல் ஒரு நாளும் உணர்ந்ததில்லை'' (தமிழ்ச் சுடர் மணிகள் : 334).

இங்ஙனம் பெறற்கரிய நண்பர்கள் பலரது தொடர்பால் இவரது தமிழறிவு மேன்மேலும் வளர்ந்தது. 1918இல் திருவனந்தபுரம் சைவப் பிரகாச சபையின் மேலாண்மைப் பொறுப்பையும் பிள்ளையவர்கள் ஏற்று நடத்தினார்கள். இவருடைய தலைமையில் இலக்கிய இலக்கண ஆராய்ச்சிகள் தொடர்ந்து நடைபெற்றன.

திருவனந்தபுரத்தில் இருக்கும்போதுதான் இவர் பத்திரிகைகளில் முதன் முதல் எழுத ஆரம்பித்தார். முன்னரே குறிக்கப்பட்ட '13ஆம் புறப்பாட்டு உரை' என்ற கட்டுரை திரு. நாராயண ஐயங்கார் எழுதிய எதிருரைக்குக் கண்டன உரையாக எழுதப்பட்டது. இக்கட்டுரை இவரை அறிஞர் உலகிற்கு அறிமுகமாக்கி வைத்தது. தமிழ்நாடு மட்டுமன்றி யாழ்ப்பாணத்திலிருந்தும் புகழ் மாலைகள் வந்து குவிந்தன. தொடர்ந்து தொல்காப்பியரது சமயம் பற்றிச் சில கட்டுரைகளை எழுதி, அவர் ஒரு ஜைனர் என்பதைப் பிள்ளையவர்கள் நிறுவினார். இது அவருக்கு ஜைனர்களது மதிப்பைத் தேடித் தந்தது. பிள்ளையவர்கள் செந்தமிழிலும் தமிழர் நேசனிலும் பல ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதினார். இந்த ஆராய்ச்சிகளுக்கு அவரது பிறமொழிப் புலமை பெரிதும் துணை செய்தது.

இங்கு அவருடைய சுவடிப் பயிற்சியும் தொடர்ந்தது. திருவனந்தபுரம் அரண்மனை நூல் நிலையத்திலிருந்து கிடைத்த மிகப்பழைய கம்பராமாயணச் சுவடிகளை ஒப்பிட்டுப் பார்த்துப் பாட பேதங்களையும் குறித்தார். இலக்கியச் சொற்பொழிவுகளும் ஆற்றினார்.

அவருடைய முதல் ஆய்வுக் கட்டுரைக்கு திருவனந்தபுரம் களனாக அமைந்ததுபோலவே, முதல் பதிப்புப் பணியும் இங்குதான் நடைபெற்றது. 1922இல் 'மனோன்மணியம்' நாடக நூலைப் பதிப்பித்தார். இது அவரது பதிப்புப் பணிகளுள் முதலாவதும் முக்கியமானதும் ஆகும்.

பிற்காலத்தில், அவர் திருவிதாங்கூர் பல்கலைக்கழகத்தில் நடத்திய 'காவியகாலச் சொற்பொழிவின்' தொடக்கத்தில் அவரது தமிழாராய்ச்சி ஆர்வத்திற்குத் தோன்றாத் துணையாய் இருந்த இம்மாநகரத்தை நன்றியோடு குறிப்பிடுகிறார்.

''எனக்கு என்றும் மகிழ்ச்சி விளைத்து வரும் ஒரு தொடர்பு ஸர்வகலாசாலை நிலைநிற்கும் இந்நகரத்திற்கும் எனக்கும் உண்டு. அதனையும் இங்கே எடுத்துக்கூறும் கடப்பாடு உடையேன்... நான் ஊக்கத்தோடு தமிழாராய்ச்சி செய்யத் தொடங்கியதும் தமிழ் நூல்களைப் பதிப்பிடத் தொடங்கியதும் தமிழ் அறிஞர் உலகில் ஓர் இடம் பெற்றுக்கொள்ளத் தொடங்கியதும் இந்தத் திருவனந்தபுரத்தில்தான்''.

## மீண்டும் நெல்லையில்

திருவனந்தையில் இலக்கிய இன்பத்தில் மூழ்கியிருந்த பேராசிரியரை வக்கீல் தொழிலில் முழுமையாக ஈடுபடுமாறு செய்ய அவருடைய மாமனார் வேலாயுதம் பிள்ளை முயன்றார். இந்த இக்கட்டிலிருந்து தப்பிக்கப் பிள்ளையவர்களுக்குச் சாதகமான சூழ்நிலையும் வாய்த்தது. அவர்தம் பெற்றோர் தமது மூத்த மகனான அவரை மேலும் பிரிந்திருக்க விரும்பாமல் நெல்லையிலேயே வழக்கறிஞர் தொழிலை நடத்தும்படி அழைத்தனர். அதை ஏற்றுப் பிள்ளையவர்களும் குடும்பத்துடன் நெல்லைக்கு வந்தார். 1923இல் இங்கு வந்த இவர் 'பெயரளவிற்கு' வழக்கறிஞராகப் பணிபுரியலானார். ஆனால் இவருடைய பெரும் பொழுதும் தமிழ் நூல்களைக் கற்பதிலும் ஆராய்ச்சி செய்வதிலும் முக்கியமாகக் கம்பராமாயண ஆராய்ச்சியிலும் கழிந்தது. அவருடன் வீரராகவபுரம் எம். எஸ். சுப்பையா முதலியார், சக்ரபாணி நம்பியார், ஆதிமூர்த்தியா பிள்ளை ஆகியோரும் வண்ணாரப்பேட்டையில் கே. அனந்தராம ஐயங்கார், ஏ. வி. சுப்பிரமணிய ஐயர், சிதம்பர ராமலிங்கம் பிள்ளை, தமிழ்ப் பண்டிதர் வீரபாகு பிள்ளை, எஸ். முத்தையா பிள்ளை முதலியோரும் நட்பு கொண்டனர். எஸ். முத்தையா பிள்ளை திருநெல்வேலியில் புத்தகக் கடை வைத்திருந்தார். பின்னர் பிள்ளையவர்கள் பதிப்பித்த 'மேகவிடு தூது' நூலினை வெளியிட்டவர் திரு. முத்தையா பிள்ளை. எஃப். ஏ. வகுப்பு நண்பர்கள் நீலகண்ட சாஸ்திரி, வே. சாரநாதன் ஆகியோருடைய நட்பும் தொடர்ந்தது. இவர்கள் இருவரும் இந்துக் கல்லூரியில் பேராசிரியர்களாகப் பணியாற்றினர். இத்தோழமை தொடர்ந்தது. சென்னைப் பல்கலைக்கழகத்தில் பிள்ளையவர்கள் தமிழ்த்துறைக்கு தலைவராக இருந்தபோது, வரலாற்றுத் துறைக்கு நீலகண்ட சாஸ்திரி தலைவராக இருந்தார். நீலகண்ட சாஸ்திரிகளுடன் அவர் பலதுறை விவாதங்களை நடத்திய செய்தியைப் பேராசிரி

யரது நாட்குறிப்பு ஏடுகள் தருகின்றன. பிள்ளையவர்களைப் பற்றி நீலகண்ட சாஸ்திரியார் "என்னுடைய நினைவில் அவர்களிடமிருந்து நான் பெற்ற விளக்கங்களே மிகப்பல. அவர்கள் உதவி இல்லாதிருந்தால் தென்னிந்திய சரித்திரத்தில் நான் செய்ய முடிந்த சிறு ஆராய்ச்சியும்கூடக் கைகூடாதிருக்கும் என்றே எண்ணுகிறேன். இலக்கிய நூல்களைத் தவிர, கல்வெட்டுகளையும் செப்பேடுகளையும் சீர்தூக்கி ஆராய்வதிலும் அவர்கள் பேருதவி புரிந்துவந்தார்கள்" என்று குறிப்பிடுகிறார். வே. சாரநாதன் திருச்சி தேசியக் கல்லூரி முதல்வராக விளங்கிய காலத்தும் சென்னை வரும்போதெல்லாம் பேராசிரியரைக் கண்டு இலக்கிய கருத்துக்களை பரிமாறிக்கொள்ளும் வழக்கம் இருந்தது. அவரது அகால மரணம் பேராசிரியரின் நெஞ்சை உருக்கிய நிகழ்ச்சி. நெல்லையில் வ. வே. சு. ஐயருக்கும் இவருக்கும் நெருங்கிய நட்புண்டாயிற்று. வ. வே. சு. ஐயர் நடத்தி வந்த சேரன்மாதேவி குருகுலத்துக்குப் பிள்ளையவர்கள் அடிக்கடிச் செல்வது வழக்கம்.

வையாபுரிப்பிள்ளையும் அவரது நண்பர்களும் அங்கு நெல்லை கம்பர் கழகம் என்ற இலக்கியக் கழகத்தை நிறுவினர். கம்பராமாயண ஆராய்ச்சியே இக்கழகத்தின் முக்கிய நோக்கமாக இருந்தது. இக்கழகத்தின் ஆண்டு விழா ரா. இராகவையங்கார் தலைமையில் நடைபெற்றது. அவ்விழாவில் வையாபுரியார் கம்பன் திருநாள் என்ற கற்பனைக் கட்டுரையொன்றை வாசித்தளித்தார். இக்கட்டுரை செந்தமிழ் பத்திரிகையிலும் தமிழர் நேசனிலும் வெளிவந்தது.

## மீண்டும் சென்னையில்

சட்டம் பயின்று வழக்கறிஞராகப் பணிபுரிய முற்பட்டவரைத் தமிழ் ஆர்வமும் மொழிப்பற்றும் அந்தத் தொழிலிலே மனம் செலுத்த முடியாமல் செய்தன. அதற்கு ஏற்றாற்போல, சென்னைப் பல்கலைக்கழகத்தின் பேரகராதித் துறையில் பணி புரியும் வாய்ப்புக் கிடைத்தவுடன் அங்கு சென்று பதிப்பாசிரியராகப் பொறுப்பேற்றார். இப்பணியில் இவர் ஈடுபட முக்கியத் தூண்டுகோலாக அமைந்தவர் இளமைக்காலம் தொட்டே இவருடன் பயின்ற பெ. நா. அப்புசாமி ஐயர். சென்னையில் பெ. நா. அப்புஸ்வாமி ஐயர், சி. ஆர். நமச்சிவாய முதலியார், மு. இராகவையங்கார் முதலிய அறிஞர்கள் நட்பும் வளர்ந்தது. இவர்

பதிப்பாசிரியராக நியமனம் பெற்ற பொழுது முதல் தொகுதி மட்டும்தான் வெளிவரும் நிலையில் இருந்தது. இவர் பதவி யேற்றபின் பணியை விரைவுபடுத்தி எஞ்சிய ஐந்து தொகுதி களையும் பத்தாண்டுகளில் நிறைவு செய்தார்.

பதவியேற்ற உடனேயே அகராதி அமைப்பு முறை பற்றிய சிறு நூலினை எழுதினார். அகராதியில் சேர்க்கவேண்டிய சொற் களைத் தொகுக்கும் முயற்சியில் இலக்கிய, இலக்கண நூல்கள், கல்வெட்டுகள், அறிவியல் தொழில் துறை நூல்கள் முதலான வற்றை நுணுகி ஆராய்ந்தார். வட்டார வழக்குகளைக் கவிமணி போன்றோர் உதவியோடு தொகுத்தார்.

இக்கால கட்டத்தில் அகராதிக்கு உறுதுணையாக இருந்த நிகண்டு நூல்கள், வெளிவராத பழைய இலக்கண இலக்கியங்கள் ஆகியவற்றையும் தமது அகராதி வேலைக்கிடையே ஆராய்ந்து வெளியிட்டு வந்தார். இக்காலத்தில் 20 நூல்கள் பேராசிரியரால் பதிப்பிக்கப்பட்டன. நாமதீப நிகண்டு, அரும்பொருள் விளக்க நிகண்டு, பொதிகை நிகண்டு ஆகிய நிகண்டு நூல்களையும் தினகர வெண்பா, துகில் விடு தூது, திருக்குறுங்குடி அழகிய நம்பி உலா, முப்பந்தொட்டியுலா, இராசராச தேவர் உலா, நெல் விடு தூது, பூகோள விலாசம், இராமலிங்கேசர் பேரில் பண விடு தூது, தெய்வச் சிலையார் விறலி விடு தூது, மதுரைக் கோவை, குருகூர்ப்பள்ளு, திருப்பணி மாலைகள், திருமுருகாற்றுப்படை, அருள்முருகாற்றுப்படை, கம்பராமாயணம் (யுத்த காண்டம்), களவியற்காரிகை, தொல்காப்பியப் பொருளதிகாரப் பதிப்பு ஆகிய நூல்கள் பதிப்புப் பெற்றன. 1930இல் இவர் பல்வேறு கால கட்டங்களில் எழுதிய கட்டுரைகளைத் தொகுத்து ஆராய்ச்சி யுரைத் தொகுதியாக வெளியிட்டார்.

திராவிட மொழிகளிலேயே முதன் முதலில் பேரகராதியைத் தயாரித்த பெருமையுடையது தமிழ்மொழி. 1936இல் வெளிவந்த இதற்குப்பின் இன்றும்கூட பிற மொழிகளில் பேரகராதிப் பணி வெளியிடும் முயற்சி முற்றுப்பெறவில்லை. மேலும், தமிழிலும் இவ்வகராதி வெளிவந்து அரை நூற்றாண்டுகளுக்கு மேலாகி விட்டன. இந்த நீண்ட காலகட்டத்தில் ஏராளமான சொற்கள் தமிழிலே புதிது புதிதாகத் தோன்றிய வண்ணமுள்ளன. அவற்றை யெல்லாம் தரும் புதிய பேரகராதி ஒன்று இன்னும் தயாரிக்கப்பட வில்லை. சென்னைப் பல்கலைக்கழகம் பல ஆண்டுகளுக்கு

முன்னர் இப்பணியில் ஈடுபட்டது. இம்முயற்சி வெற்றி பெறாமல் போகவே, பேராசிரியரின் அகராதியையே மீண்டும் ஒளிப்படம் எடுத்து தன் பணியை முடித்துக் கொண்டது. தமிழ்ப் பல்கலைக் கழகத்திலும் பல ஆண்டுகளுக்கு முன் தொடங்கிய இப்பணி இன்னும் நிறைவு பெறவில்லை.

பேராசிரியர் காலம் போலன்றி, பலவகை வசதிகளும் கொண்ட இக்கணிப் பொறியுகத்தில் புதியதொரு பேரகராதியை இன்னும் தொகுக்க முடியவில்லை என்ற உண்மை பேராசிரியரின் மகத்தான பணியின், உழைப்பின் பரிமாணத்தை நமக்கு எடுத்துக்காட்டுகிறது.

தமிழ்ப் பேரகராதிப் பதிப்பாசிரியராக இருக்கும் காலத்தில் 1932இல் கலைமகள் இதழின் கௌரவப் பதிப்பாசிரியர்களுள் ஒருவராகத் தொண்டாற்றினார். திரு. மு. இராகவையங்காரும் வையாபுரியாரும் இலக்கியப் பகுதிக்குப் பொறுப்பேற்றிருந்தனர். இக்காலத்தில்தான் கபாலீசர் தோத்திரம் என்ற பழம் பாடல் சுவடியை அச்சேற்றினர். புத்தக வாழ்வு, பதிற்றுப்பத்தின் கடவுள் வாழ்த்து, அச்சு வித்தையின் வரலாறு, பதினாறாம் நூற்றாண்டில் தமிழ், எள்ளுத் திருடியின் கதை, மத்தளக்காரன், மொழி வளர்ச்சி பற்றித் தொல்காப்பியர் கண்ட கருத்துக்கள் முதலிய கட்டுரைகள் கலைமகளில் வெளிவந்தன.

சென்னைப் புத்தகாலயப் பிரச்சார சங்கம் இலக்கிய வளர்ச்சிக்கு ஊக்கமளிக்கும் நோக்கத்துடன் சென்னையில் ஒரு மாநாடு நடத்தியது. நூலாசிரியர், நூல் வெளியீட்டாளர், நூல் நிலையத்தினர் ஆகியோர் கலந்துகொண்ட இத் 'தமிழன்பர் மாநாடு' 1933 டிசம்பரில் நடைபெற்றது. இம்மாநாட்டு செயல் குழு உறுப்பினராகவும் பேராசிரியர் செயலாற்றினார்.

1935இல் டாக்டர் உ. வே. சாமிநாதையருக்கு எண்பதாம் ஆண்டு விழா சென்னைப் பல்கலைக்கழக மன்றத்தில் நடைபெற்றது. இவ்விழாவின் செயல்குழு உறுப்பினராகவும் பேராசிரியர் பணியாற்றினார். இங்கு முக்கியமான ஒரு செய்தியையும் தெளிவுபடுத்த விழைகிறேன். உ. வே. சாமிநாதையரிடம் அவர் கொண்டிருந்த பெருமதிப்பை சிறிதும் குறைக்கவில்லை. தம்மோடு ஆராய்ச்சிக் கருத்துக்களில் முரண்படுவோரிடம் அவர் தனிப்பட்ட முறையில் சினமோ வெறுப்போ அடைவதில்லை என்பதற்கு இது நல்ல எடுத்துக்காட்டு. தமிழ்ச் சுடர்மணிகள்

என்ற நூலிலே ஐயரவர்களைப் பற்றிக் கூறும்போது, ''ஐயர வர்கள் முயற்சியெடுத்துத் தொகுத்துவைக்காமல் போனால், நமது பழந்தமிழ்க் கருவூலங்களில் பலவற்றை நாம் இழந்து போக நேரிட்டிருக்கும். நமது நல்வினைப் பயனாகத்தான் ஐயரவர்கள் தோன்றினார்கள். தமிழிலக்கிய சரித்திரத்தின் காலப்பகுப்பில் ஐயரவர்கள் தொண்டு புரிந்து வந்த சுமார் ஐம்பது ஆண்டுகளையும் ''சாமிநாதையர் காலம்'' என்றுதான் பிற்காலத்தில் வரும் தமிழ்ச் சரித ஆசிரியர்கள் கூறுவார்கள்'' என்கிறார். அவரை மனதில் எண்ணும்போதே நெகிழ்ச்சி ஏற்படு கிறது பேராசிரியருக்கு. ''தமிழ்க்காதல் நிரம்பியமைந்த திரு மேனி; ஏட்டுச் சுவடிகள் இருக்கும் இடங்கட்கெல்லாம் ஓடியோடிச் சென்ற திருவடிகள்; ஏட்டுச் சுவடிகள் பெற்று ஆனந்தாதியத் தால் விதிர்விதிக்கும் திருக்கரங்கள்; தமிழின் பெருமையையும் தமிழின் தொன்மையையும் நினைத்த மாத்திரத்தில் உள்ளத்தே ஓங்கி வருகின்ற உவகையால் ஓங்கியமைந்த திருப்புயங்கள்; தமிழ் ஒளியும், தமிழ் அறிவும் ஒருங்கு விளங்குகின்ற திருநய னங்கள்; தமிழ்த் தொண்டு எனும் தவத் துறையிலே நெடுங்காலம் ஒழுகி முதிர்ந்த திருக்கோலம் இவை நம் கண்ணுக்கு விருந்தாய் அமைந்து நிற்கின்றன.''

இப்பணிகளும் பொறுப்புகளும் ஒருபுறமிருக்க, இலக்கிய விவாதங்களை நடத்துவதிலும் இலக்கிய நண்பர் வட்டங்களை விரிவாக்குவதிலும் பேராசிரியர் முனைப்புக் காட்டினார். ஒவ் வொரு வாரமும் சனி அல்லது ஞாயிற்றுக்கிழமையில் தமிழறிஞர் கள் ஒன்றுகூடி இலக்கியச் சர்ச்சை செய்யும் வழக்கம் இருந்தது. ஏறத்தாழ நான்கு ஆண்டுகள் இவ்வழக்கம் தொடர்ந்தது. இக்கூட்டத்தில் க. அ. நீலகண்ட சாஸ்திரி, கல்கி, துமிலன், தேவன், கி. வா. ஜகந்நாதன், டி. எல். வெங்கட்ராம ஐயர், ஆர். வி. சாஸ்திரி தம்பதிகள், வி. வி. சீனிவாச ஐயங்கார், எஸ்.ஜி. சீனிவாசாச்சாரி, நாரதர்சீனிவாசராவ், ஏ.என். சிவராமன் (தினமணியின் முன்னாள் ஆசிரியர்), பேராசிரியர் மணிக்கொடி கே. சீனிவாசன், சங்கு சுப்பிரமணியம், கே. சந்திரசேகரன் கே. சாவித்திரி அம்மாள், டாக்டர் சி. மீனாட்சி முதலியோர் கூட் டத்திற்கு தவறாமல் கலந்துகொள்ளும் அறிஞர்கள். ர. இராக வையங்கார், மு. இராகவையங்கார், பி. ஸ்ரீ., வே. சாரநாதன் முதலியோர் வாய்ப்பு கிடைக்கும்போது கூட்டத்தில் கலந்து கொள்வர்.

தமிழ்ப்பேரகராதி போன்ற பெரும் பணியை செய்வதற்கு மிகவும் முழுமையான உழைப்பு தேவை. அப்பெரும் பொறுப்பில் ஈடுபட்டிருக்கும்போது இருபது நூல்களைப் பதிப்பித்து அச்சேற்றியதோடு மேற்குறிப்பிட்ட பிற பொறுப்புகளையும் ஏற்றுத் திறம்பட நடத்தியமை அயரா உழைப்பு, தமிழார்வம், ஆராய்ச்சிப் போக்கு, செயலார்வம் ஆகியவற்றின் ஒட்டுமொத்த உருவமாகப் பேராசிரியரை நம் கண்முன் நிறுத்துகிறது.

## சென்னைப் பல்கலைக்கழகத் துறைத்தலைவர்

அகராதியை முடித்தவுடனேயே வையாபுரிப்பிள்ளை சென்னைப் பல்கலைக்கழகத் தமிழாராய்ச்சித் துறைத் தலைவராக நியமிக்கப் பெற்றார். இப்பணியில் பத்து ஆண்டுகள் பணியாற்றி 11-10-46 அன்று ஓய்வு பெற்றார். தமிழாராய்ச்சித் துறையிலிருந்து கொண்டே தமிழகராதியின் இணைப்புத் தொகுதியாகிய 7ஆவது தொகுதியையும் பதிப்பித்தார். 1938இல் இத்தொகுதி நிறைவு பெற்றது.

அக்காலத்தில் அரசியல், கல்வி, கலை முதலிய துறைகளில் சிறந்து விளங்கிய அறிஞர்களுக்குப் பலவகையான பட்டங்களைப் பிரிட்டிஷ்-இந்திய அரசாங்கம் ஆண்டுதோறும் வழங்கி வந்தது. ஆங்கிலப் புத்தாண்டு தினத்தன்று இவ்வகைப் பட்டங்கள் வழங்கப்பட்டன. தமிழ்ப் பேரகராதிப் பணிக்காக 1938இல் வையாபுரியாருக்கும், மு. இராகவையங்காருக்கும் 'ராவ்சாகிப்' பட்டம் அளித்து கௌரவித்தது.

பல மாணவர்கள் இவர் தலைமையில் ஆராய்ச்சி செய்ததும் இங்கு குறிப்பிடத்தக்கது. அவர்களுள் இலங்கையிலிருந்து வந்த மாணவர்களும் அடங்குவர்.

| | |
|---|---|
| ஏ. எஸ். நாராயணசாமி, பி.ஓ.எல். | — Treatment of Nature in Sangam Poetry |
| திருமதி ஜீவா செல்லப்பா, பி.ஏ. | — The Manners and Customs of Ancient Tamils |
| செல்வி கே. ஞானாம்பாள், எம்.ஏ.எம்.லிட். | — Domestic life in Ancient Tamilakam |

(இவர் பேராசிரியரின் ஆய்வுத் தலைமையில் எம்.லிட்., பட்டம் பெற்றவர். இவருடைய ஆய்வுத் தலைப்பு 'பழந்தமிழ் அறம்' (The Ethics of Ancient Tamils) என்பதாகும்.

ஜி. சுப்பிரமணிய பிள்ளை, எம்.ஏ.பி.எல். — A study of Allusions in Sangam Literature

(இவர் அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவராய் விளங்கியவர்)

மு. அருணாசலம், எம்.ஏ. — Development of popu'ar poetry in Tamil

ஏ. வி. மயில்வாகனம், பி.ஏ. (ஆனர்ஸ்) (இலங்கை) — Development of *Prose in Tamil*

கா. பொ. ரத்தினம், பி.ஓ.எல். பி.ஏ. (இலங்கை) — Development of Tamil prosody

ஏ. கிருஷ்ணமூர்த்தி, பி.ஓ.எல் — A study of Sangam vocabulary

மு. சண்முகம் பிள்ளை, பி.ஓ.எல் — Tolkappiyar's influence on Tamil Language & Li e-rature

ஏ. ஆனந்தா, பி.ஓ.எல்., (இலங்கை) — Life of the Ancient Tamils

எஸ். சேதுகாவலன், பி.ஓ.எல். (இலங்கை) — Principles and History of Literary Criticism

வித்வான் சண்முகம் பிள்ளை இக்காலம் முதல் பேராசிரியரின் உயிர் பிரியும் காலம்வரை 15 ஆண்டுகள் அவரோடு நீங்கா நிழல் போலிருந்து அவருடைய பதிப்புப் பணிகளிலெல்லாம் பெரிதும் உதவியிருக்கிறார். பேராசிரியரின் நூல்களின் முன்னுரையின் நிறைவுப் பகுதியில் "இப்பதிப்பை வெளியிடும் முயற்சியில் என்னோடு ஒத்துழைத்து அச்சுத் தாள்களைத் திருத்தி வேண்டும் துணை புரிந்தவர் வித்துவான் எம். சண்முகம் பிள்ளை ஆவார். அவருக்கு என் அன்புகலந்த ஆசி" என்ற வரிகள், வித்துவான் சண்முகம் பிள்ளையின்மீது பேராசிரியர் கொண்டிருந்த அன்பை

விளக்கப் போதுமானவையாகும். வித்துவான் சண்முகம் பிள்ளையும் இன்றளவும் தம் ஆசிரியரின் பாலுள்ள அன்பையும் நன்றியுணர்வையும் வெளிப்படுத்துவதுடன் பேராசிரியருக்குப் புகழ் சேர்க்கும் பணியையே தம் தலையாய தொண்டாகக் கொண்டு வாழ்ந்து வருகிறார். தமது பேரனுக்கு அவர் 'வையாபுரி' என்று பெயரிட்டிருப்பது பேராசிரியர்பால் அவர் கொண்ட அன்பை நன்கு வெளிப்படுத்துகிறது.

தமிழாராய்ச்சித் துறைத் தலைவராக இருந்தபோது இலக்கிய நூல்களைச் சுவடியின் துணையுடன் அச்சேற்றும் பணியையும் பேராசிரியர் தொடர்ந்தார். சென்னைப் பல்கலைக்கழகத்தின் வாயிலாகவும், சைவ சித்தாந்த மகாசமாஜம், மதுரைத் தமிழ்ச் சங்கம், மயிலைத் தமிழ்ச் சங்கம், சக்தி காரியாலயம் ஆகியவற்றின் வாயிலாகவும் பல நூல்களைப் பதிப்பித்தார். இக்காலத்தில் இவர் செய்த தமிழ்த் தொண்டுகளில் மிகவும் சிறந்தது பல்கலைக் கழக வெளியீடான புறத்திரட்டு. இதன் முன்னுரையால் பேராசிரியருடைய ஆராய்ச்சி வன்மையும் இப்பதிப்பால் அவருடைய பதிப்பாற்றலும் நன்கு விளங்கும். சங்க இலக்கியம், சீவக சிந்தாமணி ஆகிய நூல்கள் பதிப்புப் பெற்றன. பேராசிரியர் பதிப்பித்த பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் நான்கு. அவற்றுள் திரிகடுகமும் சிறுபஞ்சமூலமும், நான்மணிக்கடிகை, இன்னா நாற்பது ஆகிய மூன்றும் இக்காலத்திலே பதிப்பிக்கப் பெற்றன. கம்பராமாயணப் பாலகாண்டத்தின் முதல் ஏழு படலங்கள், கயாதரம், சாத்தூர் நொண்டி நாடகம், திருமுருகாற்றுப் படை (உரையாசிரியர் உரையுடன்) ஆகிய நூல்களும் பதிப்புப் பெற்றன.

சென்னையில் மயிலாப்பூரில் மயிலைத் தமிழ்ச் சங்கம் செயலாற்றி வந்தது. வெளிவராத நூல்களை ஆய்ந்து பதிப்பிப்பதே இச்சங்கத்தின் நோக்கம். இதன் செயலாளராகவும் உறுப்பினராகவும் வையாபுரியார் தொண்டாற்றினார். இதன் முதல் வெளியீடு (14-4-1943) பேராசிரியரின் பதிப்பான நவநீதப் பாட்டியல்.

இப்பதிப்புப் பணிகளுடன் தொல்காப்பியம் மற்றும் சங்க நூல்களுக்குச் சொல்லகராதிகள் தயாரிக்கும் பணியும் துறையிலே நடைபெற்றன. தமிழிலக்கிய வரலாற்றுக்குத் துணைசெய்யும் ஆதாரங்களைத் தொகுத்து நூலாசிரியர், நூல்நுவலும் பொருள், நூலின் காலம் ஆகியவற்றை அறுதியிட்டார். தமிழிலக்கிய

சரிதத்தில் சங்ககாலம், சிலப்பதிகாரம், மணிமேகலை, தமிழிலக்கிய சரிதத்தில் நீதிநூற் காலம், தமிழிலக்கிய சரிதத்தில் தத்துவ நூற் காலம் முதலிய ஐந்து சொற்பொழிவுகளைத் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றிய இக்காலத்தில் நிகழ்த்தினார்.

இலக்கியம் பற்றியும் இலக்கணம் பற்றியும் மொழி பற்றியும் கவிதைகள் முதலியன பற்றியும் பற்பல ஆராய்ச்சிக் கட்டுரைகளை அவ்வப்போது எழுதிப் பல பத்திரிகைகள் மூலமாக வெளியிட்டு வந்தார். பத்திரிகைகளுக்குச் சிறுகதையும் எழுதி வந்தார். இவற்றுள் சில கதைகள் 1944இல் பாலையா என்ற பெயரில் 'சிறுகதை மஞ்சரி' என்னும் தொகுப்பாக வெளிவந்தது. வானொலியிலும் இவர் அடிக்கடி உரை நிகழ்த்தியதுண்டு. Word Study and Chronology in Tamil Literature, Life in Ancient city Kaviripoompattinam, Manikkavasagar முதலிய தலைப்புகளில் ஆங்கில உரைகளையும் நிகழ்த்தினார்.

மேற்குறிப்பிட்ட இலக்கியப் பதிப்புகள் ஆராய்ச்சிப் பணிகளிலே மூழ்கியிருந்த அவரைக் கலைச்சொல் துறையும் பயன்படுத்திக்கொண்டது. தமிழ்நாட்டில் கலைச்சொல் குழு உறுப்பினராகப் (Technical Terms Committee) பணிபுரியும் வாய்ப்பும் பெற்றார். முன்னர் 1932இல் சென்னை அரசாங்கத்தினர் அறிவியல் தமிழ்ச் சொற்களை வெளியிட்டனர். அதில் பல கடின சொற்களும் வடசொற்களும் இருப்பதைக் கண்டித்துச் சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம் இக்குறைகளை நீக்கித் தமிழ்ச் சொற்களைக் கொண்ட கலைச்சொல் தொகுதி ஒன்றினைத் தயாரிக்கும் பணியில் ஈடுபட்டது. இத்தொகுதி 1936இல் வெளிவந்தது. இத்தொகுதியில்தான் பேராசிரியரின் கலைச்சொல் பணி தொடங்கியது. தொடர்ந்து 1941இல் சென்னைப் பொதுக் கல்வித்துறை இயக்குநர் கலைச்சொற்களைத் தொகுக்கும் நோக்கத்துடன் சீனிவாச சாஸ்திரிகள் தலைமையில் ஒரு குழுவினை அமைத்தார். வையாபுரியாரும் இக்குழுவில் உறுப்பினராக இருந்தார். ஞாயிற்றுக்கிழமை தோறும் இக்குழுவின் ஆய்வுக் கூட்டங்கள் நடைபெற்று வந்தன. வையாபுரியார் இக்குழுவில் ஏறத்தாழ ஐந்து ஆண்டு காலம் பணியாற்றினார்கள். இக்கலைச்சொல் தொகுதி 1947ஆம் ஆண்டில் வெளிவந்தது. இக்கலைச் சொற்களைப் பற்றி கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் திங்களிதழானத் தமிழ்ப் பொழில் (1946 : 22) "சீனிவாச சாஸ்திரியார் கமிட்டி தயாரித்த கலைச்சொல் பட்டியலில் பாதிக்குமேல் ஆங்கிலச்

சொற்களும் பெரும்பகுதி சமஸ்கிருதச் சொற்களும் சில பகுதி தமிழ்ச் சொற்களுமாக உள்ளன. ஆங்கிலப் பேராசிரியர் சுவாமி நாதய்யர், எஸ். வையாபுரிப்பிள்ளை ஆகியோர் இப்பட்டியலில் காணப்படும் பல தமிழ்ச் சொற்களைத் தயாரித்தனர் என்று தெரிய வருகிறது'' என்று கூறுகிறது.

இக்காலத்தில் பல மாநாடுகளுக்கும் தலைமைப் பொறுப் பேற்றுச் சிறப்பித்தார் பிள்ளையவர்கள். 1941ஆம் ஆண்டு சனவரித் திங்களில் மதுரை சேதுபதி உயர்நிலைப் பள்ளியில் நடைபெற்ற தமிழ் இலக்கிய மாநாட்டில் அவர் தலைமை தாங்கினார். சங்க காலம் தொட்டு அண்மைக்காலம் வரையிலும் தமிழை உயிர்த் தத்துவம் நிரம்பிய மொழியாக்கி அதனை ஊக்கி வந்த பல புதிய சக்திகளையும் மதுரைக்குரிய தமிழ்த் தொடர் பையும் மதுரை நகரின் இலக்கிய வரலாற்றையும் தமது தலைமை யுரையில் எடுத்துரைத்துள்ளார்கள். சென்னை தியாகராய நகரில் 1942இல் வள்ளுவர் குறடு என்றொரு இலக்கியக் கழகம் தோன்றியது. இக்கழகத்தாரால் 31-10-1943இல் நடத்தப் பெற்ற புறநானூற்று விழாவிற்குப் பிள்ளையவர்கள் தலைமை யேற்றார்கள். தமது தலைமையுரையில் புறநானூற்றின் அருமை பெருமைகளை மிகவும் அழகாக எடுத்துரைத்தார்கள். 1946ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் சைவ சித்தாந்த மகாசமாஜத் தின் நாற்பதாவது ஆண்டு விழாவிலே தலைமை தாங்கிய பேராசிரியர் தமது தலைமையுரையில் சைவ சித்தாந்த மகா சமாஜம் தோன்றி வளர்ந்த வரலாறு, தமக்கும் சமாஜத்திற்கு முரிய தொடர்புகள், கழகம் ஆற்றிய பணிகள், எதிர்காலத்தில் ஆற்ற வேண்டிய பணிகள் முதலியவை பற்றி விளக்கினார்.

அனைத்திந்தியப் பல்கலைக்கழகத்தின் ஆதரவில் அகில இந்தியக் கீழைக் கலைஞரின் மாநாடு (All India Oriental Conference) மூன்றாண்டுகளுக்கு ஒருமுறை நடைபெறும். திருவனந்தபுரம், காசி, ஐதராபாத், நாகபுரி, லஷ்மணபுரி ஆகிய இடங்களில் நடைபெற்ற மாநாடுகளில் கலந்துகொண்டு தமிழ் மொழி பற்றிய சொற்பொழிவுகளை ஆங்கிலத்தில் நிகழ்த்தினார். 1944இல் காசியில் நடைபெற்ற இம்மாநாட்டில் பங்குபெற்ற பேராசிரியர் அதன் மொழிப் பிரிவில் Word study and Chronology in Tamil literature என்பது பற்றி ஆய்வுரை நிகழ்த்தினார். இத்தலைமையுரைகள் பேராசிரியரின் ஆய்வு நுண்ணறிவைக்

காட்டுவதுடன் தலைமையுரை எவ்வாறு அமையவேண்டும் என்பதையும் எடுத்துக்காட்டுவனவாக விளங்கிய சிறப்பிற்குரியவை.

வையாபுரியார் தனது ஆராய்ச்சிப் பணிகளில் மட்டுமின்றிப் பிற பணிகளிலும் தமது கவனத்தைச் செலுத்தினார். சென்னைப் பல்கலைக்கழகம் பி.ஓ.எல்.,பி., (ஆனர்ஸ்), எம்.ஏ., முதலிய பட்டத் தேர்வுகளுக்கு அவரைத் தேர்வாளராக நியமித்தது. சென்னை அரசின் கல்வித்துறைப் பாடங்களைத் தேர்ந்தெடுக்கும் தேர்வுக் குழுவின் தலைவராகவும் பேராசிரியரை நியமித்தது. தொடக்கப்பள்ளி முதல் உயர்நிலைப் பள்ளி வரையில் தமிழ்ப் பாடங்கள், துணைப் பாடங்கள், இலக்கண நூல்கள் முதலியவற்றைத் தேர்வுசெய்யும் பணியில் கடமையாற்றிய அவர், பின்னர் இப்பணி தமது ஆராய்ச்சிக்கு இடையூறாக இருப்பதாகக் கருதி அதிலிருந்து தாமே விலகிக் கொண்டார். சென்னைப் பல்கலைக்கழகத்தில் மட்டுமன்றி, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும், திருவிதாங்கூர் பல்கலைக்கழகத்திலும் பாடத் திட்டக் குழு உறுப்பினராகச் செயலாற்றினார். மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பண்டிதர் தேர்வுக்குழு உறுப்பினராகவும் பணியாற்றினார். கல்கத்தா பல்கலைக்கழகத்தின் பொறியியல் நிறுவனமும் இவரைப் பயன்படுத்திக் கொண்டது.

மேற்குறிப்பிட்ட கல்விசார் நிலையங்கள் மட்டுமன்றி, திரைப் பட உலகமும் அவர் உதவியை நாடியது. திரைப்படத் தணிக்கைக் குழுவில் ஒருவராகச் செயலாற்றிய அவர் திருவனந்தபுரத்தில் தமிழ்த்துறைத் தலைவராகப் பொறுப்பேற்பதற்கு அங்கு செல்லும் வரையில், அதாவது மூன்று ஆண்டுகள் (1947-50) இக்குழுவில் இருந்தார்.

## ஓய்வுக்குப்பின்

சென்னைப் பல்கலைக்கழகத்தின் தமிழாராய்ச்சித் துறைத் தலைவராக இருந்த பிறகு 10-10-1946இல் ஓய்வு பெற்றபின் அவர் தொடர்ந்து சென்னையிலேயே வாழலானார். பல்கலைக் கழகத்தின் முறையான பணி ஓய்வுதான் பெற்றாரே ஒழிய தமிழ்ப் பணிகளிலிருந்து ஓய்வு பெறவில்லை. பல்கலைக்கழகப் பதிப்புகளிலும் சில காலம் உதவிகள் செய்தார். அவர் ஓய்வு பெற்ற ஒரு சில நாட்களில் (19-10-1946) அகில இந்திய கீழைக் கலைஞர் மாநாடு நடந்தது. அப்போதுதான் திராவிட மொழிகள்,

திராவிடரின் நாகரிகம் முதலியவற்றிற்காகப் புதிய துறை தொடங்கப்பெற்றது. இதற்கு முதன் முதலில் தலைமை தாங்கி நடத்திய பெருமை இவரையே சாரும். திராவிடப் பிரிவின் தலைமைப் பொறுப்பேற்று Research in Dravidian Language என்ற ஆங்கில பேருரையை நிகழ்த்தினார். இவ்வுரையைப் பின்னர் இதே தலைப்பில் தனி நூலாகவும் வெளியிட்டார். இந் நூல் திராவிட மொழிகளின் ஆராய்ச்சி எனத் தமிழிலும் பின்னர் வெளிவந்தது. 1951இல் இம்மாநாடு லக்ஷ்மணபுரியில் நடை பெற்றபோது, அங்கும் திராவிடப் பிரிவின் தலைமைப் பொறுப் பேற்று 'திராவிட மொழியாராய்ச்சி' பற்றித் தொடர்ந்து உரை யாற்றினார்.

பல்கலைக்கழகப் பணி ஓய்வு பெற்றபின் தாம் அதுகாறும் எழுதிப் பத்திரிகைகளில் வெளிவந்திருந்த ஆய்வுக் கட்டுரைகள், கதைகள் முதலியவற்றை எல்லாம் நூல் வடிவில் தொகுத்து வெளியிடத் தொடங்கினார். இம்முயற்சியில் இலக்கியச் சிந்தனைகள், தமிழின் மறுமலர்ச்சி, சிறுகதை மஞ்சரி, தமிழர் பண்பாடு, இலக்கிய உதயம் (இரு பகுதிகள்), இலக்கிய தீபம், தமிழ்ச் சுடர் மணிகள் முதலிய பல நூல்கள் வெளிவந்தன.

இதனிடையில் இந்திய வரலாற்றுக் கழகத் (Indian History Congress) தின் வேண்டுகோளுக்கிணங்க தமிழிலக்கிய வரலாற்றைப் பகுதி பகுதியாக எழுதும் பணியை ஏற்றுக் கொண்டார். இவ்வரிசையில் கி.பி. 825 வரையுள்ள வரலாற்றினை எழுதினார். இந்நூலினை அவரது மறைவிற்குப்பின் History of Tamil Language & Literature என்ற பெயரால் என்.சி.பி.எச். வெளியிட்டது.

திருவிதாங்கூர் பல்கலைக்கழகத்தின் (இன்றைய கேரளப் பல்கலைக்கழகம்) அழைப்பிற்கிணங்க ஜூன் 21 முதல் 29 வரை அங்கு சென்று தமிழிலக்கிய சரிதத்தில் காவிய காலம் பற்றி ஆறு சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். இது ஒரு விரிவான இலக்கிய சரிதம். தமிழ்க் காவியங்கள் பலவற்றின் காலம் இலக்கியச் சான்றுகளினாலும் வரலாற்றுச் சான்றுகளினாலும் துணியப் பட்டன.

கம்பராமாயணத்திற்கு நல்ல பதிப்பு வெளியிடும் வேட்கை கொண்டவர் பேராசிரியர். அத்தகைய பதிப்பினை வெளிக்

கொணரப் பல முயற்சிகளும் அவரால் எடுக்கப்பட்டன. முன்னர் சென்னையில் பல்கலைக்கழகப் பேரகராதிப் பதிப்பில் ஈடுபட்டிருந்த காலத்தும் கம்பராமாயண யுத்தகாண்டமும் (சில பகுதிகள்) பாலகாண்டமும் ஏற்கனவே அவரால் பதிப்புப் பெற்றன. திரு. ஆர்.கே. சண்முகம் செட்டியார் (அண்ணாமலைப் பல்கலைக்கழக அந்நாள் துணைவேந்தர்) கம்பராமாயணப் பதிப்பு முயற்சியில் ஆர்வம் காட்டினார். அப்போது பேராசிரியர் பணி ஓய்வு பெற்றிருந்த நிலை. எனவே பிள்ளையவர்களும், பேராசிரியர் ஸ்ரீநிவாசராகவனும், பி. ஸ்ரீ. ஆச்சாரியாவும் கூட்டாகச் சேர்ந்து இம்முயற்சியில் ஈடுபட்டனர். ஆனால் இம்முயற்சி வெற்றி பெறவில்லை. அடுத்து, கம்பன் கழகத்தைச் சார்ந்த கம்பனடிப்பொடி சா. கணேசன் கம்பராமாயணம் பதிப்புப் பற்றிப் பிள்ளையவர்களைக் கலந்தாலோசித்து முயற்சிகள் எடுத்தார். அவ்வாண்டு நடைபெற்ற கம்பன் விழாவிலே பேராசிரியர் தலைமையுரை நிகழ்த்தினார். அவ்விழாவில் வையாபுரியார் நிகழ்த்திய இவ்வுரை கம்பன் ஆராய்ச்சிப் பதிப்பு என்ற தலைப்பில் வெளியிடப்பெற்றது. அந்நூலில் வையாபுரியாரைக் 'கம்பன் கழகத் தலைமைப் பதிப்பாசிரியர்' என்றே குறிப்பிட்டிருந்தனர். இவ்வாண்டிலேயே திரு. வை. கோவிந்தன் கம்பராமாயண வெளியீட்டிற்காகப் பிள்ளையவர்களுடன் ஒப்பந்தம் செய்துகொண்டார். இம்முயற்சியும் வீணாயிற்று.

கம்பனிடத்திலே மிகுந்த ஈடுபாடு கொண்டவர் வையாபுரியார். கம்பராமாயணத்திலே தோய்ந்து தோய்ந்து கம்பராழ்வாராகவே மாறிவிட்டவர். கம்பராமாயணம் அரங்கேற்றப்பட்ட நாளைக் கற்பனையில் எண்ணி மகிழ்கிறார் பேராசிரியர். கம்பன் நூலரங்கேற்றம் பற்றி அவர் எழுதிய உரைநடை இலக்கிய நயம் செறிந்து பெரிதும் இன்பம் பயப்பதாக அமைந்துள்ளது.

கம்பராமாயணம் அரங்கேற்றப்பட்ட நாளைக் கற்பனையில் எண்ணி மகிழ்கிறார் பேராசிரியர். "ஸ்ரீரங்கநாதரது திருச்சந்நிதியே அரங்கேற்றத்திற்குரிய இடமாயமைந்தது. சடையப்ப வள்ளலாரால் அழைக்கப்பெற்ற தமிழ்நாட்டுப் புலவர் சிகாமணிகளும் பிரபு சிகாமணிகளும் அரங்கேற்று மண்டபத்தில் வரன் முறையே வீற்றிருந்தனர். பக்தர் குழாங்கள் பள்ளத்துப் பாயும் நன்னீர்போல நானா திசைகளினின்றும் வந்து சூழ்ந்தனர். பண்டிதர்களும் பாமரர்களும் இடம் பெறாது மிடைந்து நெருக்கினர். மண்டபத்தின் அகத்தும் புறத்தும் புடைசுற்றித் தமிழ்

நன்மக்கள் திரண்டு கூடினர். அதன் நடுவே சிறந்து உயரிய பீடத்தின்மீது நம் கம்பர் பெருமான் எழுந்தருளியிருந்தனர். அவரது திருமுகத்தே பேரறிவும் ஆழ்ந்த சாந்தியும் பெருங் கவித்துவச் சத்தியும் நர்த்தனம் புரிகின்றன. அவரது நயனங்கள் ஆழ்ந்தகன்று உள்ளமனைத்தையும் ஒருங்கு தேற்றி விளங்கு கின்றன. நோக்குவோரையெல்லாம் வசீகரித்தமைகின்றன. அன்பு அலையெறிந்து படர்கின்றது. அறிவு கூர்ந்து விளங்கு வதனையொப்ப அவரது நாசியும் நீண்டு கூர்த்திருக்கின்றது. அவரது உதடுகள் இளநகையரும்பி விகசிக்கின்றன. அகன்ற மார்பும் திரண்ட புயமும் பேரழகு பயக்கின்றன. அவரது தடக்கைகள் தாள்களைத் தொட்டு நீண்டிருக்கின்றன. அவரது திருமேனி முழுவதும் தெய்வ ஒளி பரந்து சுடர்கின்றது. இப் புலவர் பெருமானையடுத்து யாழினுமினிய பேரன்பினராகிய சடையப்பவள்ளல் வீற்றிருக்கின்றார். கருணையின் நிலையம்; கவிஞரின் புகலிடம்; தமிழ்நாட்டுப் புலவர்கள் பலகாலமாக ஈட்டி வந்த புண்ணியம் அனைத்தும் ஒருங்கு திரண்டு வடிவெடுத்து வந்தாற்போன்று அமைந்திருக்கின்றனர். அகக்கண் கொண்டு நுனித்து நோக்குவோமாயின் வேறுசில அற்புதக் காட்சிகளும் காணலாகும். தெய்வ கணங்கள் களிசிறந்து குலவுகின்றன. பாரததேவி எல்லையற்ற ஆனந்தத்துடன் விளங்குகின்றாள். அவளது திருமுக மண்டலத்தைச் சுற்றியிலகும் சோபாவ லயத்தினூடே உலகத்தினின்றும் பொங்கிவரும் களிப்பின் சிற்றருவி மெல்லென வீழ்ந்து ஒழுகுகின்றது. இத்தேவியை அடுத்துத் தமிழன்னை அழகு சிறந்து ஒளிர்கின்றாள். அவளது திருமுடிமீது நூதனமாயமைக்கப் பெற்றதும் விலையற்ற ரத்தினங் களால் இழைக்கப்பட்டதுமான கிரீடமொன்று குளிர்ந்த ஒளி பரப்பி நிலவுகின்றது. அவளது செந்தாமரைக் கண்கள் நில வெறித்து மிளிர்கின்றன. திருமேனி முழுவதும் அன்பின் செழு மையால் பொடித்துத் துடிக்கின்றது. ரிஷிகணங்கள் ஒருபால் குழுமியிருந்தனர். அவருள்ளே வால்மீகியும் வள்ளுவரும் தலைமை தோன்ற விளங்குகின்றனர். ஆதிகவியாகிய மஹரிஷி யின் சிரத்தின்மீது சடைமாமகுடம் இலங்குகின்றது. இராமகதாம் ருதத்தை உலகிற்கருளிய அவரது தெய்வத் திருவதரத்தின் கீழாக முதுமையாற் பஞ்செனை வெளுத்துத் தோன்றும் தாடி நீண்டு அடர்ந்து பொலிகின்றது. அவரது ஆழ்ந்து தெளிந்த கண்களிலே கவித்வவொளி இன்னும் நிரம்பிப் பிரகாசிக்கின்றது. மழித்த சிரமுடையவராய் சாந்தமூர்த்தியாய் அமர்ந்திருக்கின்றார்

வள்ளுவப் பெருந்தகையார். பேரறிவும் பேரருளும் அவர் கண்களில் கனிந்து இலங்குகின்றன. தமிழ்த்தாய் வயிற்றில் தம்மோடு உடன்பிறந்த கவிஞர் பெருந்தகையார் மீது அவரது அளவுகடந்த காதல் படர்ந்து செல்கின்றது. அவரது தூசிலா திருமனத்தே இன்று சிறிது கர்வம் இடம் பெற்றிருப்பதுபோலத் தோன்றுகிறது.

அரங்கநாதன் சந்நிதியில் இத்துணையனவாகச் சிறந்த திருக்கூட்டம் என்றும் இருந்ததே இல்லையெனலாம். யாண்டும் கண்கள்! யாண்டும் செவிகள்! அனைவரும் ஏகாக்ர சித்தராய்க் கம்பர் பெருமானை நோக்கிய வண்ணமாயிருக்கின்றனர். 'ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள அளப்பரும் கரணங்கள் நான்கும் சிந்தையே யாக' என்ற அருமைத் திருவாக்கு எத்துணையுண்மையுடையதென இன்று ஒருவாறு அறியலாகும். குறித்த அமையம் நெருங்கிற்று. உலகமனைத்தையும் ஆக்கியளித்துத் துடைத்தலையே தனது விளையாட்டாகவுடைய பரம்பொருளை நெஞ்சுற வழுத்திக் கம்பர் பெருமான் தமது இதிஹாசத்தைப் பாடி அரங்கேற்றலாயினர். உள்ளத்தை உருக்கியுருவரச் செய்ததுபோலத் தோன்றிய கவிஞர் பெருந்தகையின் கம்பீரத்தொனி மண்டபம் முழுவதும் பரந்து சென்றது. கேட்போர் இதயத்தினின்றும் எதிரொலி கிளர்ந்தது; இராமாயணமாகிய அமுத சரிதத்திலே ஆண்டிருந்தோர் தம் மனங்கள் லயித்து மயங்கின. (தமிழ்ச்சுடர் மணிகள் : 149-51)

கம்பனை நல்லமுறையில் வெளிக்கொணர வேண்டும் என்று மிக ஆர்வத்தோடு பலமுறை முயற்சி எடுத்தபோதும் அவையாவும் விழலுக்கு இறைத்த நீராகப் போனது தமிழ் மக்களின் தவக் குறையேயாகும்.

## *மீண்டும் திருவனந்தையில்*

திருவனந்தபுரத்தில் திருவிதாங்கூர் பல்கலைக்கழகத்தில் பேராசிரியராக இருந்த மு. இராகவையங்கார் 1951இல் ஓய்வு பெற்றபோது, பல்கலைக்கழகத்தார் பிள்ளையவர்களை அப்பதவிக்கு விரும்பியழைத்தனர். மூன்றாண்டுகள் அப்பதவியிலிருக்க ஒப்புக்கொண்டு அப்பதவியை மேற்கொண்டார். இங்கு பணியாற்றிய காலத்தில் சங்க இலக்கியங்களுக்குச் சொல்லடைவு செய்யும் பணியில் ஆர்வம் காட்டினார். அங்கு அவரது தலைமையில் ஆய்வு மாணவராகப் பணியாற்றியவர் டாக்டர் வ.அய். சுப்பிரமணியம் (தமிழ்ப் பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர்). டாக்டர் வ. அய். சுப்பிரமணியம், டாக்டர்

ச. வே. சுப்பிரமணியம், அமரர் டாக்டர் மா. இளையபெருமாள் முதலியோர் புறநானூறு, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு முதலிய சங்க நூல்களுக்குச் சொல்லடைவு தயாரித்தனர். அங்கிருந்தபோது தமது நூற்பதிப்பு வேலைகளையும் கவனித்து வந்தார். இலக்கிய மணிமாலை வெளிவந்தது.

இங்கு பணியாற்றிய காலத்தில் காரைக்குடி கம்பன் கழக ஆண்டுவிழாவிலும் தலைமையேற்றார். அவ்விழாவில் கம்பன் ஆராய்ச்சிப் பதிப்பு வெளியிடப்பெற்றது. இக்காலத்தில் அங்கு மலையாள லெக்சிகன் பணி சூரநாடு குஞ்ஞன் பிள்ளையவர்களின் தலைமையில் தொடங்கப்பெற்றது. தமிழ்ப் பேரகராதிப் பதிப்பாசிரியராகத் தமது திறமையை வெளிப்படுத்திய பிள்ளையவர்களை மலையாள அகராதியினரும் பயன்படுத்த விழைந்தனர். பேராசிரியரும் பதிப்புக் குழு உறுப்பினராக இருந்து லெக்சிகன் அடிப்படைத் திட்டத்தை அமைக்க உதவினார்.

1953இல் திருவனந்தைத் தமிழ்ச் சங்கத்தின் பொறுப்பேற்றுப் பணிகள் பல புரிந்ததும் குறிப்பிடத்தக்கது. 1954இல் பேராசிரியர் பணியிலிருந்து ஓய்வு பெற்றார். திருவனந்தபுரத்திலிருந்து புறப்பட்டபோது அவ்வூர்த் தமிழர்கள் பேராசிரியருக்குப் பொன்னாடை போர்த்திப் பாராட்டு விழா நடத்தியது இங்கு குறிப்பிடத்தக்கது. அவர்கள் ஒரு வெள்ளிப் பேழையில் பிரிவுபசாரப் பத்திரமும் வைத்து அளித்தனர்.

> ''இன்று கவிபாடித் தங்களைப் போற்றக் கவிமணி இல்லை. தங்கள் பெருமையை இசையில் மீட்டி இங்கு பாட இசைச் செல்வர் இல்லை. தங்கள் ஆராய்ச்சித் திறனைக் கட்டுரைகளால் சிறப்பிப்பதற்கு இங்கே சிவராஜன் இல்லை. அன்பு கலந்த எங்கள் புன்சொற்களையே பாராட்டுரையாக ஏற்றருள வேண்டும் என்ற வேண்டுகோளும் இருந்தது.''

கவிமணி அவர்களுடன் பேராசிரியருக்கு திருவனந்தபுரத்தில் அவர் பி.எல். படிக்கும்போது ஏற்பட்ட தொடர்பு கவிமணியின் கடைசிக் காலம்வரை பசுமையாக நீடித்தது. பிள்ளையவர்களிடம் பெருமதிப்பு கொண்டவர் கவிமணி. தமது கவிதை நூல்களையெல்லாம் பேராசிரியரது முன்னுரை அழகு செய்யவேண்டும் என்ற பெருவிருப்பு கொண்டவர். தம்மைவிட 15 வயது இளையராக வையாபுரியார் இருந்தபோதும் அவரை மிகவும்

போற்றி மதித்தார் கவிமணி. மேலும் பேராசிரியர் சென்னையில் வசித்த காலத்தும் தம் கவிதையை பேராசிரியருக்கு அனுப்பி வைத்து அவர்கள் வேண்டிய திருத்தம் செய்து ஒப்புதல் அளித்த பின்னரே அச்சேற்றுவார். இதனை வித்வான் சண்முகம் பிள்ளை "கவிமணி தாம் பாடிய பாடல்களில் பாடபேதம் போலச் சில இடங்களில் மாற்றுச் சொற்களையும் குறித்திருப்பார். அவற்றைத் தேர்ந்து முடிவு செய்யும் பொறுப்பைப் பேராசிரியர் ஏற்று வந்தார்" என்று தமது நூலில் குறிப்பிடுகிறார். பேராசிரியர் திருவனந்தபுரத்தில் வசித்தபோது இயன்றபோதெல்லாம் புத்தேரி சென்று அவரைச் சந்திப்பது வழக்கம். பேராசிரியரும் அப்போது நீரிழிவு நோயினால் மிகவும் உடல் நலிவுற்றுதானிருந் தார். அவ்வமயம் திருவனந்தபுரம் வானொலி நிலையத்தார் பேராசிரியரையும் அழைத்துக்கொண்டு புத்தேரி சென்று பேராசிரியர் கவிமணியைப் பேட்டி காணுவதுபோல் நிகழ்ச்சி ஒலிப்பதிவு செய்தனர். இந்த ஒலிப்பதிவு நாடா இன்றும் வானொலி நிலையத்தாரால் பாதுகாக்கப்பட்டு வருகிறது. மற்றொரு சுவையான நிகழ்ச்சி. கவிமணி தான் சந்தித்த பழகிய பல பெரியார்கள் மீதும் நண்பர்கள் மீதும் பல கவிதைகளை இயற்றியவர். ஆனால் தமது நெருங்கிய நண்பரான வையாபுரி யாரைப் பற்றியோ ஒரு கவிதைகூட எழுதவில்லை. ஒரு அன்பர் இதுகுறித்து கவிமணியிடம்கேட்டபோது, "வையாபுரி வேறு; நான் வேறு அல்ல. அவனைப் புகழ்ந்து கவிதை எழுதுவது என்னைப் பற்றி நானே கவிதை எழுதுவதற்கு ஒப்பாகும்" என்று கருத்து தெரிவித்தாராம் நெஞ்சை உருக்கும் பதில். கவிமணியவர்கள் இயற்கை எய்தியபோது, தம் உடல்நிலை மிகவும் பாதிக்கப் பட்டிருந்தபோதும், பேராசிரியர் அதைப்பற்றிக் கவலைப்படாது கவிமணியின் ஊராகிய புத்தேரிக்குச் சென்று இடுகாட்டில் ஒரு இரங்கல் கூட்ட உரையும் நிகழ்த்தினார். அவர் தம் மறைவு பேராசிரியரை மிகவும் பாதித்த ஒரு நிகழ்ச்சி. 'கம்பன் காவியம்' நூலை அவர் கவிமணிக்கு உரிமையாக்கியதும் குறிப்பிடத்தக்கது. அதே ஆண்டில்தான் தம் உயிருக்குயிரான மற்றொரு நண்பரை யும் இழந்தார் பேராசிரியர். அவர் ரசிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார். டி. கே.சியின் கம்பர் தரும் இராமாயணத்தின் பால காண்டமும் அயோத்தியா காண்டமும் அவரது ஊரான குற்றா லத்தில் நடைபெற்றது. அவ்விழாவிலே பேராசிரியரும் கலந்து கொண்டார். டி,கே.சி.யின் பதிப்பு முறையும், கம்பன் கவிதைகளை உரசிப்பார்த்து முடிவுசெய்யும் முறையும் பேராசிரியருக்கு ஏற்

புடையதல்ல. அவ்வமயம் ஹிந்து பத்திரிகை மேற்குறிப்பிட்ட நூல்களுக்கான மதிப்புரையைப் பேராசிரியரிடம் வேண்டியது. பேராசிரியரும் நட்பு என்ற விருப்புணர்ச்சிக்கு அப்பாற்பட்டு, தமிழ்த் தொண்டைத் தலைமையானதாகக் கொண்டு தம் கருத்தை நடுநிலையில் நின்று ஆராய்ச்சியாளர் என்ற முறையில் வெளிப் படுத்தினார். இம்மதிப்புரை வெளிவந்த ஒருசில நாள்களில் டி.கே.சி. மறைந்தார் என்ற துயரச் செய்தி கேட்டதும் பேராசிரி யருக்கு ஏற்பட்ட மனத் துயருக்கு அளவேயில்லை. அப்போது அவருக்கு ஏற்பட்ட உணர்ச்சியை 'என் தந்தையார்' என்ற நூலிலே திருமதி தங்கம்மாள் எடுத்துரைத்துள்ளார்கள்.

## சென்னையில் இறுதிநாள்கள்

1954-இல் பேராசிரியர் சென்னை காந்தி நகரிலுள்ள தமது இல்லத்திற்குத் திரும்பினார்கள். 1955-இல் சென்னைத் தமிழ் எழுத்தாளர் சங்கம் பிள்ளையவர்களின் இலக்கியச் சேவையைப் பாராட்டிக் கௌரவித்தது. அதே நாளில் மு. ராகவையங்காரும் பாராட்டு பெற்றார். அந்நாளைய ஆளுநர் பிரகாசா அவர்கள் இருவருக்கும் கேடயம் பரிசு வழங்கினார். பிள்ளையவர்களின் கட்டுரைத் தொகுதியாகிய கம்பன் காவியமும் அதே மகாநாட்டில் அரங்கேற்றப்பட்டது. தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், கி. வா. ஜகந்நாதன், பெ. நா. அப்புசாமி ஐயர், ம. பொ. சிவ ஞானம் ஆகியோர் இப்பாராட்டு விழாவில் கலந்துகொண்டனர்.

இக்காலத்தில், தினமணிக் கதிரில் 'இலக்கியமண்டபம்' எனும் தலைப்பின் கீழ் பிள்ளையவர்கள் தொடர்ச்சியாகப் பல கட்டுரை கள் எழுதியிருக்கிறார். 'பண்டைத் தமிழ்நாடும் சமயமும்', 'பக்தி வெள்ளத்தின் விளைவு', 'அவதாரங்களும் தென்னாட்டுத் தொடர்பும்', 'ராதாவும் கிருஷ்ணனும்', 'சொல்லின் ஒலி வடிவும் வரி வடிவும்' 'கற்றலின் பயன்' முதலிய கட்டுரைகள் இவற்றுள் குறிப்பிடத்தக்கன. பல நூல்களுக்குத் தினமணிக் கதிரில் மதிப்புரைகளும் எழுதி வந்தார்.

## பேராசிரியர் மறைவு

பல காலமாகவே நீரிழிவு நோயாலும், இரத்தக் கொதிப்பா லும் உடல் நலிவும் நோய்க் கொடுமையும் இருந்தாலும் அவர் கடைசி மூச்சு பிரியும் வரையிலும் தமிழ் ஆராய்ச்சியை மறக்கவோ

யில்லை. மர்ரே எஸ். ராஜம் அவர்களின் வேண்டுகோளை ஏற்று திவ்யப் பிரபந்தத்திற்கு மக்கள் பதிப்பினை வெளியிடும் பணியைத் தமது இறுதிக் காலத்தில் மேற்கொண்டிருந்தார். ஆனால் முதலாயிரம் மட்டுமே வெளிவந்தது. மற்றமூன்று ஆயிரங்களையும் வெளியிடுவதற்கு முன் அவர் 17-2-1956 அன்று தமது அறுபத்து ஐந்தாவது வயதில் இறைவனடி சேர்ந்தார்.

## நிலையான சின்னங்கள்

பேராசிரியர் அவர்கள் தம்முடைய ஆராய்ச்சியின் பொருட்டுப் பலகாலம் முயன்று பெற்ற ஏட்டுச் சுவடிகள், அரிய பல நூல்கள், ஆங்கிலம், ஜெர்மன், வடமொழி முதலான பிறமொழி நூல்கள் முதலியன அவரது நூல் நிலையத்தில் சேர்த்து வைக்கப்பெற்றிருந்தன. அவற்றையெல்லாம் அவர்கள் காலத்துக்குப்பின் கல்கத்தாவிலுள்ள தேசிய நூலகத்திற்கு அவர்தம் சந்ததியினர் நன்கொடையாகத் தந்தனர். இத்தேசிய நூலகத்தில் உள்ள தமிழ்ச் சுவடிகள் அனைத்தும் பிள்ளையவர்களால் தொகுக்கப்பட்டவையே. இவையாவும் அவர்தம் பெயரால் அங்கு தனிப்பட வைத்துப் போற்றப்பட்டு வருகின்றன. எனவே தேசிய நூலகத்தில் கல்விச் சுடராக அவர் திகழ்கின்றார் என்று சொல்லலாம். அவருடைய எழுத்துக்கள் எல்லாம் தமிழ் ஆர்வலர்க்கும் ஆய்வாளருக்கும் மேல்வரிச் சட்டமாயுள்ளனவாகும். அவர் பதிப்பித்த தமிழ்ப் பேரகராதி இன்றும் தமிழறிஞர் பெருமக்களால் பெரிதும் விரும்பி வரவேற்கப்படுகிறது. இது என்றும் அவர் பெயரை நிலைத்துநிற்கச் செய்யும் பெருஞ்சின்னமாகும்.

## பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை-வாழ்க்கைக் குறிப்புகள்

| | | |
|---|---|---|
| 12-10-1891 | : | தோற்றம் |
| பிறப்பிடம் | : | வண்ணாரப்பேட்டை, திருநெல்வேலி (தாயார் ஊர்) |
| | : | சிக்கநரசய்யன் கிராமம், திருநெல்வேலி (தந்தையார் ஊர்) |
| தந்தையார் | : | சரவணப் பெருமாள் பிள்ளை |
| தாயார் | : | பாப்பம்மாள் என்ற பிரம்மநாயகி |
| பிறபெயர்கள் | : | (1) பாலயா, பாலறாவாயர் |
| | | (2) சம்பந்தன் |

| | | |
|---|---|---|
| உடன்பிறந்தார் | : | தம்பிமார் இருவர், தமக்கையர் இருவர். |
| தொடக்கக் கல்வி | - | உபாத்தியாயர் கணபதிப் பிள்ளையின் திண்ணைப் பள்ளிக்கூடம். |
| பள்ளிக் கல்வி | - | செயின்ட் சேவியர் பள்ளி, பாளையங் கோட்டை. |
| 1905 | - | மெட்ரிக்குலேஷன் கல்வி, இந்துக் கல்லூரி பள்ளி, திருநெல்வேலி. |
| 1906 | - | எஃப். ஏ. வகுப்பு, இந்துக் கல்லூரி, திருநெல்வேலி. |
| 1910-12 | - | பி. ஏ. சென்னை கிறித்துவக் கல்லூரி |
| 1912 | - | சேதுபதி தங்கப் பதக்கம் பெறுதல் |
| | - | பாளையங்கோட்டை சைவச் சபையில் 'நெடுநல் வாடையும் நக்கீரரும்' என்ற பொருள் பற்றிச் சொற்பொழிவு (முதல் சொற்பொழிவு) |
| | - | திருமணம்-மனைவியார் சிவகாமி அம்மாள். |
| 1912-13 | – | எஃப். எல். படிப்பு, சட்டக் கல்லூரி, சென்னை. |
| 1913-14 | - | பி. எல். படிப்பு, சட்டக் கல்லூரி, திருவனந்தபுரம். |
| 1914-22 | - | உயர் நீதிமன்ற வழக்கறிஞர், திருவனந்தபுரம். |
| 1915 | – | 'வள்ளுவர் திருநாள்' என்ற தலைப்பில் வள்ளுவர் திருநாள் அன்று நெல்லை மாணவர் சங்கத்தில் சொற்பொழிவு. |
| 1918 | - | பாரதியாரைத் திருவனந்தபுரம் சைவப் பிரகாச சபையில் முதன் முதலாகச் சந்தித் தல். |
| 1919 | - | '13 ஆம் புறப்பாட்டும் உரையும்' செந் தமிழில் வெளி வந்தது (முதன் முதலில் அச்சு வாகனமேறிய ஆய்வுக் கட்டுரை). |
| 1919-20 | - | 'திருவள்ளுவரின் சமயம்', (கட்டுரை) (செந்தமிழ்) (18,9) |

| | | |
|---|---|---|
| 1920 | | 'உரைகாரர்களும் அண்மை விளியும்' (கட்டுரை) (செந்தமிழ்) |
| 1921–22 | - | 'மனோன்மணியம்' (கட்டுரை), செந்தமிழ் |
| 1922 | - | மனோன்மணியம் (பதிப்பு)-முதல் பதிப்பு முயற்சி |
| | - | 'வடமொழியும் தமிழும்' (கட்டுரை), செந்தமிழ் |
| 1922, நவம்பர் 11 | - | தமிழின் தற்கால நிலைமை என்ற தலைப்பில் சொற்பொழிவு, திருவனந்தபுரம் |
| 1923–26 | - | திருநெல்வேலியில் வழக்கறிஞர் |
| 1923 | - | 'கம்பன் திருநாள்' (கட்டுரை), திருநெல்வேலி. நெல்லை கம்பர் கழகம் நடத்திய கம்பன் விழாவில் படித்த ஆய்வுக் கட்டுரை |
| 1925 | – | 'வர்ணனை மரபுகள்' (கட்டுரை) செந்தமிழ் |
| | – | 'திருவள்ளுவர் திருநாள்' (கட்டுரை) செந்தமிழ் |
| | – | இராஜராஜ தேவர் உலா (பதிப்பு) |
| 1926 நவ. 25 | - | தமிழ் லெக்சிகன் பதிப்பாசிரியர் பதவி ஏற்பு |
| 1926–'36 | – | தமிழ் லெக்சிகன் பணி. |
| 1926 | - | தமிழகராதியின் அமைப்புமுறை வெளியீடு. (Plan of the Tamil Lexicon) |
| 1927 | – | துகில்விடு தூது (பதிப்பு) |
| 1930 | – | திருமுருகாற்றுப்படை - எளிய உரை (பதிப்பு) |
| | | ஆராய்ச்சியுரைத் தொகுதி (நூல்) |
| | | நாமதீப நிகண்டு (பதிப்பு) |
| 1931 | – | அருள் முருகாற்றுப்படை (பதிப்பு) |
| | | களவியற்காரிகை (பதிப்பு) |
| | | அரும் பொருள் விளக்க நிகண்டு (பதிப்பு) |
| 1932 | – | தினகர வெண்பா (பதிப்பு) |
| | | கம்பராமாயணம்;-யுத்த காண்டம் (முதல் மூன்று படலம்) பதிப்பு |

1932 – கலைமகள் திங்களிதழ் தொடக்கம்-இதழாசிரியர் குழு உறுப்பினர்
– குருகூர்ப் பள்ளு (பதிப்பு)
திருக்குறுங்குடி அழகிய நம்பி உலா (பதிப்பு)
– நரகாசுரன் கதை, ஆனந்த விகடன் தீபாவளி மலர்

1933 – திருப்பணி மாலைகள் (பதிப்பு)
அ. தென் திருப்பேரை மகர நெடுங்குழைக்காதர் திருப்பணி மாலை
ஆ. திருக்கோளூர் வைத்த மாநிதி திருப்பணி மாலை
– திருமந்திரம் (சேர்ந்து பதிப்பித்தது)
– தொல்காப்பியம்—பொருளதிகாரம்—இளம்பூரணம் (களவியல், கற்பியல், பொருளியல்) பதிப்பு
– நெல்விடு தூது (பதிப்பு)
– பூகோள விலாசம் (பதிப்பு)
– சென்னையில் தமிழன்பர் மாநாட்டு (டிசம் 23–24) நிர்வாகக் குழு உறுப்பினர்

1934 – மதுரைக்கோவை (பதிப்பு)
– இராமலிங்கேசர் பேரில் பணவிடு தூது (பதிப்பு)
– முப்பந்தொட்டியுலா (பதிப்பு)
– பொதிகை நிகண்டு (பதிப்பு)

1935 – தொல்காப்பியம் - பொருளதிகாரம் – இளம்பூரணம் (மெய்ப்பாட்டியல், உவமையியல், செய்யுளியல், மரபியல்) (பதிப்பு)
– சென்னைப் பல்கலைக் கழகம் நடத்திய (மார்ச் 6) டாக்டர் உ.வே. சாமிநாதய்யரின் எண்பதாம் ஆண்டு விழா உறுப்பினர்.

1936-46 – சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத் தலைவர்

1936 – தெய்வச் சிலையார் விறலி விடு தூது (பதிப்பு)
– சாத்தூர் நொண்டி நாடகம் (பதிப்பு)

1937 – கம்பராமாயணம்-பாலகாண்டம் முதல் ஏழு படலம் (பதிப்பு)

1938 – இராவ்சாகிப் பட்டம் பெறுகை
– 'குறுந்தொகை' (கட்டுரை) கரந்தைத் தமிழ்ச் சங்க வெள்ளி விழா மலர்
பதினெண் கீழ்க் கணக்கின் பதிப்பு முயற்சிகள்
– 'மு.இராகவையங்கார்' (கட்டுரை), மு. இராகவையங்கார் அறுபதாம் ஆண்டு மலரான 'ஆராய்ச்சித் தொகுதி'யில் வெளிவந்தது.

1938-39 – புறத்திரட்டு (பதிப்பு)

1939 – கயாதரம் (பதிப்பு)

1940 – சங்க இலக்கியம்-பாட்டும் தொகையும்) (பதிப்பு)
– கொண்டால் விடு தூது (பதிப்பு)

1941 – மதுரைத் தமிழ் அபிவிருத்திச் சங்கத் தமிழ் இலக்கிய மாநாட்டுத் தலைமை

1942 – திரிகடுகமும் சிறுபஞ்ச மூலமும் (பதிப்பு)
– இலக்கியமும் சமூகமும் (கட்டுரை) செந்தமிழ்
– 'மகாமகோபாத்தியாய டாக்டர் சாமிநாதையர்' திருவல்லிக்கேணி ஹிந்து இளைஞர் சங்கத்தினர் டாக்டர் சாமிநாதையரின் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்தபோது பேசிய சொற்பொழிவு
– திருமுருகாற்றுப்படை (கட்டுரை) செந்தமிழ்

1943 – திருமுருகாற்றுப் படை, உரையாசிரியர் உரை (பதிப்பு)
– நவநீதப் பாட்டியல்–உரையுடன் (பதிப்பு) வெளியீட்டு விழா (ஏப்ரல் 14)
– 'பத்துப்பாட்டும் அவற்றின் காலமுறையும்' (கட்டுரை) செந்தமிழ்

- பட்டினப்பாலையைப் பற்றிய ஒரு சாசனச் செய்யுள் (கட்டுரை) செந்தமிழ்
- 'வி. கனகசபைப் பிள்ளை', வானொலிப் பேச்சு, (28-5-43). சென்னை
- புறநானூற்று விழாத் தலைமை 'முத்தொள்ளாயிரம்' (கட்டுரை), வசந்தம்

1944 - நான்மணிக்கடிகை (பதிப்பு)
- இன்னா நாற்பது (பதிப்பு)
- சிறுகதை மஞ்சரி (நூல்)

1945 - 'வள்ளுவர் காலம்' வானொலிப் பேச்சு (8-10-45), சென்னை

1946 - சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறைத் தலைவர் பதவி ஓய்வு நாகபுரிக் கீழைக்கலை மாநாட்டில் திராவிட மொழிப் பகுதிக்குத் தலைமை
- Research in Dravidian Languages
- சைவ சித்தாந்த மகாசமாஜ ஆண்டு விழாத் தலைமை

1947-50 - திரைப்படத் தணிக்கைக் குழு உறுப்பினர்
- இலக்கியச் சிந்தனைகள் (நூல்)
- 'சொல்லும் பொருளும்' (கட்டுரை), தினமணி.
- 'தமிழும் சுதந்திரமும்' சுதந்திர தின விழாச் சொற்பொழிவு,
- 'தமிழின் மறுமலர்ச்சி (நூல்)

1948-49 - தமிழ்ப் புத்தகத் தேர்வுக் குழுத் தலைவர்

1949 - திருவிதாங்கூர்ப் பல்கலைக் கழகத்தில் 'தமிழ் இலக்கிய சரித்திரத்தில் காவியகாலம்' பற்றிய தொடர்ச் சொற்பொழிவு
- இனியவை நாற்பது (பதிப்பு)
- தமிழர் பண்பாடு (நூல்)
- 'கதைப்பாட்டு', (கட்டுரை), கலைக்கதிர்
- தமிழ்ச் சுடர் மணிகள் (நூல்)

1950 - காரைக்குடி கம்பன் விழாத் தலைமை

- கம்பன் ஆராய்ச்சிப் பதிப்பு (சிறுநூல்)
- காந்தி நகர் புதுமனை புகுவிழா இல்லப் பெயர் கம்பன் நிலையம்
- இலக்கிய உதயம் (நூல்)
- ராமப்பய்யன் அம்மானை (பதிப்பு)
- 'வளரும் மொழி உரைநயம்' வானொலிப் பேச்சு (1-11-50) சென்னை

1951 - 'கலியுகப் பெருங்காப்பியம்' வானொலிப் பேச்சு, (20-1-51) சென்னை
- 'டாக்டர் சாமிநாதையர் நினைவு நாள்', சென்னை அடையாறு டாக்டர் சாமிநாதையர் நூல் நிலையத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு

1951-54 - திருவிதாங்கூர்ப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத் தலைவர்
- சங்க இலக்கியங்களுக்குச் சொல்லடைவு தயாரிக்கும் பணி

1951 - இலட்சுமணபுரியில் நடந்த கீழைக்கரை மாநாட்டில் திராவிட மொழிப் பகுதிக்குத் தலைமை
- உரை மணிமாலை (நூல்)

1952 - 'பேராசிரியர் சுந்தரம் பிள்ளை - நாடகக் கவிஞர் வானொலிப் பேச்சு (4-3-1952), திருவனந்தபுரம்
- இலக்கிய உதயம் -II (நூல்)
- இலக்கிய தீபம் (நூல்)

1953 - 'பரிபாடலும் நகைச் சுவையும்' வானொலிப் பேச்சு (23-2-1953) திருவனந்தபுரம்
- 'கலிங்கத்துப் பரணியில் நகைச் சுவை' வானொலிப் பேச்சு (20-7-1953) திருவனந்தபுரம்
- மலையாளம் லெக்சிகன் பதிப்புக் குழு உறுப்பினர்

1954 – 'இராம காதை', காரைக்குடி கம்பன் கழகத்தில் திரு. சொ. முருகப்பாவின் பாலகாண்டப் பதிப்பு வெளியீட்டு விழாச் சொற்பொழிவு

1954 - இலக்கிய மணிமாலை (நூல்)

- The Age of Kamban A. Rejoinder, Indian Express, (21-9-1954)
- கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையின் இறுதிச் சடங்கில் கலந்து கொண்டமை.
- திருவிதாங்கூர் பல்கலைக் கழகப் பணி ஓய்வு
- திருவனந்தபுரம் பொதுமக்கள் பாராட்டு
- சென்னை திரும்புதல்

1955 - தமிழ் எழுத்தாளர் சங்கப் பாராட்டு

- கம்பன் காவியம் (நூல்)
- முதலாயிரம் (பதிப்பு)
- தினமணிக் கதிரில் 'இலக்கிய மண்டபம்' வரிசையில் ஆய்வுக் கட்டுரைகள் வெளியிடுதல்

1956 பிப்ரவரி 17 – பேராசிரியர் மறைவு

## பேராசிரியரின் மறைவுக்குப்பின் வெளிவந்த நூல்கள்

1956 – இலக்கணச் சிந்தனைகள் (நூல்)
திராவிட மொழிகளில் ஆராய்ச்சி (நூல்)
சொற்கலை விருந்து (நூல்)
சொற்களின் சரிதம் (நூல்)
History of Tamil Language & Literature

1957 தமிழிலக்கிய சரிதத்தில் காவியகாலம் (நூல்)
வையாபுரிப் பிள்ளை வாழ்க்கைக் குறிப்புகள்
(திருமதி. வை. சரோஜினி எழுதிய நூல்)

1958 - இலக்கிய விளக்கம் (நூல்)

1959 - அகராதி நினைவுகள் (நூல்)

- ராஜி

## இலக்கியப் படைப்புகள்

பேராசிரியர் காலத்துப் புதுவதாகத் தோன்றிய திறனாய்வு முறையோடு புதிய இலக்கியங்களாகிய நாவல், சிறுகதை முதலிய வற்றையும் வரவேற்கும் உள்ளம் படைத்தவர் அவர். அவருக்கு உள்ளூர சிறுகதைகள், நாவல்கள் எழுதவேண்டுமென்று விருப்பு இருந்திருக்கிறது. அவரே சிறுகதைகளும் நாவலும் எழுதி யுள்ளது இதனை வலியுறுத்துகிறது. இவர் சுயசரிதையும் எழுதி யுள்ளார் என்பது பலருக்கும் தெரியாது. பம்பாயிலுள்ள தி. கே. தேவர் என்பார் தமிழ்ச்சுடர் மணிகள் நூலை அவ்வூரில் வெளியிட்டபோது, அவரது வேண்டுகோளுக்கிணங்க பேராசிரியர் தமது சுயசரிதையை எழுதினார்.

### நாவல்

பேராசிரியர் எழுதிய ஒரே நாவல் ராஜி. அக்கால சமூக நாவல்களில் உள்ளனவற்றைப் போன்று பிராமணக் குடும்பச் சூழ்நிலையே இவரது நாவலிலும் அமைகின்றது.

ராமையர் பெருஞ் செல்வந்தர். அவருடைய மகள் ராஜி. தாயில்லாப் பெண்ணான ராஜியை மிகவும் செல்லமாக வளர்க் கிறார் ராமையர். நற்குணமும் அழகும் நிரம்பிய அவள் எம்.பி.பி.எஸ். பட்டதாரி. ராமையருடைய விதவைத் தமக்கையின் மகன் நாணு. எம். ஏ. பட்டம் பெற்ற அவன் கும்பகோணம் கல்லூரியில் ஆசிரியராக வேலை பார்க்கிறான். அரசாங்க உதவிப் பணத்தினாலும், மாமாவின் உதவியினாலும் முன்னுக்கு வந்தவன் அவன். ராஜியிடம் காதல்கொண்ட நாணு, அவளிடம் தனது எண்ணத்தைச் சொல்ல முயற்சிக்கிறான். ஆனால், எவரிடமும் அதிர்ந்து பேசும் குணம் இல்லாத ராஜி அன்று ஏதோ ஒரு மனநிலையில், "என் காரியங்களில் ஒருவரும் தலையிட வேண்டியதில்லை" என வெடுக்கென்று பேசிவிடுகிறாள். இதை எதிர்பாராத நாணு மனமுடைந்துவிடுகிறான். அவள் அங்ஙனம் கடுமையாகப் பேசியதற்குத் தன்னுடைய ஏழ்மையே காரணம் என்று நினைத்து வருந்தி கும்பகோணம் திரும்புகிறான். ராமையர் ராஜியை நாணுவிற்கு மணம் செய்து கொடுக்கவேண்டு மென்று உள்ளூர ஆசைப்படுகிறார். ஆனால், ராஜியின் மனம் தனது கல்லூரியில் படித்த ரங்கு என்ற மோகனரங்கத்தையே நாடுகிறது. ராமையரும் பெண்ணின் விருப்பத்திற்கு முதன்மை

யளித்து, நிச்சயதார்த்தத்திற்கு ஏற்பாடு செய்கிறார். அதன் பிறகு மோகனரங்கம் மேல்படிப்பிற்காக இங்கிலாந்து செல்கிறான்.

ராஜி சென்னையிலேயே ஒரு மருத்துவமனை அமைத்து பணியாற்றுகிறாள். நாணு, தான் பிரம்மச்சாரியாகவே வாழ்வது என்றும் தன்னுடைய வாழ்க்கையைக் கணித ஆராய்ச்சிக்குப் பயன்படுத்துவது என்றும் முடிவு செய்கிறான். தான் இம்முடிவை எடுக்கக் காரணமாக இருந்த ராஜியை இலட்சிய தேவதையாக மனதில்கொண்டு அவளுடைய படத்தைப் பூஜை அறையில் வைத்து வழிபடுகிறான். சென்னையிலிருந்த தனக்குச் சொந்தமான வீட்டை விற்று ராமையரிடம் தான்பட்ட கடனைத் திருப்பிக் கொடுத்துத் தன்னுடைய தன்மான உணர்ச்சியை நிலைநாட்டுகிறான். ராமையரும் ராஜியும் நாணுவிற்குப் பெண் பார்க்கின்றனர். ராஜி தன்னுடைய பணியில் பெரும் புகழும் பெறுகிறாள். ராஜியின் மனத்தில் தான் நாணுவைக் கடிந்து பேசியதால் உண்டான வருத்தம் இருந்தது. அவள் கும்பகோணத்தில் தன் சிநேகிதி வீட்டிற்கு மனமாறுதலுக்காகச் செல்கிறாள். அங்கு சிநேகிதியின் தங்கை ருக்குவை நாணுவிற்கு மணமுடிக்க எண்ணி நாணுவிடம் தன் விருப்பத்தைத் தெரிவிக்கிறாள். ஆனால், அம்முயற்சி வெற்றிபெறவில்லை. நாணு தன்னை ஒரு இலட்சிய தேவதையாக நினைத்து வணங்குவதை அறிந்து மகிழ்வும் வருத்தமும் ஒருங்கே அடைகிறாள். சென்னை திரும்புகிறாள். ரங்குவிடமிருந்து வாரம் தவறாமல் கடிதம் வருகிறது. இதற்கிடையில் நாணு கணித ஆராய்ச்சிக்காக இங்கிலாந்து செல்ல அரசால் தேர்ந்தெடுக்கப்படுகிறான். நாணுவும் தாயாரும் சென்னைக்கு வருகின்றனர். ராஜியும் நாணுவும் சகஜமாகப் பழகுகின்றனர். ராஜி நாணுவிடம் ருக்குவை மணம்புரியும்படி வற்புறுத்துகிறாள். ஆனால் நாணு மறுத்ததோடு மட்டுமல்லாமல் ருக்குவிற்குத் தானே ஒரு வரனைப் பார்த்து மணமுடிக்கிறான். நாணுவின் அன்பு ராஜியின் மனதில் சஞ்சலத்தை ஏற்படுத்துகிறது. ஆதியில் தான் அவனிடம் கடுமையாக நடந்து கொண்டதற்குப் பலமுறை மன்னிப்பும் கேட்கிறாள். நாணு இங்கிலாந்து செல்கிறான். நாட்கள் செல்கின்றன. ரங்கு இங்கிலாந்திலேயே ஒரு பணக்கார அழகியான இந்தியப் பெண்ணை மணம் முடிக்க நினைக்கும் செய்தியை அறிந்து அதனைத் தடுக்க முயற்சிக்கிறான். ஆனால் அவனால் முடியு

வில்லை. இதை அறிந்த ராஜி நோய்வாய்படுகிறாள். தன்மீது அன்புகொண்ட நாணுவைத் தான் அவமானப்படுத்தியதுதான் தன் துன்பங்களுக்குக் காரணம் என்று எண்ணி மனம் குமைகிறாள். நாணுவின் உத்தம குணங்களெல்லாம் அவள் முன் நிழலாடின. நாணுவைத் தான் அவமதித்ததை நினைந்து நினைந்து அவள் உடல் சீர்கெடுகிறது. இதற்கிடையில் நாணு எஃப் ஆர்.ஸி.எஸ். படிப்பை முடிக்கிறான். அவனது ஆராய்ச்சி முடிவுகள் அறிஞர்களால் ஒத்துக்கொள்ளப்படுகின்றன. ராஜி மனமகிழ்கிறாள். தான் ரங்குவை முன்பு காதலித்த காரணத்தால் நாணு தன்னை வெறுத்து ஒதுக்கிவிடுவானோ என்ற அவளது சந்தேகம் ஒருபுறமும் அவன் அப்படிப்பட்டவன் அல்ல என்ற நம்பிக்கை ஒருபுறமுமாக அவளது எண்ணங்கள் ஊசலாடிக் கொண்டிருக்கின்றன. இந்நிலையில் நாணு ராஜியின் உடல் நிலையைப் பற்றிய கவலையுடன் தாய்நாடு திரும்புகிறான். இருவரும் முன்பு நடந்தவைகளை மறந்து ஒன்று சேருகிறார்கள்.

## பாத்திரப் படைப்புகள்

சௌந்தரத்தம்மாள் (நாணுவின் தாய்), அம்புஜம் (ராஜியின் தோழி), கோபாலையங்கார் (அம்புஜத்தின் தந்தை), வரதராஜ அய்யங்கார் (ருக்குவிற்கு நிச்சயிக்கப்பட்ட மாப்பிள்ளை), அமுது (நாணுவின் மாணவன்), பங்கஜி (வரதராஜ அய்யங்காரின் தங்கை), பேராசிரியர் ஹார்டி, கமலினி (மோகனரங்கத்தின் மனைவி) முதலிய துணைப் பாத்திரங்கள் இந்நாவலின் கதை நிகழ்ச்சிகளில் முக்கிய பங்கு பெறவில்லை. எனவே இவர்கள் கதையில் உயிர்நாடிப் பாத்திரங்களாக அமையவில்லை. இவர்கள் இல்லாவிட்டாலும் கதைப்போக்கு தடைபடுவதில்லை. எனவே முக்கிய பாத்திரங்களின் குணநலன்கள் மட்டுமே இங்கு கருதப்படுகின்றன.

**நாணு :** சிறு வயதிலேயே தந்தையை இழந்த நாணு மாமாவின் உதவியாலும், அரசாங்க உதவிப் பணத்தாலும் முன்னுக்கு வந்தவன். தான் காதலித்த பெண்ணை அடைய முடியாத ஏமாற்றத்தினால் அவளது வாழ்க்கையைக் கெடுக்க நினைப்பவர்களும் உள்ள இந்த உலகத்திலே, நாணுவோ ராஜியைத் தன் இலட்சிய தேவதையாகக் கொண்டு வழிபடுகிறான். அவளுடைய நினைவைப் போற்றும் வகையில் பிரம்மச்சாரியாகவே இருப்பதற்கும் முடிவு செய்கிறான். ருக்குவை

மணம்புரிய வேண்டும் என்று ராஜி அவனைப் பல தடவை வற்புறுத்தியபோதிலும், அவன் தன் இலட்சியத்தைக் கைவிட வில்லை. ரங்கு கமலினியை மணமுடிக்க நினைத்தபோது, அத் திருமணத்தைத் தடுக்கப் பல வழிகளையும் கையாளுகிறான். தன்னுடைய தன்மான உணர்ச்சியைப் பெரிதாக மதிக்கும் நாணு, தன் வீட்டை விற்று மாமாவிடம் பட்டிருந்த கடனைத் திருப்பி அடைக்கிறான்.

இசையில் ஆர்வமும் பயிற்சியுமுடையவனாக நாணுவைக் காட்டுகிறார் ஆசிரியர். அவன் கணிதத் துறை அறிஞன். மேல் நாட்டில் அவனது ஆராய்ச்சி முடிவுகள் அறிஞர்கள் பாராட்டைப் பெற்றன. பெரியோர்களிடம் வணக்கமும் மரியாதையும் உடையவன். இவன் இங்கிலாந்து போவதற்குமுன் ஒரு சொற்பொழி வாற்றுகிறான். அதில் அருமையான பல கருத்துக்களும் அடங்கி யிருந்தன. அவனுடைய சொற்பொழிவாற்றலும் பாராட்டப்படு கிறது. இங்ஙனம் கதாநாயகனான நாணுவை அறிவு, அடக்கம், பணிவு முதலிய நற்குணங்கள் பல நிரம்பிய உத்தமனாகக் காட்டு கிறார். ராஜி தன்னை அவமதித்ததையும் அவள் மாற்றானை விரும்பியவள் என்பதையும் மறந்து அவளை ஏற்றுக்கொள்கிறான். இது அவனது பெருந்தன்மையைக் காட்டுகிறது.

*ராஜி* : படித்த பெண்ணான ராஜி அடக்கம், அழகு, எளிமை யுடையவள். நாணுவிடம் தான் ஆதியில் கடிந்து பேசியதைப் பலமுறை நினைந்து வருந்துகிறாள். அதற்காக மன்னிப்பு கேட்பது, தவறை உணரும் மனப்பாங்கைக் காட்டுகிறது. ரங்குவைத் தான் விரும்புவதைத் தந்தையிடம் மறைக்காமல் கூறி மணத்திற்கு ஏற்பாடு செய்வதன் மூலம் அவளது முற்போக்கான மனநிலை எடுத்துக்காட்டப்படுகிறது. நாணு தன்மீது இளம் பிராயத்திலிருந்தே ஆசை கொண்டிருந்தான் என்பதையறிந்து தன்னால் அவனுக்கு நேர்ந்த மனத் துன்பத்தை மாற்றி அவனுக்கு மணமுடிக்க முழு முயற்சியுடன் இறங்குகிறாள் நாணுவிடம் தான் கொண்டிருந்தது வெறும் அன்பா அல்லது காதலா என்பது பற்றி அவள் உள்ளத்தில் பலமுறை சந்தேகம் எழுகின்றது. தன் மனதில் அப்படிப்பட்ட சந்தேகம் தோன்று வதே ரங்குவிற்குச் செய்யும் துரோகம் என்றெண்ணி மனம் கலங்குகிறாள். எனினும் அந்நினைப்பை மாற்ற இயலாத நிலையில் துன்பமும் அடைகிறாள். ரங்கு கமலினியை மணம் புரிந்த செய்தியை அறிந்த பிறகு நாணுவின் உத்தமமான

இலட்சிய குணங்கள் அவளுக்குப் புலப்படுகின்றன. அவன்மீது தான் கொண்டிருந்தது வெறும் அன்பல்ல காதல்தான் என்பதை யும் உணருகிறாள். இது அவளது கள்ளங்கபடற்ற தன்மையைக் காட்டுகிறது. ராஜி மிகவும் அறிவுடையவள் என்பதைக் காட்டு வதற்காக, அவள் ரங்காச்சாரி தங்கப்பதக்கம் முதலான பத்துப் பரிசுகளைப் பெறுவதாகக் காட்டுகிறார்.

**ராமையர் :** ஒரு பெருஞ் செல்வந்தரான இவர் தன் தங்கை மகளை மிகுந்த அன்புடன் வளர்க்கிறார். அவளது கல்விக்கு வேண்டிய பண உதவியும் செய்கிறார். ராஜியின் மனம் ரங்குவை நாடுவதை அறிந்ததும் அவள் விருப்பத்திற்கு மாறாக நடக்க விரும்பவில்லை. இச் செயல் மகள்மீது அவர் கொண்ட அன்பை விளக்குகிறது. நாணு தன்மான உணர்ச்சியோடு தன்னிடம் பட்ட கடனைத் திருப்பும்போது மனம் கலங்குகிறார். அப் பணத்தை அவனுடைய திருமணப் பரிசாகத் திருப்பி விடவும் நினைக்கிறார். அவர் ஒரு கருமியல்ல என்பதை இது காட்டு கிறது.

**மோகனரங்கம் :** முதலில் ராஜியை மணம்புரிய விரும்பும் ரங்கு இங்கிலாந்து சென்றபிறகு மனம் மாறுகிறான். தனக்காகவே ஒரு பெண் காத்திருப்பதையும் மறந்து வேறொரு பெண்ணைப் பணத்திற்காகவும் அந்தஸ்திற்காகவும் மணம் புரிகிறான். இது அவனுடைய நிலையற்ற மனத்தைக் காட்டுகிறது.

**ருக்கு :** இசையில் நல்ல பயிற்சி உடையவள் ருக்கு. நாணு விற்கு ருக்குவை மணமுடிக்க முயற்சி எடுக்கிறாள் ராஜி. ஆனால் நாணுவோ தான் அவளை உடன்பிறப்பாக எண்ணுவதாகக் கூறி மறுக்கிறான். மறுத்ததோடன்றி அவளுக்கும் வரதனுக்கும் மண முடிக்க ஏற்பாடு செய்கிறான்.

## சிறுகதை

பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்களின் கதைகள் கலை மகள், ஆனந்தவிகடன், தீபாவளி மலர் (1932, நரகாசுரன் கதை) அமுதசுரபி முதலிய பத்திரிகைகளில் வெளிவந்தன. அவர் பாலையா என்ற பெயரில் அவ்வப்போது எழுதிய சிறுகதைகளைத் தொகுத்து, 1952இல் தினமணி வெளியிட்டது. 'சிறுகதை மஞ்சரி' என்ற பெயர்கொண்ட இக்கதைத்தொகுதி தினமணியின் தனி

வெளியீட்டு வரிசையாக வெளிவந்தது. இந்நூலைப் பிள்ளையவர்களின் ஆராய்ச்சி முன்னுரை அழகுசெய்கிறது. இம் முன்னுரையில் சிறுகதை இலக்கியம் பற்றியும் சிறுகதைக்குரிய கருக்கள், சிறுகதையின் வகைகள், சிறுகதைக்கான நடை எனப் பல செய்திகளைத் தெளிவாக விளக்குகிறார். "பல மொழிகளிலுமுள்ள தற்கால இலக்கியங்களில் சிறுகதைகளுக்கு ஓர் உயர்ந்த ஸ்தானம் கிடைத்திருக்கிறது. அவற்றை எழுதியவர்கள் எச். ஜி. வெல்ஸ், தாமஸ் ஹென்றி, ஸ்டீவென்ஸன், செஸ்டர்டன் முதலிய பேரறிஞர்கள். இவர்கள் ஆங்கில மொழியில் பெரும் புலமை வாய்ந்தவர்கள். தமிழில் பெரும்புலவர்கள் சிறுகதைகள் எழுதினார்களென்று நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? இல்லை. காரணம் என்ன? தமிழில் தற்காலத்திற்குரிய ஓர் இலக்கிய வகை சிறுகதை என்பதை இத்தமிழ்ப் பேரறிஞர்கள் உணர்ந்துகொள்ளாமைதான். 'கதை' என்றாலே இகழ்ச்சி. இவர்கள் இப்பொழுதும் புராணங்கள், சாத்துக்கவிகள் முதலியனவும் பண்டைப் பழந்தமிழ்க் கட்டுரைகளும் எழுதித் தம் காலத்தை வீண்போக்குகிறார்கள். தமிழிலக்கிய வளர்ச்சியைப் பெரும்பாலும் பேணுவதில்லை. சிறுகதை பேரிலக்கியமாகவும் கூடும் என்ற உணர்ச்சியே இவர்களுக்கு இல்லை.

ஆனால், சிறுகதை எழுதுவது என்பது எளிதான காரியமல்ல, சுவையான நிகழ்ச்சிகளைச் சுவையான முறையில் பொருளுக்கேற்ற நடையில் அமைத்துச் சிறுகதை எழுதவேண்டும். மனோ பாவனையும் உணர்ச்சி விளைக்கும் ஆற்றலும் வேண்டும். இவை எல்லோருக்கும் வாய்க்குமா என்று சிறுகதையின் பெருமையை விளக்குகிறார். இங்ஙனம் சிறுகதை இலக்கியத்தைப் பெரிதும் வரவேற்றதோடு பல சிறுகதைகளையும் எழுதியது அவரது செயல் ஈடுபாட்டைக் காட்டுகின்றது.

இவரது கதைத் தொகுப்பில் மொத்தம் ஒன்பது கதைகள் உள்ளன. இவற்றுள் உண்மைக் கதைகள், தழுவல் கதைகள் ஆகியவையும் அடங்கும்.

### உண்மைக் கதைகள் :

இரண்டு உண்மைக்கதைகள் இதில் இடம் பெற்றுள்ளன. ஒன்று மணிமுடி மாளிகை. மற்றொன்று ராமுவின் சுயசரிதம்.

மணிமுடிமாளிகை பேராசிரியரின் நண்பரது குடும்பவாழ்க்கையைச் சித்தரிப்பது. குடும்பத் தலைவி தன் கூற்றாக எழுதியதை அவ்வாறே தாம் பதிப்பித்திருப்பதாகப் பேராசிரியரது சிறுகுறிப்பு தெரிவிக்கிறது. அதுபோன்றே 'ராமு' என்ற புனைபெயரை உடைய தம் நண்பர் ஒருவரின் சுய சரிதத்தை அவர் எழுதியபடி அப்படியே பதிப்பித்திருப்பதாகவும் குறிப்பு ஒன்றைத் தருகிறார். இவற்றை இவரது பதிப்புக் கதைகள் எனலாம்.

## மணிமுடி மாளிகை

காதலை மையமாகக் கொண்டு எழுதப்பெற்றதே முதல் கதையான மணிமுடி மாளிகை. 'மணிமுடி மாளிகை' என்ற தலைப்பிற்கான விவரம் கதையிலேயே கொடுக்கப்பட்டுள்ளது. "தாஜ் மஹால் என்றால் மாளிகைகளின் மணிமுடி என்று பொருள். ஒவ்வொருவன் உள்ளத்திலும் விளங்கும் காதற்கோயிலின் வெளித்தோற்றமே இம்மணிமுடி மாளிகை" (ப. 16) என்று கதை நாயகன் கதை நாயகியிடம் கூறுகிறான். டாக்டர் ராமநாத பிள்ளையின் தங்கை விசாலாக்ஷி, அவள் கிருஷ்ணசாமி என்பவரைக் காதல் திருமணம் செய்து கொண்டதால் குடும்பத்தாரால் விலக்கி வைக்கப்பட்டவள். கணவர் கிருஷ்ணசாமி இறந்த பிறகும் குடும்பம் ஒன்று சேரவில்லை. ஒரே மகன் ஸ்ரீநிவாசன் (சீனு) சட்டப்படிப்பை முடித்து மேற்படிப்பிற்காக இங்கிலாந்து செல்லவிருக்கிறான்.

ராமநாதபிள்ளையின் ஒரே மகள் ரங்கு என்கிற ரங்கநாயகி, தாயில்லாப் பெண். கல்லூரித் தேர்விற்குப் பிறகு தந்தையும் மகளும் டெல்லி வரையிலும் ஊர் சுற்றிப் பார்க்கப் புறப்படுகிறார்கள். வழியில் சென்னையில் தங்கும்போது, தங்கை விசாலாக்ஷியோடு தொடர்புகொள்கிறார் ராமநாதபிள்ளை. உறவு புதுப்பிக்கப்படுகிறது. அங்கு ஃபோட்டோவில் ஸ்ரீநிவாசனைப் பார்க்கிறாள் ரங்கநாயகி. பிறகு அங்கிருந்து டெல்லிப்பயணம் தொடர்கிறது. டெல்லியில் ஒரு நண்பர் வீட்டில் தங்குகின்றனர். அங்கு சீனு தற்செயலாக வருகிறான். அவர்கள், மூவரும் ஒருவரையொருவர் அடையாளம் கண்டுகொண்ட போதிலும் தம்மை வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. மூவரும் ஆக்ரா போகிறார்கள். அங்கு ரங்கநாயகியும் சீனுவும் தம்மை அடையாளம் காட்டிக்கொண்டனர். திருமணம் செய்துகொள்ளவும் விரும்புகின்றனர். பிறகு சென்னை திரும்புகிறார்கள். ரங்க

நாயகியின் மூன்றாண்டுப் படிப்பு முடிந்தபிறகு திருமணம் நடத்தலாம் என்று முடிவாயிற்று. பிரிந்த குடும்பம் ஒன்றுசேருகிறது.

## ராமுவின் சுயசரிதம்

'ராமுவின் சுய சரிதம்' என்ற கதையும் காதலைக் கருவாகக் கொண்டதுதான். சென்னையிலிருந்து தீபாவளிக்காகப் புறப்படும் திருநெல்வேலி வண்ணாரப்பேட்டை விசுவநாத ஐயர் பெண் பத்மாவும் புதுக்கிராமம் பாங்கர் கோபாலகிருஷ்ணய்யர் பிள்ளை ராமுவும் ஒரே ரயிலில் பயணம் செய்ய நேரிடுகிறது. ஆனால் அவர்கள் இருவருடைய பெற்றோர்களும் இவர்களுக்கு ஏற்கனவே திருமணம் நடத்த நினைத்து, பெண் போட்டோவைப் பிள்ளைக்கும் பிள்ளையின் போட்டோவைப் பெண்ணுக்கும் அனுப்பியிருந்தனர். அதனால் ரயில் பயணத்தின்போது. அவர்கள் ஒருவரையொருவர் அடையாளம் கண்டுகொண்ட போதும் பயண முடிவின்போதுதான் தம்மை வெளிப்படுத்துகின்றனர். இடையே ரயில் பெருவிபத்துக்குள்ளாகியது. ஆனால் இவ்விருவருக்கும் அடிபடவில்லை. தாம் இருவரும் சுகமாக இருப்பதாக ஊருக்குத் தந்தியடிக்கிறார்கள். ராமுவின் துணையுடன் வரும்படி பத்மாவிற்கும், பத்மாவை கவனமாக அழைத்து வரும்படி ராமுவிற்கும் தந்திகள் ஊரிலிருந்து வருகின்றன. ரயில் பயணத்தின்போது அவர்களிடையே காதல் அரும்புவதாகக் காட்டியுள்ளார் கதையாசிரியர்.

## தழுவல் கதைகள்

சுசீலை, உதிர்ந்த மலர், சந்திரா பழிவாங்கியது, மத்தளக்காரன், பாலகோபாலன் வழக்கு ஆகிய ஐந்து தழுவல்கதைகள் இத்தொகுப்பில் உள்ளன. இதில் நான்கு, ஆங்கில மூலங்களின் தழுவல். மத்தளக்காரன் கதை எம்மொழித் தழுவல் என்பது தெளிவில்லை. 'க்ரிம்' என்பவர் எழுதிய கதையொன்றைத் தழுவி எழுதியது என்ற குறிப்பு உள்ளது.

### சுசீலை

'சுசீலை' கதையானது, காதலன் காதலியிடம் சந்தேகம் கொள்வதைக் கருவாகக்கொண்டது. குழந்தைச் செல்வமற்ற

பணக்கார விதவையான அம்மணி அம்மாள் தனது தூரத்து உறவினரான சுசீலையை வளர்க்கிறாள். சுசீலை தாய் தந்தையரை இழந்தவள். அம்மணி அம்மாளின் தங்கை மகன் ராமநாதன். அவன் பூகோள நூலொன்றை எழுதி முடிக்கும் நோக்கத்துடன், அமைதியான சூழலை நாடி, பெரிய தாயாரின் கிராமத்திற்கு வருகிறான். சுசீலைக்கும் ராமநாதனுக்குமிடையே காதல் மலர்கிறது. ஆனால் இருவரும் தம் மனத்தை வெளிக்காட்டிக்கொள்ளவில்லை. ஒருநாள் சுசீலையின் தந்தையின் நண்பர் சோமநாதர் வருகிறார். அப்போது, சுசீலை பாரதியாரின் 'காற்றுவெளியிடைக் கண்ணம்மா' பாடலைப் பாடிக்கொண்டிருக்கிறாள். அவளுடன் அவரும் சேர்ந்து பாடுகிறார். இதைக்கண்ட ராமநாதன் கோபம் கொள்கிறான். இதற்கிடையே, இராமநாதனுக்கென வளர்ந்த முறைப் பெண்ணான சுந்தரியை அவள் தகப்பனார் வேறு இடத்தில் திருமணம் செய்யவிருக்கும் செய்தியும் சேரவே அவன் பெண்ணினத்திடமே வெறுப்பு கொள்கிறான். ஒருநாள் அழைப்பின் பேரில் அவ்வூர்ப்பள்ளி விழாவில் பாட ஒத்துக்கொண்ட சுசீலை 'காற்று வெளியிடைக் கண்ணம்மா' பாடலைப் பாட நினைக்கிறாள். அதற்கு ஒத்திகைப் பார்க்க அவளுக்குப் 'பாரதியார் பாடல்கள்' நூல் தேவைப்படுகிறது. அந்நூலைச் சோமநாதர் எடுத்துக்கொண்டு போயிருப்பது நினைவுக்கு வந்ததும், அவருக்கு ஆளனுப்பி அப்பாடல் அடிகளை எழுதி அனுப்ப ஏற்பாடு செய்கிறாள். அவரும் அப்பாடல் அடிகளை ராமநாதனிடமே கொடுத்தனுப்புகிறார். சூழலை அறியாமல், அப்பாடல் அடிகளைப் பார்த்த ராமநாதன் சந்தேகம் வலுப்படுகிறது. மனம் வெதும்புகிறான். அதனைப்பற்றி சுசீலையிடம் வெறுப்புடன் விவாதிக்க, முடிவில் நடந்த செய்திகளை அறிகிறான். சந்தேகம் விலகி, காதல் மலர்கிறது.

## உதிர்ந்த மலர்

காதல் தோல்வியை மையமாகக் கொண்டது. பொருந்தா மணம், அதாவது 14 வயதுச் சிறுமியை 60 வயதுக் கிழவனுக்கு மணம் செய்விக்கும் அநீதியும் காட்டப்படுகிறது. அமீர்கான் என்ற வாலிபனைக் காதலித்த சுரைதாவை அவளது முரட்டுத் தந்தையாகிய ஸலீம் பண ஆசையால் அறுபது வயதான சதக் அலிக்கு மணம்செய்து கொடுக்கிறான். அமீர்கானோ பெண்வேடம் கொண்டு சுரைதாவின் அந்தப்புரத்திற்குச் சென்று அவளை அடிக்கடி சந்தித்து வருகிறான். ஒருநாள் இதை அறிந்த சதக்

அலி அவளது காதலனைக் கொன்று ரத்தம் தோய்ந்த அவனது தலையை ஒரு பெட்டிக்குள் வைத்து அவளுக்குப் பரிசாகக் காட்டு கிறான். அவளோ சதக் அலியின் உடைவாளைப் பிடுங்கித் தன் இருதயத்தில் பாய்ச்சி 'அமீர்கான்' என்று கூறிக்கொண்டே உயிர் விடுகிறாள்.

## சந்திரா பழிவாங்கியது

தக்காணத்துப் பண்டை நாட்கள் என்று பொருள்படும் 'Old Deccan Days' என்ற ஆங்கில நூலின் கதையைத் தழுவி எழுதப் பட்ட கதையே 'சந்திரா பழிவாங்கியது' என்ற கதை. ஆங்கில நூல் எம். பிரேரே என்பவரால் 1868இல் எழுதப்பெற்றது. இக் கதைக்கும் சிலப்பதிகாரக் கதைக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமை களைக் காட்டுவதற்காக இக்கதையைத் தழுவிப் பேராசிரியர் இதனை எழுதியுள்ளதாகத் தெரிகிறது. இவ்வேறுபாடுகள் பின்வருமாறு:

கோவலன்-கோவிலன் என்றும், மாதவி-மௌலி என்றும் கண்ணகி-சந்திராதேவி என்றும் காணப்படுகின்றனர்.

கோவலன், கண்ணகி, மாதவி இம்மூவரின் பிறப்பு வரலாறு வேறுபாடுடையதாக உள்ளது. ஒரு வணிகனின் மனைவி, மதுரை ராணி, நடனமாது ஆகிய மூவரும் மகாதேவரின் அருளால் பெற்ற மாங்கனியை உண்டதால், அவர்களுக்கு முறையே கோவலன், கண்ணகி, மாதவி மூவரும் பிறக்கின்றனர். கதைப்படி கண்ணகி பாண்டியன் மகள். இவ்வரலாற்றை 'பாண்டியன் தன் மகளைப் பரவுதும்' என்ற சிலப்பதிகாரக் குறிப்போடு இணைத்துப் பார்க் கிறார் வையாபுரியார்.

சந்திராவால் நாடு தீப்பற்றும் எனச் சோதிடன் ஒரு கம்பிளி நூலைச் சந்திராவின் மீது காட்ட அது எரிந்தவுடன், அரசனும் பயந்து அவளை ஒரு பெட்டியில்வைத்து ஆற்றில் மிதக்கவிட்டு விடுகிறான். அது வணிகன் கையில் கிடைக்கின்றது. இச்செய்தி சிலப்பதிகாரத்தில் இல்லையென்றாலும்கூட, நாடோடிக் கதை யில் காணப்படுகிறது என்ற குறிப்பும் பேராசிரியரால் தரப் படுகின்றது.

சந்திராதேவிக்கு ஒரு வயதானதும் திருமணம் நடைபெறுகின்றது. ஆனால் சிலப்பதிகாரத்தில் கண்ணகியின் திருமண வயது 12. சந்திராவின் சிலம்பு பிறவியிலேயே அமைந்திருந்தது. அவள் வளர வளர அச்சிலம்பும் வளர்ந்ததோடு, யாராவது அருகில் வந்தால் ஒலிக்கும் நிலையும் பெற்றிருந்தது.

மௌலியின் ஊர் திருநெல்வேலி. சிலப்பதிகாரம் அவளைப் பூம்புகாரைச் சேர்ந்தவளாகக் காட்டும். மௌலி வீசிய மாலை கோவிலன் கழுத்தில் விழ கோவிலன் வீட்டை மறந்து அவளை மணந்து கொள்கிறான். இச்செய்தி கோவலன் கதை முதலிய நாட்டுப்புறப் பாடல்களில் காணப்படுவதையும் பேராசிரியர் காட்டுகிறார்.

கோவலன் கண்ணகியின் காற்சிலம்பைப் பெறும் முறையும் வேறுபாட்டோடு அமைக்கப்பட்டுள்ளது. மௌலியின் தாய், பணம் தராவிட்டால் வீட்டை விட்டுப் போகவேண்டுமெனக் கூறக் கோவிலன் சந்திராவிடம் சென்று சிலம்பைக் கேட்கிறான்.

சந்திராவும் கோவிலனும் மதுரைக்குச் செல்வதைத் தேவலோகத்திலிருந்து பார்த்த கிருஷ்ணன் தன் மூன்று மனைவியரிடம் பின்னால் நிகழப்போவதைக் கூறுகின்றான். தேவியர் மூவரும் குறிசொல்வதுபோல் வேடம் புனைந்து அவர்களிடம் மதுரைக்குப் போகவேண்டாம் என்று சொல்ல கோவிலன் கோபம் கொண்டு அவர்களைத் துரத்தி விடுகிறான்.

பொற்கொல்லனின் வீட்டின் அண்மையில் கூடுகட்டி ஒலியெழுப்பி தொந்தரவு செய்த கழுகுகளின் குஞ்சுகளைப் பொற்கொல்லன் மகன் கொன்று விடுகிறான். பழிவாங்க நினைத்த கழுகு பொற்கொல்லன் பணிசெய்து கொண்டிருந்த அரசியின் சிலம்பைக் கௌவிக்கொண்டு பறந்துவிடுகிறது. கோவிலன் கையில் சிலம்பைக் கண்ட பொற்கொல்லன் தன் மனைவியிடம், கடைத்தெருவில் சிலம்பு விற்பவனிடம் சென்று அன்பாகப் பேசி பொழுதாகிவிட்டபடியால் தன் வீட்டிலேயே தங்க அழைத்துவா எனக்கூற அவர்கள் தந்திரமாகக் கோவிலனை வீட்டிற்கு அழைத்துச் சென்று பரிவுடன் உணவும் இரவில் படுக்க வசதியும் செய்து கொடுத்தனர். அச்சிலம்பு ராணியிடம் கொடுக்கப்பட்டபோது யாராவது பக்கத்தில் வந்தால் ஒலிக்கும் இச்சிலம்பு தன்னுடையதல்ல என்று கூறுவதோடு 'இது என் கண்மணியின் சிலம்பு' என்று கூறி விசாரித்தறியதற்குக் கணவனை வேண்டுகிறாள்.

ராணிக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதென்று அனைவரும் நினைக்கின்றனர்.

கோவிலன் கொலை செய்யப்பட்டபின் நகரமக்கள் அதைக் கொடுமையெனக் கூறுவதைக் கேள்விப்பட்ட அரசன் நடந்த நிகழ்ச்சியைப் பற்றி யாரேனும் பேசினாலும கோவிலனுக்காகக் கண்ணீர் விட்டாலும் அவர்களைத் தூக்கிலிடுவது நிச்சயம் என்று உத்தரவிட்டான். சந்திரா தங்கியிருந்த வீட்டிலுள்ள பால்காரக் கிழவி கோவிலன் நிலையை உணர ஒரு தந்திரம் செய்தாள். ஒவ்வொரு தரமும் ஒரே வீதியில் செல்லும்போதும் வெவ்வேறு பண்டங்களைக் கூவி விற்கத் தொடங்கினாள். அதைப்பார்த்த ஒருபெண் "நேற்று காற்சிலம்பை விற்க வந்த வாலிபனைப்போல் இவளுக்கும் புத்தியில்லை. நாள் முழுவதையும் போக்கிவிட்டுக் கடைசியில் வெட்டுண்டு இறந்தான்" என்றாள். உண்மையை அறிந்த கிழவி தனது பால்சட்டியைக் கீழே போட்டுவிட்டு அழுதாள். அது கண்ட அரசனின் சேவகர்கள் இது சட்ட விரோத மானது என்று கூற "நான் என் சட்டிக்காக அழுகிறேன்" என்கிறாள்.

நகரம் எரிந்தபோது கண்ணகியின் தலையும் எரிந்தது. பால்காரி அவள் தலையில் வெண்ணெயை வைத்து எங்களைக் காப்பாற்று, என்று கூற ஆயர் குலத்தாரைத் தீ எரிக்கவில்லை. அரசனையும் அரசியையும் பொற்கொல்லனையும் எரி கொல் கின்றது. பொற்கொல்லனின் இருதயத்தைக் கழுகுகளுக்கு வீசி உங்களுடைய குஞ்சுகளைக் கொன்றதற்குப் பழி இதுதான் என்று கூறினாள். மௌலியும் அவளது தாயும் நெருப்பிற்கு இறையா னார்கள்.

உடல் கிடந்த இடத்தில் ஆகாய வெளியிலிருந்து ஊசியும் நூலும் வந்துவிழவே, சந்திரா அவைகளை வைத்துக்கொண்டே உடலின் எல்லாக் கூறுகளையும் ஒன்றாக வைத்துத் தைத்தாள். மகாதேவனை வேண்ட கோவிலன் உயிர் பெற்றெழுந்தான்.

இங்ஙனம் சிலப்பதிகாரக் கதைக்கும் தக்காணத்துப் பண்டை நாட்களுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைக் காட்டவே இத்தழுவல் கதையை எழுதினார் எனலாம். மேலும் கண்ணகிக் கதை பல நாடுகளிலும் வழங்கி வந்த ஒன்று என்று கூறவும் விரும்பினார் போலும்.

## மத்தளக்காரன்

மத்தளக்காரன் கதை சிறுவருக்காக எழுதப்பட்ட மந்திரவாதிக் கதை. ஏரிக்கரையிலே மூன்று சிற்றாடைகளைக் கண்ட மத்தளக் காரன் ஒருவன், அந்த ஆடைகளுக்குரிய அரசகுமாரியைத் தூக்கத்திலே கண்டு, அவள் ஒரு சூனியக்காரக் கிழவியிடம் சிறைப் பட்டிருப்பதையும், அக்கண்ணாடி மாளிகைக்குப் போகும் வழியை யும் அறிகிறான். பலவித இடையூறுகளையும் தாண்டி, சூனியக் காரியைக் கொன்று அரசகுமாரியை மீட்கிறான். அரசகுமாரியை அவள் நாட்டில் விட்டுவிட்டு வீடு திரும்புகிறான். அங்கே தன் தந்தையின் கட்டளைப்படி வேறொரு பெண்ணை மணம்புரிய விருக்கும் தருணத்தில் அரசகுமாரியே மணமகனைத் தனியே சந்தித்து, தன்னை நினைவூட்டவே அவன் அரசகுமாரியை மணந்துகொள்கிறான்.

## பாலகோபாலன் வழக்கு

பாலகோபாலன் வழக்கு என்ற கதையும் சிறுவருக்காக மொழி பெயர்க்கப்பட்ட ஒன்று. தன் ஒரே மகளான சுந்தரியோடு வாழ்ந்துவந்த ஏழைத்தாய் சுமதி, மதுரையில் ஒரு சாப்பாடு விடுதி நடத்தி வருகிறாள். ஒருநாள் மூன்று பிரயாணிகள் அங்கு வந்து அவளிடம் ஒரு பணமுடிப்பைக் கொடுத்துவிட்டு, 'நாங்கள் மூவரும் வந்து கேட்டால்தான் பணமுடிப்பைக் கொடுக்கவேண்டும் என்று கூறி ஒரு ரசீதையும் வாங்கிச் சென்று விடுகிறார்கள். சிறிது நேரத்தில் அவர்களுள் ஒருவன் தனியே வந்து, கிழவியை ஏமாற்றிப் பண முடிப்பைக் கொண்டுசென்றுவிடுகிறான். ஏனைய இருவரும் சுமதிபேரில் வழக்குத் தொடுக்கின்றனர். கிழவியே பணமுடிப்பை இருவருக்கும் தரவேண்டுமென்று பஞ்சாயத்தார் தீர்ப்பளிக்கவிருக்கும் தருணத்தில் அங்கிருந்த பாலகோபாலன் என்ற சட்ட மாணாக்கன் "மூவரும் வந்து கேட்டால்தான் கொடுக்க வேண்டுமென்று இருப்பதால், இருவர் வந்து கேட்கின்ற நிலையில் அவள் கொடுக்க வேண்டியதில்லை" என்று கிழவிக்காக வாதாடி வெற்றியும் பெறுகிறான். தான் காதலித்த சுந்தரியையும் மணம் புரிகிறான்.

## கற்பனைக்கதைகள் :

பேசாமடந்தை, ஓரிரவு ஆகிய கதைகள் பேராசிரியரின் கற்பனைத் திறனுக்குச் சான்றுகளாய் உள்ளன.

## பேசாமடந்தை

அதிகமாகப் பேசிப் பொழுதைக் கழிப்பது செயலார்வத்தைக் குறைக்கும் என்பதைப் பேசாமடந்தை காட்டுகிறது. கோபுவும் சுகுணாவும் மருத்துவக் கல்லூரி மாணவர்கள். மேடையில் பேசத் தெரியாத கோபு, சுகுணாவின் கேலியால் பெரிய பேச்சாளனாக மாறி, கேட்போர் மனத்தைப் பிணிக்கும் ஆற்றல் உடையவனாக விளங்குகிறான். பட்டம் பெற்ற பின்னர் இருவரும் திருமணம் செய்துகொள்கின்றனர். பேச்சில் கவனம் போய்விட்டபடியால், நோயாளிக்கு ஆபத்து விளைவிக்கும் மருந்தைக் கோபு ஒருநாள் எழுதிடவே, பக்கத்தில் இருந்த சுகுணா அவனைத் திருத்துகிறாள். ஒருநாள் இருவரும் பந்தாடிக்கொண்டிருக்கும்போது, சுகுணாவின் பந்தடிமட்டை கோபுவின் தலையில் பலமாகப் பட்டுவிட, கோபுவிடம் அதுவரை இருந்த பரபரப்பு நீங்கியது. சொற்பொழிவிலிருந்த ஆர்வமும் போய்விடுகிறது.

## ஓரிரவு

வேறு வேலை கிடைக்காததால் ஒரு கம்பெனியில் சம்பளமின்றி வேலை பார்க்கிறான் சோமு. ஒருநாள் இரவு அலுவலகத்தில் இருக்கும்போது, சில கொடியவர்களால் துரத்தப்பட்ட ஒரு பெண் அங்கு ஓடி வருகிறாள். அவளைப் பத்திரமாக அவள் வீடு கொண்டு சேர்க்கிறான். அவள் தன் பாலிய நண்பனின் தங்கை என்பதை அறிந்து பிறகு அவளையே திருமணம் செய்துகொள்கிறான். இது ஓரிரவு கதை.

ஒரு கலைஞனின் குண நலன்களும் மனநிலைகளும் அவனது படைப்புக்களின் மூலமே வெளியாகின்றன. பேராசிரியரது படைப்புகளைப் பார்க்கும்போது அவரது வாழ்க்கைச் சூழல், விருப்பு, வெறுப்பு ஆகியவற்றின் பின்னணியில் அவர்தம் படைப்புகள் அமைந்திருப்பதைக் காணலாம். பேராசிரியர் குடும்பத்தில் மகன்களும் மாப்பிள்ளைகளுமாக ஆண்கள் எழுவர். மகன்களுள் ஒருவர் சட்டம் படித்தவர், மற்றொருவர் மருத்துவர். அவர் மேற்படிப்பிற்சாக இங்கிலாந்து சென்றவர். பேராசிரியர் தம் பெண்களுக்கும் பி.ஏ. படித்தவர்களையே மாப்பிள்ளைகளாகத் தேர்ந்தெடுத்தார். பிறகு அவர்களைச் சட்டப் படிப்பும் படிக்க வைத்தார். பேராசிரியரும் சட்டப் படிப்பு படித்தவர்தான். ஓரிரவுக் கதையில் ஏ. ஆர். பி. சட்டத்தைக் குறிப்பிடுவதிலிருந்து அவரது சட்ட நுணுக்கமும் ஆர்வமும் புலனாகின்றது. அவரது கதை நாயகர்

களிடம் இத்தகுதிகள் ஒன்றோ பலவோ அனைத்துமோ இருக்கக் காணலாம். நாவலில் வரும் நாணு, ரங்கு, மணிமுடிமாளிகை, ஓரிரவு, ராமுவின் சுயசரிதம் நாயகர்கள் சீனு, சோமு, ஆகியோர் பி.ஏ. பட்டம் பெற்றவர்கள். நாவல் நாணுவும், ரங்குவும் மேல் படிப்பிற்காக இங்கிலாந்து செல்கிறார்கள். சீனு செல்லவிருக்கிறான். சுசீலையின் நாயகன் ராமநாதன் ஆராய்ச்சியாளன். பேசாமடந்தை கோபாலனோ மருத்துவக் கல்லூரி மாணவன். பாலகோபாலன் வழக்கில் பாலகோபாலன் சட்டக் கல்லூரி மாணவன். இவர்களைச் சென்னையிலே கற்பவர்களாக, பட்டம் பெற்றவர்களாகக் காட்டுகிறார்.

பேராசிரியர் தமது படைப்புக்களில் பலரையும் இசைஞானம் உடையவர்களாகக் காட்டியிருப்பது அவருக்கு இசை மீதுள்ள ஈடு பாட்டைக் காட்டுகின்றது. பேராசிரியர் தம் பெண்களுக்கு இசைப் பயிற்சியும் இசைக்கருவிப் பயிற்சியும் அளித்தவர். மக்கள் மிகவும் நாகரீகம் அடைந்துள்ள இந்நூற்றாண்டில் கூட, பெண்கள் கல்வி பயிலுவதை எவரும் விரும்புவதில்லை. ஆனால் பேராசிரியர் இந் நிலைக்கு முற்றிலும் மாறுபட்டவர். அவருடைய படைப்புகளில் பெண்கள் கல்வியறிவுடையவர்களாகத் திகழுகின்றனர். ராஜி நாவலில் பங்கஜி, வரதன் ஆகியோரின் வாயிலாகப் பெண்கள் கல்வியின் தேவையை வலியுறுத்துகிறார். படித்த பெண்களிடத்தும் எளிமை, இனிமை, அடக்கம் ஆகியவை காணப்படுதலை ராஜியின்மூலமாக எடுத்துக் காட்டுகிறார். பெண்கள் கல்வி அறிவுடையவர்களாகவும் அஞ்சா நெஞ்சம் உடையவர்களாகவும் திகழ வேண்டும் என்ற விருப்பு அவர் கதைகளிலே பிரதிபலிக்கின்றது. பெண்களைப் படித்தவர்களாகப் (ராஜி, பத்மா,-சுகுணா, ரங்கநாயகி), பாடும் திறனுடையவர்களாக (சுசீலை, ருக்கு), தைரியம் உடையவர்களாகக் (ராஜி, பத்மா,சுரைதா) காட்டுகிறார். ரங்கநாயகி தன் படிப்பிற்காகத் திருமணத்தை மூன்றாண்டுகள் தள்ளிப் போடுவதும் பெற்றோர் அதற்கு மறுப்புச் சொல்லாததும் பெண் கல்வியின் முக்கியத்துவத்தை உணர்த்துகிறது. அக்காலத்தில் பெண்கள் துணையின்றி பயணம் மேற்கொள்வது அரிது. 'ராமுவின் சுயசரித நாயகி பத்மாவை ரயிலில் தனியே பயணம் செய்பவளாகக் காட்டுகிறார். நாவலில் ராஜி தந்தையிடம் தன் காதலை வெளிப்படுத்துகிறாள். உதிர்ந்த மலர் நாயகி சுரைதா, தன் தந்தை தன்னை ஒரு கிழவனுக்கு மணமுடிக்கவிருப்பதைக் கண்டு அவரிடம் நேரிடையாகவே எதிர்ப்பு தெரிவிக்கும் அளவிற்கு மனத்திடம் வாய்ந்தவள்.

ஆசிரியர் மாணாக்கர் உறவு பற்றியும் தம் நாவலில் குறிப்பிடு கிறார். நாணுவின் மாணவனான அமுது, தன்னுடைய ஆசிரியரைப் பிறர் விளையாட்டுக்குக்கூட குறை கூறுவதை விரும்பவில்லை.

பேராசிரியர் விதவை மறுமணத்தையும் ஆதரிப்பதாகத் தெரிகிறது. நாவலில் லட்சுமி அம்மாள் என்ற துணைப் பாத்திரம் மறுமணம் செய்வதாகக் காட்டப்படுகிறது. நாவலின் பிற்பகுதியில் ஒரு சோகச் சூழ்நிலை உருவாகிறது. ராஜியின் உடல் நிலையே அதற்குக் காரணம். ரங்கு, கமலியின் திருமணம் மற்றொரு காரணம். இந்நிலையில் வாசகர்களை உற்சாகப்படுத்தும் எண்ணத்துடன் ஒரு காதல் காட்சியும் இடையில் புகுத்தப்படு கிறது. அன்றாடம் நடக்கும் காட்சிகளும் நாவலில் சித்தரிக்கப் படுகின்றன. விருந்தினர்களை உபசரிக்கும் முறையும், அவர்களை மகிழ்விக்க இசைக்கச்சேரி நடத்துவதும் தமிழர் பண்பாட்டை விளக்குகின்றது.

உள்ளத்தில் ஒருவனை நினைத்துவிட்டால், அவனையே திருமணம் செய்துகொண்டு வாழவேண்டும்; இல்லையேல் தன் வாழ்வை முடித்துக்கொள்ள வேண்டும் என்று முயலுகின்ற வாழ்க்கைக்கு ஒவ்வாத இலட்சியக் காதல் அவர் நாவலில் காட்டப் படவில்லை. அதைப்போலவே திருமணத்திற்கு முன்பே காதல் என்ற பெயரால் உடலுறவு கொண்டு வாழ்வை பிரச்சினைக்குள் ளாக்கும் காதலும் நாவலில் காட்டப்படவில்லை. அதனால்தான் ராஜி, ரங்குவை முதலில் விரும்பினாலும் பின்னர் நாணுவை மனப் பூர்வமாக ஏற்றுக்கொள்கிறாள். இதைப்போலவே ருக்குவும் முதலில் நாணுவை மணம்புரிய விருப்பம் கொண்டாளாயினும் பின்னர் நாணுவின் விருப்பப்படியே வரதனைத் திருமணம் செய்ய மனம் ஒப்புகிறாள்.

கதைநாயக, நாயகிகளை அறிமுகம் செய்யும்போது, அவர்தம் முழுப்பெயர்களையும் தொடர்ந்து அவர்களது சுருக்கப்பெயர்களை யும் தரும் உத்தியும் கையாளப்படுகிறது. ஸ்ரீனிவாசன் சீனுவாக வும் (மணிமுடி மாளிகை) ராமநாதன் ராமுவாகவும் (ராமுவின் சுய சரிதம்) கோபாலன் கோபுவாகவும் (பேசா மடந்தை) மாறி யுள்ளனர்.

பேராசிரியரது இலக்கிய ஆர்வமும் அவர் கதைகளிலே வெளி யாகின்றது. இலக்கியத்தை, இலக்கியம் பற்றிய குறிப்புகளை,

ஆங்காங்கே, சுவை குன்றாமல் நுழைத்துள்ளார். மணிமுடி மாளிகையிலே காதல் கண்களின் சந்திப்பை கூறும்போது திருக்குறளும் (கண்ணோடு கண்ணினை.......) காட்டப்படுகிறது. சுசீலை பாரதியார் பாடல்களைப் பாடுகிறார். ராமுவின் சுய சரிதத்தில், பாரதியாரின் 'எல்லோரும் ஓர் குலம்' கொள்கை சுட்டப்படுகிறது. நினைவுப் பரிசுகளாகக் கொடுப்பவை எல்லாம் நூல்களாகத்தான் உள்ளன. ராமு, பத்மாவிற்கு, ஷெல்லியின் கவிதைகளைப் பரிசளிக்கிறான். பேசா மடந்தை கோபு கன்னிமரா நூல் நிலையத்திற்குச் சென்று படிக்கிறான்.

சொற்பொழிவு பற்றிய தமது கருத்தைப் பேசாமடந்தையின் மூலம் வெளியிடுகிறார். தன் கருத்தைப் பிறர்க்கு வெளியிடும் பேச்சாற்றல் தேவைதான். ஆனால் அதுவே மேடைப்பேச்சாக மாறுவது கூடாது, என்பது அவர் கருத்து. இதை அவர் தம் நண்பர்கள் பலரிடமும் கூறியுள்ளதாகத் தெரிகிறது. ஒருவருடைய சொற்பொழிவைப் பிறர் ஆவலுடன் கேட்பது மிகக் குறைந்தகால அளவு மட்டுமே. பிறகு கேட்பவர்க்கு அவர் பேச்சில் ஆர்வம் குறைந்துவிடும். மேலும் அதிகமான பேச்சால், செயல்திறனும் செயலார்வமும் குன்றிவிடும் என்று நினைக்கிறார். இவரது இக்கருத்தின் பிரதிபலிப்பே பேசாமடந்தை நாயகன் கோபு என்கிற பாத்திரப் படைப்பு.

இவ்வாறு நாவல், சிறுகதை உலகிலும் தமது முத்திரையைப் பதிக்கவேண்டும் என்ற ஆர்வத்தின் காரணமாக எழுதப்பட்ட இக்கதைகள் உயரிய இலட்சியங்களைக் கொண்டனவாக அமைந்துள்ளன என்பதில் ஐயமில்லை.

## கவிதைகள்

ஆராய்ச்சி என்பதே, பொதுவாக, எல்லோராலும் பெரிதும் விரும்பப்படாத ஒரு துறை. அதிலும் கால ஆராய்ச்சி என்பது கடினமான ஒன்று. பேராசிரியரின் ஆராய்ச்சி 'உள்ளத்திலே இனிய கவிதை ஊற்றும் அமைந்திருந்தது. இளம் பருவத்திலேயே கவிதைபாடும் ஆற்றல் பெற்றிருந்தார் என்பது குறிப்பிடுவதற்குரியது. கவிதை அரங்குகளிலும் பங்குபெற்றார். ஆராய்ச்சி நூல்களைத் தொடர்ந்து வெளியிட்டுக் கொண்டிருக்கும்போது உள்ளத்தில் ஏற்படும் சலிப்பை நீக்குவதற்குக் கவிதைகளும் இயற்றினார் போலும்.

1946-லிருந்து 1955 வரை, அதாவது உயிர் நீப்பதற்கு ஓராண்டுக்கு முன்னர்வரையிலும் கவிதை இயற்றுவதில் அவரது உள்ளம் பெரிதும் ஈடுபட்டிருந்தது. இக்காலப் பகுதியில் அவர் எழுதியுள்ள கவிதைகளில் சில வெண்பாக்கள். சில வெண் செந்துறை, விருத்தம் முதலிய வடிவங்களில் அமைந்துள்ளன. மரபுநெறி வழுவாது பாடலியற்றுவதில் ஆர்வம் காட்டினார். இலக்கிய உதயம் இரு பகுதிகளில் சில மொழிபெயர்ப்புக் கவிதைகள் வெளியிடப்பட்டுள்ளன. பிற கவிதைகள் இதுவரை அச்சேறாதவை. இக்கவிதைகள் இப்பகுதியில் என் செல்வங்கள், என் செய்கேன், மெலிவு ஏன், விளையுமிடம், என்ன உறவு, வள்ளுவர் திருப்பெயர்கள், தமிழ்ப்பணி, வாழ்த்துப்பாக்கள், இரங்கற்பாக்கள், மொழிபெயர்ப்புக் கவிதைகள் ஆகிய தலைப்புகளின் கீழ் கொடுக்கப்பட்டிருக்கின்றன. மொழிபெயர்ப்புக் கவிதைகளில், எகிப்தியக்கவிதை, சீனக் கவிதை, ரிக்வேதக் கவிதை, அதர்வனவேதக் கவிதை, புத்தர் கதை, ஜாதகக்கதை, ஆங்கிலக் கவிதை ஆகியவை அடங்கும். இவரது கவிதைகளில் பெரும்பகுதி மொழிபெயர்ப்புக் கவிதைகளாகும்.

பேராசிரியரின் கவிதைகளுள் ஒரு பகுதி, காதல் தத்துவத்தை உட்பொருளாகக் கொண்டு எழுதப்பெற்றதாகும். காதலைப் பாடும் பல கவிதைகளை இயற்றியதோடு ஷெல்லியின் Love's Philosophy என்ற ஆங்கிலக் கவிதையையும் மொழிபெயர்த்துள்ளார். பேராசிரியர் கவிதைகளுள் 'என்ன உறவு' குறிப்பிடத்தக்கது. வெறும் உடலுறவை மட்டும் கருதாது, தெருவில் விளையாடும் பருவத்திலிருந்தே தோழமை கொண்டு உறவாடி வளர்ந்த காதலைத்தான் இப்பாடல் விளக்குகிறது. ஆனால் இதன் இறுதிப்பகுதியில் ''இத்தனையும் உனக்கு நேர்ந்ததில்லையே. பின் ஏன் அவள் நினைவால் ஏங்கி நைகின்றாய்'' என்று இளமை வாழ்வில் இந்நிகழ்ச்சிகள் நடக்கவில்லை என்று கூறுவது பெரு நயம் தருகின்றது. பவளம் விளையுமிடும் காதலியின் இதழ், முத்தம் விளையுமிடம் அவள் நகை, தேன் விளையுமிடம் அவள் மலர்வாய் என்றெல்லாம் எழுதி அவளையே அன்பு, இன்பம், காதல் ஆகியவற்றின் விளைவிடமாகக் குறிப்பிடுவது மரபுவழி அமைந்தாலும் நயம் தரும் ஒன்றாகும். காதல் தோல்வியைக் காட்டுவது ''மெலிவு ஏன்'' என்றகவிதை. உணர்வுக் கவிதையாக உள்ளது 'என் செல்வங்கள்' என்ற கவிதை. சோர்வு, ஐயம், சோகம், போராட்டம், துன்பம் இவற்றையெல்லாம்

முறையே திண்மை, நம்பிக்கை, கவிதை, பொறுப்பு, இரக்கம் ஆகியவற்றைத் தந்த வள்ளல்களாக உணர்கிறார்.

நண்பர்களுடைய இன்ப துன்பங்களிலே பங்குகொள்ளும் மனநிலையை இவரது வாழ்த்துப் பாடல்களும் இரங்கல் பாடல்களும் குறிக்கின்றன. திரு. ஏ. ஆர். முத்தையா, திரு. ராமசாமி ஆகியோரின் திருமண வாழ்த்துக்கள், திரு. காசிநாதனின் புதுமனை விழாவிற்கு ஆசிச்செய்திகள் ஆகிய வெண்பாப்பாடல்களை இயற்றியுள்ளார். நித்தியானந்தர் உரை வெளியீடு, ரங்கையங்காரின் அறுபதாண்டு விழா, காரைக்குடி இந்துமதச் சங்க வெள்ளி விழா, பரமேசுவரப் பணிக்கர் திருவாங்கூர் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தராகப் பதவியேற்றது முதலிய நிகழ்ச்சிகளில் மகிழ்ச்சியோடு பாமாலை பாடுகிறார். வேணுகோபால் நாயுடு இயற்றிய வடவரங்க ஆற்றுப்படைக்கும் சதாவதானம் ஆறுமுகம் பிள்ளை இயற்றிய அண்ணாமலைக் காவியத்திற்கும் முறையே சாற்றுக்கவியும் சிறப்புப் பாயிரமும் அளித்துள்ளார். டி.வி.சீனிவாச ஐயங்கார் நினைவு மலரிலும், ஸி. ஆர், கோவிந்தராச முதலியார் உயிர் நீத்த போதும் கையறுநிலைச் செய்யுள் இயற்றியுள்ளார்.

தத்துவக்கருத்துக்களின் பால் இவருக்கிருந்த ஆர்வம் உலக மொழி இலக்கியங்களின் தத்துவக் கருத்துக்களைக் கவிதைகளாக்கி வெளியிடச் செய்தது. எளியகவிதை இயற்றும் திறமைக்குக் கீழ்வரும் பாடல் சான்று.

அலறின பாறைக்கூட்டம்; அலறின சிற்பமெல்லாம்;
அலறின குகைகள் ஏங்கி; அலறின ஆழ்ந்த பள்ளம்;
அலறின நதிகள் துள்ளி; அலறின பிறவைக்காகும்;
அலறின ஷிரீனென்றேங்கி; அலறின புவனமெல்லாம்.

பேராசிரியர் இயற்கையிலேயே நகைக்சுவை உணர்வு உடையவர். உரையாடும்போதே நகைச்சுவை தவழும். அதைப் போன்றே இக்கவிதைகளிலும் நகைச்சுவை அமைந்திருக்கின்றது. எடுத்துக்காட்டாக தோப்பிலுள்ள வடுக்களை உலுக்கியதுண்டா? நீங்கள் உடனிருந்து அவற்றைப் பங்கு கொண்டதும் உண்டோ? அப்பொழுது தோட்டக்காரர் அங்கு வரவே நீங்கள் அடித்துப் புரண்டோடியே அகன்றதுண்டோ? என்ற பாடலில் அயலார் தோட்டத்திலுள்ள மாவடுவைக் களவாடும்போது தோட்டக்காரன் வர அடித்துப் புரண்டோடும் சிறுவன் செயல் நகைச்சுவையோடு

காட்டப்படுகிறது. தெருவில் ஒரு நொண்டி போகப் பார்த்துத் தீராமல் நீங்கள் சிரித்துச் சிரித்தவன் தாவிச்சென்ற பின்பு இரு வரும் நொண்டியாக எதிர் நடந்தே-நீங்கள் இனிய நட்பு முன்னையிலும் ஏற்றதுமுண்டோ? என்ற பாடல், தொல்காப்பிய மெய்பாட்டியல் உரையில் காணப்படும் 'முடவர் செல்லும்செலவின் கண்ணும் நகை தோன்றும்' என்ற செய்தியை விளக்கி நிற்கிறது.

பேராசிரியரின் கவிதையடிகள் சில பிற கவிஞர்களின் கவிதை களை நினைவூட்டுபவையாக உள்ளன. பாரசீகக் கவிதைகளெல் லாம் கவிமணியின் பாடல்களை ஒத்தவை. 'ஆற்றங்கரையில்' என்று தொடங்கும் பாடலும், 'நட்ட நடுநிசியில் காணும் நட்சத்தி ரங்களன்ன' என்ற அடியும் பாரதியாரை நினைவூட்டுகின்றன. கவிமணியார் சைக்கிள், காப்பி, சோப்பு முதலிய பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்துவது போலவேபேராசிரியரும் டு விடுதல் பலீன் சடுகுடு, மார்க்கு ஆகிய சொற்களைக் கையாளுகிறார்.

## தமிழ்த்தாய் வாழ்த்து

இளமை முதலே தமிழின்பால் பேராசிரியருக்கு இருந்த ஈடு பாட்டை அவர் வாக்கின் மூலமே அறியலாம்.

என்னை உணர்ந்த இளம்பருவம் முதற்கொண்டே
உன்னை உயிரெனக் கொண் டோம்பினேன்-மன்னுபுகழ்த்
தெய்வத் தமிழன்னைநின் சேவடிக்கே ஆளாக்கி
உய்விக்கக் கொள்வாய் உளம்.

(அரும்பொருள் விளக்கநிகண்டு : முன்னுரை)

## தமிழ்ப்பணி

தொன்று தோன்றிய யாவையும் தூயன
இன்று தோன்றிய யாவையும் தீயன
என்று கோடல் இயல்பல உண்மையின்
நன்றுநாடி நயங்கொளல் நன்றரோ.
இன்னவாறு நயந்தெழுந் திங்குநம்
அன்னை தாய்மொழிக் காற்றுகம் பல்பணி

## என் செல்வங்கள்

எண்ணிப் பார்க்கட்டும் எத்தனை செல்வங்கள்
என்னுயிர்க்கே அருமையா யுள்ளவை

மண்ணில் நான் அஞ்சும் வல்லிருட் பேய்க்கணம்
வாரித் தந்தெனை வாழ்ந்திடச் செய்தவை.

நாசப்பேர் நரகத்தே இராப்பகல்
நான் அழுந்த நசுக்கிய நோவுதான்

ஆசகற்றி ஒளியோ டணிந்திடும்
ஆற்று திண்மைக் கவசம் அளித்தது.

மயங்கு பாழ்க்குகை மாய இருளிலே
வந்து மல்கி மறிந்திடும் ஐயந்தான்

வயங்கும் ஒப்பில் மணியென யாவரும்
மதிக்கும் நம்பிக்கை தன்னை அளித்தது.

நீண்ட நாளா நெருக்கி வருத்தியென்
நெஞ்சிற் பொங்கிக் குமுறிய சோகந்தான்

காண்டகும் புகழ் நல்லொளி வீசிடும்
கவிதை யென்னும் கவின்முடி தந்தது.

ஏய்முடியும் அமைதியும் இன்றியே
என்னுயிரை யரித்த போராட்டந்தான்

ஆயும் நன்மணம் வீசியென் உள்ளத்தே
அலரும் நற்பொறுமையணி ஈந்தது.

சுழிகொள் பேரழ கொன்றும் உணராமல்
தொய்ந்து நைந்து வருந்திநான் அஞ்சிய

எழில்கொள் துன்பமாம் நங்கை மகிழ்ந்தென்கை
இரக்கமென்னு மகவொன்றை நல்கினள்.

இவ்வணம் என்தன் செல்வங்கள் எத்தனை
இறந்த பன்னெடு நாட்களில் கொண்டவை

இவ்வணம் அறிந்தேன் வள்ளலார்களை
இவர்கட்கென்றும் என் நன்றி என் நன்றியே.

## என் செய்கேன்

ஆராத காதல் என் அகத்திற் படையெடுத்துத்
தீராத போராட்டம் செய்யுமால் : என்செய்கேன்.

கண்பாயுங் காட்சியெலாம் கண்டு கண்டே என்மனந்தான்
புண்பாய்ந்து பாய்ந்து புழுங்குமால் ; என்செய்கேன்.

பொல்லாத நோக்குப் புகுமிடமெலாம் புகுந்து
வல்லாமை கொண்டு மனம்மறுகுமால் : என்செய்கேன்.

கள்ளம் பயின்ற கவிழ்நெடுநோக் காடவரை
உள்ளம் அழித்தல் கண்டேன் ஒல்குமனம் : என்செய்கேன்.

இளையாரைக் காணின் அவள் இதய மகிழ்ந்து செயும்
களியாட்டம் கண்டு மனம் கலக்குறுமால் : என்செய்கேன்.

செம்பவழ வாயால் சிறுபுன்னகை கோட்டி (அமுதம்)
நம்பியர்க்கு வீதியினில் நல்குகின்றாள் : என்செய்கேன்.

சினிமாப் பிரைகளிலே சென்றருகி லாடவர்மேல்
தனிநோக்கு வீசிக்கைகால் சரிக்கின்றாள் : என்செய்கேன்.

ஓய்வுத் தினங்களிலே உற்ற நண்பர் வீடுசென்று
நேயத்திறங் காட்டி நேர்கின்றாள் : என்செய்கேன்.

அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் என்றுசொலி
அன்பிற்குத் தாழிட்டு அகற்றுகின்றாள் : என்செய்கேன்.

ஆசை யினியமொழி அன்பொழுகப் பேசியெனை
நாசமுறச் செய்துவிட்டாள் நங்கைதான் : என்செய்கேன்.

வாய்குளிரப் பேசி மனங்குளிர வைத்து ஆட்டி
நோய் பெருகத் துன்புறுத்தி நோக்குகின்றாள் : என்செய்கேன்.

ஆகாத குற்றம் அளவிலயே செய்திடினும்
மாறாகாதல் என் மனத்தே வைத்துவிட்டாள் ; என்செய்கேன்.

பொல்லாத கண்கள் எனைப் புண்ணாய்த் துளைத்து நித்தம்
கொல்லாமற் கொல்லும் ஐயோ கோதை நல்லாய் :
என்செய்கேன்.

பால்போல் நிலவெறிப்பப் பைந்தழல்போல் நெஞ்சழல
வேல்போல் விழியழகி விதிசெய்தாள் : என்செய்கேன்.

கண்ணால் உலகளந்து காதல் உரையளந்து
எண்ணால் எனையளந்தாள் ஏய்த்துவிட்டாள் ; என்செய்கேன்.

## மெலிவு ஏன்

தானா லொடுங்கியொரு நங்கையினைப் பின்தொடர்ந்து
கானா வருமவர்கள் கண்ணால் நகை செய்ய
பூணா ரிள நலத்தால் உள்ளம் பொருமியெழ
வீணாசை கொண்டே மெலிந்தேன், மெலிந்தேனே.

வாளோ வடிவேலோ மென்பிணையோ வன்பகையோ
கேளோ எனக் கிடந்த கெண்டைத் தடங்கண்ணாள்
மாளாத காதல் வயப்பட்டு வாளா அவள்
தோளாசை கொண்டேன் துரும்பாய் மெலிந்தேனே.

கொல்லுங் கருங்கண்ணும் கொடிய அரவென்னச்
செல்லுங் கருங்குழலும் சீர்த்த மதிமுகமும்
அல்லும் பகலுமென தாசை வளர்த்திட்ட
மெல்லென் குறுநகையும் மெலிவிக்கத் தேய்ந்தேனே.

## விளையும் இடம்

முத்தம் விளையுமிடம்
மொழிந்திடுவாய் தேர்ந்தென்றார்
தத்தை மொழி நங்கை
தவள நகை விடத்தென்றேன்.

பவளம் விளையுமிடம்
பகர்ந்திடுவாய் தேர்ந்தென்றார்
குவளை யெனுங் கண்ணாள்
கொவ்வையித ழிடத்தென்றேன்.

செந்தேன் விளையுமிடம்
செப்பிடுவாய் தேர்ந்தென்றார்
இந்தே யெனுமுகத்தாள்
இனிய மலர் வாயென்றேன்.

அன்பு விளையுமிடம்
ஆய்ந்தே மொழியென்றார்
துன்பம் எனைச்செய்த
சுசீலை மனத்தென்றேன்.

காதல் விளையுமிடம்
கருதி மொழியென்றார்
வாழ்தல் அளித்த மங்கை
வாட்கண்ணிடத்தென்றேன்.

இன்பம் விளையுமிடம்
எங்கே மொழியென்றார்
முன்புற்று நின்றாள்
மொழியிடத்தே தானென்றேன்.

## என்ன உறவு

உனக்கும் அவனுக்குந்தான் என்ன உறவு? - நீ
ஓயாமல் அவளையே உன்னி நைகிறாய்
உனக்கும் அவளுக்குந்தான் என்ன உறவு? - நீ
உற்றதைச் சொல்லிடு என்தன் உள்ளமே.

சின்னப் பொழுதிலுனைத் தெரிந்த துண்டோ? - நீங்கள்
தெருவில் விளையாடித் திரிந்த துண்டோ?
மன்னு மணல்வீடு கட்டி மாப்பிள்ளை பெண்ணாய் - நீங்கள்
வாழ்ந்து குலாவிமிக மகிழ்ந்த துண்டோ?

ஓடி விளையாடும் பருவத்திலே – நீங்கள்
உற்றுக் கண்ணாப் பொத்தியினில் உவந்த துண்டோ?
நாடி வட்டாட்டங்களில் நயந்த துண்டோ? - நீங்கள்
நாற் புறமுந் தோட்டங்களிற் சுற்றியதுண்டோ ?

வீட்டினில் மூலையொன்று விரும்பித் தேடி - நீங்கள்
மெய்மறந்து கதைகேட்டு மேவியதுண்டோ?
மேட்டினில் மாமரத்தின் மீதுதொத்தியே – அவள்
மென்கரத்தில் அடிவைத்துமேலேறியதுண்டோ?

கொப்பிலுள்ள வடுக்களைக் குலுக்கிய துண்டோ – நீங்கள்
கூடியிருந் தவற்றைப்பங்கு கொண்டது முண்டோ ?
அப்பொழுது தோட்டக்காரன் அங்குவரவே – நீங்கள்
அடித்துப் புரண்டோடியே அகன்ற துண்டோ ?

ஆற்றங்கரையில் அந்தி நேரத்தில் சென்று – நீங்கள்
அங்கே பலின் சடுகுடு ஆடியதுண்டோ?
கூற்றா யொருவன் போய்க் கோள்கள் சொல்லவே – உங்கள்
கூட்டுறவை நீக்க அம்மா கோபித்ததுண்டோ?

அண்டையி லிருந்து கொண்டு பற்பல பேசி - நீங்கள்
ஆர்வீடு பெரிதென்று கேள்வி தொடுக்க
சண்டைமுற்றித் தாக்கியொரு வரையொருவர் - நீங்கள்
தலைமயிர் பிடித்தடித்துத் தளர்ந்ததுண்டோ?

ஒன்றரைநாள் ரூவிட்டே ஓடியதுண்டோ? - நீங்கள்
உறங்காமல் இராப்பொழுதை ஓட்டியதுண்டோ?
அன்றொழிய மறுநாளில் அடுத்துநின்றே - நீங்கள்
அழகு காட்டிச் சமாதானம் ஆகியதுண்டோ?

தெருவிலொரு நொண்டிபோகப் பார்த்துத் தீராமல்-நீங்கள்
சிரித்துச் சிரித்தவன்தான் சென்ற தன் பின்பு
இருவரும் நொண்டியாக எதிர் நடந்தே - நீங்கள்
இனிய நட்பு முன்னையினும் ஏற்றதுமுண்டோ?

பள்ளிக்கு வந்துவிட்ட பருவத்தில் - நீங்கள்
பாங்காகக் கைவீசிப் பக்கம் பாராமல்
துள்ளிக்குதித் தோடமற்றத் தோழர்களோடே – நீங்கள்
தோழமை கொண்டேதுடுக்காய்ப் படித்ததுண்டோ?

மற்றொருவன் கூட அவன் பள்ளி செல்லவே – நீ
வாய்பிளந்து நோக்கிநின்று வாடி மெலிந்து
முற்றுமன்று பள்ளிச்செல்லு முறைதவிர்ந்தே – நீ
மூலையினில் உணவின்றி முடங்கியதுண்டோ?

விளக்கின்முன் படிக்க அவன் வீடுசென்றிட்டு – அங்கு
வேண்டும் புத்தகங்கள் கையில் மேவியிருக்க
அளக்கின்ற கதையெல்லாம் அவனிடத்தே – நீ
அளந்துவிட்டுன் வீடு சென்றமைந்தது முண்டோ?

மறுநாள் பள்ளியிலுந்தன் வாத்தியார் கேட்ட – ஒரு
வாய்க்கேள்வியின் பதில் நீமௌனம் சாதிக்க
திருநாள் இன்றுனக்கென்று செப்பி அவனும் - மிகத்
திருட்டாய்ச் சிரிக்க அடி தீர்த்ததுமுண்டோ?

மானம் பொறுக்காது வாய்க்குள்வைது விட்டே - இனி
வார்த்தை பேசேன் என்றுமன வயிரங்கொண்டு
போனவுடன் மாலையில் நீ ஆற்றுக்குப் போக - அவள்
புறமேவர, சிரித்து வாயைப் பொத்தியதுண்டோ?

நீரில் அவளிறங்கிக் குளிக்கும் அழகை - நீ
நெடிதாக நோக்கிநிற்க நீந்தியே சென்று
ஊரஞ்சும் மடுவிற் புக ஓலங்களிட்டே - நீ
ஓடிப் பாய்ந்து அவளைக்கரை உய்த்ததுமுண்டோ?

எந்நாளு மிலாதபடி மார்க்கதிகமாய் – நீ
ஏய்த்துவாங்கிவிட அதனை எண்ணியிருந்தே
அந்நாள் முழுதும் வார்த்தை யாடாதிருந்து – அவள்
அந்தியிலே குற்றங்கூற, அழுததுமுண்டோ ?

விடுமுறையிற் சொக்கட்டான் விரும்பியாடி – நீங்கள்
மெய்மறந்திருக்கத் தோற்று விடுவாயென்று
கடுதாகக் காயைப் பல கட்டங் கடத்த – அதைக்
கண்டு கோபங்கொண்டு கன்னங்கடிந்ததுமுண்டோ?

வருகுதொரு புலியென்று வாத்தியாரை – அவள்
வாய்க்குள் சொல்லிக் கேலிசெய்ய மகிழ்ந்து நீயும்
வருகுதொரு பூனையென்று வார்த்தை யுரத்துப் - பேச
மற்றவர்கள் சிரிக்க உதை வாங்கியதுண்டோ ?

இத்தனையும் உனக்கு நேர்ந்த தில்லையே - பின்
ஏனோ அவள் நினைவாய் ஏங்கி நைகின்றாய் ?
பித்தன் பித்தன் என்றுனது நண்பர்கள்தாமும்
பேசி நகைத்திடவோ பேதை யுள்ளமே.

இக்கவிதையைப் பேராசிரியர் 18-12-49 அன்று எழுதியதாகத் தெரிய வருகிறது.

## வள்ளுவர் திருப்பெயர்கள்

திருவள்ளுவர்தேவர் தெய்வப் புலவரி
பொருள்நாய னார்செந்நாப் போதார் - பெருநா
வலர் முதற் பாவலர் மாதானுபங்கி
மலர்நான் முகனார் வழுதது.

## முறுவற்பொருள்

பற்றியெரியும் வயிறென்பர் - பண்டு
பதப் பொருளல்ல தொன்றும் அறியேன்
முற்றும் அதன்பொருளை அறிந்தேன் நங்கை
முன்வரும் ஆடவர்கள் மீது
சுற்றும் விழிவலையைப் பரப்பித் தன்
சுதந்திரப் பவளவிதழ் ஒளிரச்
சற்று முகங்கவிழ்ந்து முறுவல் - செயும்
தனிப்பட்ட நட்பதனைக் கண்டே.

## வாழ்த்துப்பா

### ஏ. ஆர். முத்தையா அவர்களுக்குத் திருமண வாழ்த்து

ஆலங்குடியில் வருரத்ன மீன்ற அரியவிலை
சாலுஞ் செழுமுத்த மறீபுதமாகுமத் தன்மை கண்டே
மாலுந் தழைத்து மகிழ்மல ரேந்தி வணங்கி நின்று
சீலஞ் செழித்தே வளர்கின்றதா லொரு சீர்வல்லியே.

புனஞ் சென்றும் பொய்பகர்ந்தும் புதிதீன்ற மலர்மரமாய்ப்
பொலிந்து நின்றும்
வளங்கொண்ட துணைகொண்டும் வல்வழக்கால் வல்லியைமுன்
மணந்தா னென்ப
இனங்கொண்ட கிளைஞர்தர இன்னியங்கள் நன்கியம்ப
இயைந்த காதல்
மனங்கொண்ட இவ்வழக்கால் வல்லியையின் றிவன் மணந்தான்
வாழி மாதோ.

அன்பு வளர்க அறம் வளர்க ஆர்வலர்கள்
இன்பு வளர்க இசை வளர்க - நன்புலத்துத்
நீந்தே னனைய செழிய தமிழ்வளர்க
ஏய்ந்தே அருள்க இறை.

### திரு. இராமசாமி அவர்களுக்குத் திருமண வாழ்த்து

தீபன் குமாரி திருவனைய தங்கம்மாள்
கோபானமாய் ராம சுவாமியைத்தான்- நீப
வனமாலை யான்தனது மாண்பே ரருளால்
மணமாலை சூட்டினாள் வாய்ந்து.

### திரு. வி. உலகநாத முதலியார் மணிவிழா வாழ்த்து

சைவசமயத் தனித்தொண்டன் தாங்கருஞ்சீர்த்
தெய்வத்தமிழின் விருந்தொண்டன் - வையத்(து)
இறைவ னெனும் பேரான் இனியான் இனிதே
உறைகநெடி தூழி உவந்து.

### கிருஷ்ணசாமி பஞ்சகம்

செந்தமிழ்க்குத் தொண்டு புரிந்து சிறக்கவென
முந்த எனையழைத்து முன்பிருத்தி – நந்தாத
பேரும் புகழும் பெருக எனக்களித்த
சீரன் திருநாமம் செப்பு.

கிட்டன் என வழங்கும் கேண்மைக் கினியபெயர்
மட்டென்று தித்திக்க வாய்மொழிந்து – சிட்டனவன்
மெய்ப்புகழ்கள் ஓதி விமலனை வேண்டுதும்நீ
மிப்புவியில் வாழ்கவென ஏய்ந்து

தூய வினையும் மொழியும் துணைந்தன்பு
பாயு முளமுமின்ன பண்புகளும் - மேயஎங்கள்
கண்ணனன்றிப் பெற்றோர் கருதுங்கால் யாவரே
எண்ணிடுவீர் எண்ணிடுவீர் இன்று

என்றும் நிலைநிற்ப துண்மையேல் என்றென்றும்
நின்று நிலவுவது நேர்மையேல் - துன்று
குணக்குன்ற மன்னான் குலவுபுக ழென்றும்;
மணக்குமென லன்றே வழக்கு

அன்பன் கிருட்டின சாமிக் கறுபதாண்
டின்பின் நிறைநாள் இதுவாமால் - மன்புகழ்கள்
பாடுகம் வாரீர் பல்லாண் டவனுலகில்
நீடுழி வாழ்கவென நேர்ந்து

பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்களை அகராதிப் பணியில் ஈடுபடுத்திய பெரியோருள் ஒருவர் கே. வி. கிருஷ்ண சாமி ஐயர். அவரது அறுபதாம் ஆண்டு நிறைவு விழாவிலே பாடப்பெற்ற கவிதை இது.

## கானாடுகாத்தான் சங்கவிழா வாழ்த்து

தெய்வத் தமிழும் சிறந்த சமயமுமே
உய்வைத் தருமென் றுளங்கொண்டே—ஐயைந்து
யாண்டுகட்கு முன்னர் இயைந்த இளங்கோக்கள்
ஈண்டமைத்தார் சங்கம் இனிது.

அறிவு செழிக்க அறஞ்செழிக்க அன்பர்
செறிவு செழிக்கத் திகழும்—நெறிசெழித்து
மெய்வரை விள்ளுஞ் சமயம் மிகவளர
எய்தியதால் வெள்ளிவிழா இன்று.

எங்கும் தமிழ்முழக்கம் எங்கும் அறமுழக்கம்
எங்கும் சமயவின முழக்கம்-எங்கும்
திருவார் வணிகர்குலச் சீராளர் போற்ற
வருவார் முழக்கம் மலிந்து.

தலைமை மணவழகன் தாங்கத் தகைசேர்
புலமைப் பெருமக்கள் போற்ற-அலகிலா
அன்பர்கள் செய்தார் இன்று.

நீடூழி வாழ்கவிச் சங்கம் நிலவுதமிழ்
நீடூழி வாழ்க நீற்பேணி-நீடூழி
வாழ்க சமயம் மகிழ்ந்துயிர்க ளன்புற்று
வாழ்க இறைவனருள் வாய்ந்து.

## சாற்றுக்கவி

**திரு. ப.ம. வேணுகோபால் நாயுடு அவர்கள் வடவரங்கராற்றுப் படை இயற்றிய போது பேராசிரியர் இக்கவிதையை எழுதினார். இதை அவர் எழுதிய நாள் 9-10-1950**

வடவரங்கம் சென்று திருமாலின் அடியைத்
திடபக்தியோடு தெரிசித்தல்—கடமையென
ஆற்றுப் படையொன் றியற்றினான் ஆன்றோர்கள்
சாற்றிப் புகழ்ந்திடவே தான்.

மேலைவிளை வென்று வியக்கவே வேணுகோ
பாலனின்று தந்த பனுவல்தான்-ஞாலமிசை
என்றும் நிலவி யினிதே பரவிடுக
நன்று புகழவற்கு நல்கி

## லக்ஷ்மி விலாசம் வாழ்த்து

உறுபொருள் வாய்ப்ப வுதவியைந் தாண்டு
வறுமை யகற்றிவரு மாண்பிற-செறிகருவூர்ப்
பாங்காம் இலட்சுமிவி லாசமினிப் பல்லாண்டு
தேங்காது வாழ்க சிறந்து.

## ரங்க அய்யங்காருக்கு வாழ்த்து

அன்பன் திருவரங்கன் ஆண்டறுப தெய்திநமக்
கின்பம் அளித்தான் இறையருளால்-நன்றுபுகழ்
ஓங்க மகிழ் வோங்கமர போங்கமொழி யோங்க இனி (து)

## நித்தியானந்தர் உரைக்குப் பாராட்டு

சித்த வயித்தியச் செல்வன் திருவனந்தை
நித்தியானந்த நெடும்புகழன்-நித்ய
கருமாவியல் பென்னும் கருதுபெரு நூலுக்
குரிமையுடன் செய்தான் உரை.

மருள் நீங்க மக்கள் மருவுதுயர் நீங்கப்
பொருளோங்க முத்தி புகுத-அருள்முறையால்
இன்னுரை செய்தளித்தான் ஈண்டுநித்தியானந்தன்
பன்ன எளி தாமோ பணி.

நூல் வாழி வாழி நுவலுரை தான் வாழி
பாவால் அதனைப் பரிந்துரைத்த-மேலோனாம்
மின்சிறை ஆனந்த ஆச்சிரமம் மேவுமுனி
தன்புகழும் வாழ்க தழைத்து.

## காசிநாதன் புதுமனை விழாவிற்குப் பாராட்டு

பாரி நிலையப் பழனியப்பன் ஈன்றெடுத்த
சீரியைந்த செல்வத் திருமகன்-பேரியைந்த
நாடு மகிழ்வரு நற்காசி நாதன்தான்
நீடூழி வாழ்க நிலத்து.

எல்லா நலனும் இனிது பெருகிடுக
நல்லோர்கள் கூட்டுறவு நன்னிடுக-சொல்லார்ந்த
கல்வி நிறைந்திடுக காசிவரு நாதனெனும்
செல்வத் திருமகற்குச் சீர்த்து.

## பரமேசுவரப் பணிக்கர் திருவிதாங்கூர் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தராகப் பதவியேற்றபோது அளித்த வாழ்த்துப்பா

நிலைபெற்ற திருவார்ந்த பெரும்பதியாம் திருவனந்தை நகரில் பல்சீர்க்
கலையுற்ற கழகத்தின் பிரதிஉப தலைவர்கள் காட்சி யாளர்
பலமுற்ற நடுநிலையர் பரமேசுவரப்பணிக்கர் பதவி யேற்றார்
தலமுற்று செந்தமிழின் நன்மைக்குத் தாழ்வுண்டோ நவிலு வீரே.

பல்லாண்டு வாழ்ந்து பரமேச்வ ரப்பணிக்கர்
சொல்லாண்ட கீர்த்தி துலங்கவே-எல்லாண்ட
வேண்யிறை பின்னருளால் மேவு கலைக்கழகம்
பேணிடுக நன்கு பெரிது.

கலைகட்குத் தெய்வமாய்க் காரிகையைக் கொண்டோம்
கலைகட்கு வேறுகதி காணோம்-நிலையிதுதான்
என்றறிந்தோம் எங்கள் பரமேச் வரன்இனிதே
வன்றிறவிற் காப்ப மகிழ்ந்து.

கல்வி செழிக்கக் கலை செழிக்கச் செந்தமிழாம்
செல்வி செழிக்கத் தருச்செழிக்க-மல்குபுகழ்
நீதி செழிக்க நிர்வாகஞ் செய்பணிக்கர்
தீதின்றி வாழ்க சிறந்து.

தசாவதானம் ஆறுமுகம் பிள்ளை 'அண்ணாமலையர் காவியம்' என்ற நூலை இயற்றியபோது அதற்குப் பேராசிரியர் அளித்த இச் சிறப்புப் பாயிரம் 5-3-1953-இல் எழுதப் பெற்றது.

### சிறப்புப்பாயிரம்

இலகுமெழுத் தெண்ணிவைதாம் இருகண்ணா
மக்களுக்கென் றிதயத் தெண்ணி
நிலவிடுபல் கலைக்கழகம் நிறுவியிசை நிகழ்தமிதை
நீடு பேணிப்

புலவரங் களிபெருகப் புயலனைய கொடைபெருகப்
பொழிந்த அண்ணா

மலையரசின் நிலவுபுகழ் வையகத்தே என்றென்றும்
வளர்க மாதோ

அன்னவன்றன் வரலாறும் அறம் வளர்த்த பெரும்
புகழும் அறிய இன்றோர்

பன்னுதமிழ்க் காவியமாம் பணிசெய்தான் யாவனெனிற்
பகரக் கேண்மோ

தன்னுபுகழ்க் கோட்டாற்றுத் தொன்னகரில் வந்துதித்தோன்
சுவையின் மிக்க

கன்னலெனக் கவியிசைப்போன் கருதரிய அவதானம்
கண்ட மேலோன.

ஆறுமுக மெனும்பெயரான் ஆறுதலை யெனும் பெயரான்
அடியைப் பேணும்

பேனுபெறு திருவாளன் பெருமையுறு காவியத்தில்
பெற்றி கேட்கின்

கூறுபதம் பொருள்கனியக் குலவுநடை தொடைகனியக்
கொண்ட லென்ன

வீறுபெறு தமிழ்கனிய மெய்யினிய புகழ்கனிய
விளங்கு மாலோ.

## இரங்கற்பா

## சி. ஸ்ரீனிவாசையங்கார் மீது இரங்கற்பா

தமிழனையைப் போற்றுவதில் தான்வாழ் மதுரைத்
தமிழ்ச்சங்கம் போற்றுவதற் சாறும்-அமிழ்தனைய
சொல்லால் வசீகரித்தே இன்பிற் றுவக்குவதில்
வல்லரார் டீ ஸியைப்போல் மற்று.

உடலிருக்க உயிர்நீத்தா ரெனவுரைப்ப
ருலகத்தா ரோக்கு சீலக்
கடலிருக்கும் டிஸி இன்றக்
கட்டுரையைப் பழுதாகக் கண்டானன்றே

அடலிருக்குந் தீந்தமிழா மாருயிரை
யகலிடத்துக் கனியாய் வைத்து
விடலிருக்கும் உடல்மறைய விண்ணுலகர்
சென்றனனால் விதியால் அந்தோ.

## சி. ஆர். கோவிந்தராஜ் முதலியாரைப் பற்றிய கையறு நிலைச் செய்யுள்

செந்தமிழில் வல்லவன்யார்? சீரிய நூல்கள் பல
அந்தமுறை அச்சில் அளித்தவன்யார்? சந்தமுறு
யாவிந்தை கண்டு பயனுரைதந் திட்டவன்யார்?
கோவிந்தராஜனெனக் கூறு.

பண்பினியன் சொல்லிற் பயில் வினியன் பைந்தமிழின்
எண்ணினியன் கோவிந்தன் எல்லோர்க்கும்-நண்பினியன்
விண்ணுலகம் இன்றுபுக மேதினியோர் தாமிழைத்த
திண்ணவினை யாவதோ செப்பு.

## மொழிப்பெயர்ப்புக் கவிதைகள்

### ஆங்கிலக் கவிதைகள்

வில்லியம் ஹென்றி டேவிஸ் (William Henry Davis) எழுதிய Leisure என்ற கவிதையின் மொழிபெயர்ப்பே இக்கவிதை. இம் மொழிபெயர்ப்பினை ஒரே நாளில் (2-11-1949) அவர் செய்திருக்கிறார் என்பதை அவரது நாட்குறிப்பு தெரிவிக்கின்றது.

### 1. என்ன வாழ்க்கை இது

என்ன வாழ்க்கை இது கவலை
என்னை அரித்துத் தின்ன
பன்னும் எதனையும்-நின்று
பார்த்திட நேரமில்லை.

மரத்தி நிழலிலே—ஆடு
மாடுகள் நிற்கும வரை
சிரத்தை யோடங்கே பார்க்கச்
சிறிதும் நேரமில்லை.

காட்டுப் புதரூடே-செல்கையில்
கண்ட அணில் தின்பதை
நீட்டி மறைத்திடுதல்-பார்க்க
நேரம் சிறிதுமில்லை.

நட்ட நடு நிசியில்—காணும்
நட்சத்திரங்க ளென்னப்
பட்டப் பகல்நீரில் ஒளிர்மீன்
பார்த்திட நேரமில்லை.

அழகியின் நோக்கு நோக்க–அவள்
அடிமலர் தான் நோக்க
அழகு நடை நோக்க–எனக்கே
அற்பமும் நேரமில்லை

கண்ணில் அரும்பும் நகை–அவள்
கனிவா யிதழ் மீதே
நன்னி மலர்ந்தொளிர்தல்–காண
நாடினும் நேரமில்லை.

என்ன வாழ்க்கை இது–கவலை
என்னை அரித்துத் தின்ன
பன்னும் எதனையும்–நின்று
பார்த்திட நேரமில்லை.

இதனுடைய ஆங்கில மூலம் வருமாறு :

## Leisure

What is life if, full of care,
We have no time to stand and stare

No time to stand beneath the boughs
And stare as long as sheep or cows,

No time to see when woods we pass
Where squirrels hide their nuts in grass.

No time to see in broad day light,
Streams full of stars like stars at night,
No time to turn at Beauty's glance.
And watch her feet, how they can dance.

No time to wait till her mouth can
Enrich that smile her eyes began.
A poor life this if, full of care,
We have no time to stand and stare

W. Henry Davis

## 2. முத்தம்

மலைகள் உயர்ந்து வானை முத்தமிடுமே
மகிழ்ந்தலைகள் ஒன்றையொன்று முத்தமிடுமே
குலையெழு பூவிரண்டில் ஒன்றினை யொன்று
இகழ்ந்திடில் மன்னித்தலும் இல்லை யாருமே.

நிலமதை சரிகதிர் முத்தமிடுமே
　　நிலவி னொளிகடலை முத்தமிடுமே
விலையினி இம்முத்தங்கள் மேவுதலுண்டோ
　　மெல்லிதழால் என்னை முத்தி மேவவிலையேல்
இலவிதழ் பொருந்தி என்னைத் தழுவி
　　இனிய முத்தங்கள் தரல் இயல்பலவோ?

P. B. Shelley-யின் Love's phillosophy என்ற கவிதை இரு பகுதிகளைக் கொண்டது. இதன் இரண்டாவது பகுதியைத்தான் பேராசிரியர் மொழிபெயர்த்திருக்கிறார். ஆங்கிலக்கவிதை வருமாறு:

## Love's Philosophy

II

See the mountains kiss high Heaven
　　And the waves clasp one another,
No sister-flower would be forgiven
　　If it distained its brother;

And the sunlight clasps the earth
　　And the moonbeams kiss the sea;
What are all these kissings worth
　　If thou kiss not me?

P. B. Shelley

## 3. பரிசு

என்னுளத்திற் பொங்கியெழும் எல்லையற்ற காதல்
　　ஏற்றிலள் என் நங்கை! இனி வாழ்வில்லை எனக்கென்று
உன்னுந்தொறும் பெருநெருப்பும் ஊற்றெடுப்ப தென்ன
　　உள்ளழன்று கொதித்தெழுந்தேன் உணர்வில்லேன் பாண்டு;

மன்னிவரு காதல் இந்த வையகத்தில் என்றும்
　　வறிவாவதில்லையென வகுத்துணர்ந்தேன் இன்று
இவ்விசையில் தோய்ந்துவரும் என் கவிதையெல்லாம்
　　இக்காதற் பயிரில்வரும் இன்பவிளைவன்றே.

இப்பாடல் Walt whitman என்பாரின் Sometimes with are I love' என்ற தலைப்பில் எழுதப்பட்ட சிறுகவிதையை அடியொற்றி எழுதியது. ஆங்கிலக் கவிதை கீழே தரப்பட்டுள்ளது.

## Sometimes with one I love

Sometimes with one I love i fill
Myself with rage for fear I effuse unreturn'd love.
But now I think there is no unreturn'd
Love. the pay is certain one way or another.

Walt Whitman

இப்பாடலின்கீழே ஆசிரியர் தனது ஒருதலைக் காதலைப் பற்றி எடுத்துரைக்கும்போது, தனது காதல் ஒரு வகையில் தோல்வியென்றாலும் கூட. தமது உணர்ச்சிகளைக் கவிதை வடிவம் பெறச் செய்திருப்பதினால் அத்தோல்வியும் வெற்றியே; காதலின் விளைவு கவிதையாக மலர்ந்திருப்பது போல என்கிறார். அவ்வரிகளை அடைப்புக் குறிக்குள்ளே தருகிறார். (I loved a certain person ardently and my love was not return'd yet out of that I have written these songs) நம் பேராசிரியர் அடைக் குறிக்குள் இருக்கும் கருத்தையும் மனதில் வாங்கித் தமிழ்க் கவிதையாக அளித்துள்ளார்.

## 4. பிரிவு

இன்ப முண்டெனில் துன்ப முண்டென்பர்;
இந்திர வில்லும் மழையை எதிர்தரும்;
மன்பெருங் காதல் வாழ்விற் பிரிவுதான்
வருத்து மென்பது வையகத் துண்மையே;
துன்பந் தன்னிலே இன்பமும் தோன்றிடும்;
சொல்லொணாத மகிழ்வும் விளைந்திடும்;
நன் பெருதங்கை நன்மை நவின்றிடின்;
நல்ல இன்பமாம் துன்பமுமாகுமே.

இக்கவிதை ஆங்கில மொழி பெயர்ப்புக் கவிதை என்ற குறிப்பு மட்டுமே கிடைக்கிறது. இது Francis Thompson என்பாரின் Absence என்ற கவிதையின் மொழிபெயர்ப்பாக இருக்கக்கூடும். மூலக்கவிதை கிடைக்கவில்லையாதலால் ஒரு முடிவுக்கு வர இயலவில்லை.

## ரிக்வேதக் கவிதைகள்

1. சூரியோதயப் பெண் தெய்வத்தை (உஷஸ்)ப் பற்றியது

தீராடி யொளிர்மேனி யழகு நோக்கி
நிற்ப நாம், செருக்குடனே நிற்கின்றானால்
காராரும் இருள்நீங்க உதய கன்னி
ககனத்தின் புதல்வி இன்று காட்சி தந்தே.
கற்பரசி ஆடவர்முன் தலையிறைஞ்சிக்
கவிழ்ந்துநிற்கு நிலைபோலக் ககனச் செல்வி
நிற்றல் கொண்டு தொழுவார்க்கு வரங்கள் நல்கும்
நேரிழை போல் ஒளிநல்கி நிழற்று மாலோ.

2. இறந்தோரைப் பூமியில் புதைக்கும் வழக்கத்தைக் கூறும் செய்யுள் (ரிக். V 80, 5, 6)

நிலமகளே, புகலிடம் நீ நன்குவிரித் தளிப்பாய்,
நெருக்கி அழுத்தா தெளிதில் நீ இவனை ஏற்பாய்;
குலமகனை அன்னை தன்முன் றானையினால் அணைத்துக்
கொள்ளுதல்போல் நீ இவனைமறைத்திடுவாய்.அன்னே

3. எங்கிருந் துலகு தோன்றிற்று?
இயற்றிய தாமோ? அன்றோ?
மங்கலில் தேவ ரெல்லாம்
படைப்பினின் வந்தோ ரன்றோ?
துங்கவா விருந்து நோக்கும்
தொல்பெருந் தெய்வந் தானும்
இங்குறு தோற்றந் தன்னை
அறியுமோ? இயம்பு வீரே.

4 இந்திரனே மித்திரனே வருணனே ஈண்டு
எரிகின்ற அக்கினியே என்று நல்லோர்
தந்தமக்குத் தோன்றியவா றுரைப்பர், தெய்வத்
தனிப்புள்ளாம் கருத்துமனும் அவன்காண்; சார்ந்து
பந்தமுறு பெயர்பலவும் இயல்பி னொன்றாய்ப்
பாரித்த வொரு பொருட்கே பகர்வ ராலோ
விந்தையுறு பெருங்கவிஞர்; இதனால் சான்றோர்
விளிப்பர்எரி, எமன், மாத ரிசுவான் என்றே.

5. மணமக்களை வாழ்த்தும் செய்யுள் [ரிக். : 164, 46]

பிரியாதீர், ஈண்டொருங்கே உறைவீர், மக்கள்
பேசுகின்ற ஆயுளெல்லாம் குறையாதே வாழ்வீர்,
தெரியாதீர் துன்பென்றும்; அரும்புதல்வர் பேரச்
செல்வரோடு மகிழ்ந்துவிளையாடி யின்பஞ் செழிப்பீர்.

6. புதிர்ச் செய்யுள்

எழுவர் கூடி ஓராழி
யிரதத் தில்வார் பூட்டிடுவார்,
எழுநற் பெயர்கள் கொண்டிடும் ஓர்
இவுளி அதனை ஈர்த்திடுமே;
அழிவிலாழி யொருநாளும்
அடங்கி நிற் பதன்று; அதனைத்
தழுவி யேற்றே அனைத்துயிரும்
தாங்கும் அச்சு மரமுன்றே (ரிக். 1, 146.)

## அதர்வண வேதக் கவிதைகள்

1. குடும்பங்களை ஒற்றுமைப்படுத்துதற்குரிய கிரியைகளும் மந்திரங்களும் கூறும் செய்யுள்.

ஒன்றாய் உள்ளம்; கருத்தொன்றாய்
உறவே படைத்தேன் பகை யொழித்தேன்;
கன்றும் பசுவும் போல் நீங்கள்
கலந்து களித்து வாழ்ந்திடுக.

தந்தை சொல்லே மந்திரமாய்த்
தாயின் கருத்தே நின் கருத்தாய்
மைந்தன் வாழ்க மனைவியரும்
மதுர மொழிகள் வழங்கிடுக.

அண்ணன் தம்பி பகை தவிர்க்க
அக்காள் தங்கை அங்ஙனமே
எண்ணும் நோக்கும் ஒன்றாக
இனிய மொழிகள் வழங்கிடுக. (அதர்வ. 111, 30)

2. களவொழுக்கத்தில்ஈடுபடும் தலைவன், அன்னை, தந்தை, நாய் அனைவரும் தூங்குக என மந்திர உச்சாடனம் செய்கிறான்.

அன்னை துஞ்சுக; தந்தை துஞ்சுக; நாய் துஞ்சுக;
வீட்டிலுள்ள முதியோர் துஞ்சுக;
அவளது சுற்றம் துஞ்சுக;
அவளைச் சுற்றியுள்ள மக்கள் அனைவரும் துஞ்சுக.
(அதர்வ. 1, 5)

## புத்தர் கதைகள்

### 1. தீப்பெண்டிரைப் பற்றிய பாடல்

செந்தழல் போல் சேர்ந்தாரைக் கொல்வர்; செறிநீர் போல்
வந்த வனைத்தும் வரன்றிடுவர்-வெந்துயர்செய்
நோயும் கொடுமுர்ளும் போல்வர்; நுணங்கிடையார்
காய்பொன்னின் நீங்குவர் கற்பு

### 2. ஜாதகக் கதை

எனக்கு ஒரு நல்வரம் ஈதற்கு எண்ணின்
மனத்தினும் மெய்யினும் தினைத்துணைத் தீமையும்
எவ்வுயிருக்கும் என் பொருட்டாக
யாவரும் எங்கும் என்றும் செய்தலை
நீக்குதல் வேண்டுவன் இந்திர நின்பால்

### 3. ஜாதகக் கதையின் தலைவர் போதிசத்துவருக்குரிய பத்து வகை இயல்புகளைக் கூறும் செய்யுள்

தானஞ்சீல மேபொறை தக்கதாய வீரியம்
ஊனமில்தி யானமே யுணர்ச்சியோ டுபாயமும்
மானமில் லருளினை வைத்தலே வலிமையும்
ஞானமீரைம் பாரமிதை நடுங்காலி வைகளும்

## எகிப்தியக் கவிதை

### 1 ஒரு காதல் பாட்டு

பாயல் மீது விழுந்து கிடந்தனன்;
பாழ்த்த நெஞ்சமும் புத்தியும் பேதுற்று
நோயினால் நொறுக் குண்டன; சுற்றமும்
நொடிதின் எய்துவர் சூழ்ந்தெனை நோக்குவர்
ஓய்த லின்றியென் நண்பர்கள் கூடுவர்;
உறும் வயித்தியர் நாடியை ஓர்வரே;
நோயின் காரணம் காண அறிகிலார்
நொந்து நொந்தெனை நோக்குவர் நிற்பரே.

அன்ன கூட்டத்தில் ஆங்கு வருவளே;
அன்புப் பார்வையென் நெஞ்சினை அள்ளிடச்
சின்ன மென்மலர் சேர்தரு கூந்தலாள்
சிறுமை தீர்ந்திட்ட திங்கள் முகத்தினாள்
துன்னி நின்ற வயித்தியர் தங்களைச்
சூழுங் கண்ணால் நகைசெய்து நிற்பரே;
மன்னு காரணம் ஓர்ந்துறு நோயினை
மாற்றுவா ருளரோ மங்கை யன்றியே?

## பாபிலோனியக் கவிதைகள் :

எத்தனைதான் பாவங்கள் புரிந்தனனோ! அறியேன்;
ஈசனே நின்வெகுளி எனக்கரிது தாங்கல்;
சித்தந்தான் இரங்கியெனக் காத்திடுதல் வேண்டும்;
சீற்றமொழிந் தெளியேனைத் திருவருள் பாவித்தே.

எத்தனையோ? நெறிமீது நான் செய்த பாவம்;
ஏட்டிலங்க காது நான் இழைத்திட்ட தீங்கு;
எய்த்தழுது கரைகின்றேன், எனக் குதவி யில்லை.
ஏனென்பார் உள்ளாரோ இப்புவியில், அம்மா

வருந்துயரால் மிக நலிந்து வருந்துமுளத் தோடு
மண்மீது முகங்கவிழ்த்து மாய்ந்து கிடக்கின்றேன்;
திருந்தமிசை நோக்ககிலேன், தேவாதி தேவ,
சிறிதுகடைக் கணித்தெனக்குத் திருவருள் தந்திடுவாய்.

## பாரஸீகக் கவிதைகள் :

### 1. உமர்கய்யாம் பாடல்கள்

வாழ்வைக் கடந்து மறுகரையில்
வந்து சேர்ந்த ஒருவனைத்தன்
சூழ்வல் கண்ணால் எமன் நோக்கிச்
சுருக்காய் வந்தோர் கிண்ணமது
"ஏழை, உண் என் றேந்திடவே
இன்னா மதுவென் றுணர்ந்துமவன்
"கோழை யன்று. குடிப்பன்" எனக்
கூறி நிமிர்ந்து நின்றனரே.

## 2. நிகாமியின் கவிதை

பேசிலன் வார்த்தை யொன்றும்; பெயர்த்திலன்; பாறை மீது
தீசெறத் தறைத்தான் போல நின்றனன்; திடீரென் றென்று
வீசிய கைக ளாலே விண்ணினை வெறித்துக்காட்டி
மாசில்சிற் றுளியை ஆங்கே எறிந்தனன் வலிமை கொண்டே

நிவந்ததோர் சிகரம் ஏறிநினைப்பரும் வேகத்தோடே
பவந்தனக் கிருப்பெண் றெண்ணிப் பாய்ந்தனள்; விண்ணிற்
பாய்ந்து
அவந்தரு தூரீனென்றேங்கி அலறினன்; அலறி வீழ்ந்து
சிவந்தவெங் குருதியோடச் சிதறினன் காதல் தீர்ந்தான்.

அலறின பாறைக் கூட்டம்; அலறின சீற்ப மெல்லாம்;
அலறின குகைகள் ஏங்கி; அலறின ஆழ்ந்த பள்ளம்;
அலறின நதியின் துள்ளி; அலறின பறவைக் காடும்;
அலறினன் ஷீரீனென் றேங்கி; அலறிய புவனமெல்லாம்.

## 3. ஸாதியின் கவிதை

பூவும் புல்லும் சேர்த்திட்டுப்
புனைந்த மாலை யதுவொன்று
மேவும் வாயில் மீதாக
விளங்கக் கண்டேன், கண்டேனே.

''விலையில் அற்பப் புல் இங்கே
மேவின் அதற்குப் பொருளுண்டோ
இலையினூடே மலர்தோன்றும்
இனிய காட்சி பழுதாமே.

தெய்வம் வாழும் பூங்கோயில்
சிறிய பேய்தான் வாழிடமோ
மெய்யினூடே பொய்கலக்க
விதியும் உண்டோ'' என்றேனே

புல்லும் கண்ணீர் வடித்துமிகப்
புலம்பிப் ''பொறுக்க'' எனக்கூவி
''ஒல்லும் பழைய நண்பர்களை
ஒதுக்கார் நல்லோர் இதுதிண்ணம்.

அழகும் இல்லை மனமும் இலை
ஐய உண்மை யாயினும் நான்
எழில்சேர் இறைவன் பூம்பொழிலில்
இனிது வளர்ந்தேன்'' என்றதுவே.

## 4. ஹாப்விஸின் கவிதை

மார்பில் ரோஜா மலர்மாலை;
மதுவின் கிண்ணம் நுரை சூடும்;
தேரும் திரைதான் முகந்தெரிக்கும்
நேரிழை அவளே எனக்குரியாள்;
யாரும் எனக்கு நிகரில்லை;
இப்புவியாளும் பேரரசும்
சாரும் அடிமைத் தரமே, என்
தன்னோ டொப்புச் சாற்றிடினே.

மன்னுன் சாயம் மயில்நோக்கி
மகிழ்வோ டிரத்து தான்கொள்ளும்;
உன் நற்பவள இதழொன்றே
ஒப்பில் இனிமை எனக்களிக்கும்;
உன்னைச் சிறிது நீக்கிடினும்
உயிர்போந் துயரம் எய்தியொரு
சின்னஞ் சிறிய புகலிடந்தான்
தேடி யங்கே மறைவேனே.

ஊரை யாளும் அதிகாரம்
ஒன்றே போதும் என்பர் சிலர்;
பாரில் நிரம்பும் புகலொன்றே
பயக்கும இன்பம் என்பர்சிலர்;
ஓரும் இவைதாம் விளையாட
உற்ற பொம்மை யளவேயாம்;
பேரைப் புகழ்ந்து பேசுவதால்
பெறுதற் குளதோ பயன்தானே?

உள்ளத் தீன்ப வாரி திநீ,
உன்னை எய்துவ தேவெற்றி;
கொள்ளற் கரிய ஆசியெல்லாம்
கொண்டேன் இன்றே உன்னாலே;

தெள்ளந் தெளிந்த இனியஇசை
சீரின் ஒலிக்கும் எனைச் சூழ்ந்து;
வள்ளத் தினிய மதுக்கொண்டுனி
மலர்க்கண் நோக்கி மகிழ்ந்திடுவேன்.

5. காமியின் கவிதை

அழகு தானொரு பஞ்சா மாகுமே,
அதனுள் வாழுங் கிளியெனல் காதலே
அழகு தானும் மணிவிளை பூமியே,
அங்கொளிர்வது காதல் வயிரமே;
பழகி ரண்டும் பரம்பொருள் தன்னிரு
பக்கம் சார்ந்துள பண்பிறு தோற்றங்கள்;
உழுவ லன்பினில் ஒன்றினை யொன்றுதான்
உற்ற ஜன்மங்கள் தோறும் மணக்குமே.

ஒன்றோ டொன்று கலந்திடும் விந்தையை
உரைத்தலும் அரிதாகுமிங் கேவர்க்கும்;
ஒன்றி லுள்ள அணுக்களில் ஒவ்வொன்றும்
உற்ற மற்றதன் ஒவ்வோ ரணுவிலும்
சென்று புக்குத் தழுவி முழுசியே
தெய்வங் கொள்ளுங் கலவியிற் சேருமே;
நின்ற பல்லுயிர்க் கும்உள இன்பங்கள்
நேர்ந்திடும் நடு வாகி விளங்குமே.

6. உளத்தை விழுங்கிய ஒப்பருங் காதலை
மெலத்தன் வாயால் விளம்பினள் ஜுலைக்கா;
வார்த்தை யொவ்வொன்றும் வருந்தொறுங் கண்ணீர்
வார்த்தனன் மிகப்பல; வளர்ந்தது துன்பம்;
இளைஞன் அவளை இறையும் நோக்கிலன்;
விளைவுறும் அச்சம் மிகப் பெரிதாதலின்
தாழ்த்துச் சென்னியைத் தாழ்த்துக் கண்களை
வீழ்த்தி நிலத்தை வெறிதே நோக்கிச்
சிந்தனைச் சுழலில் தயங்கி நின்றனள்;
பட்டும் சரிகையும் பயின்ற மெல்லணை
இட்ட பாயலின் மீதுதன் எழிலுரு
விளங்கும் ஓவியம் கண்டுமெய் விதிர்த்த;
மீட்டும்,

துளங்கி நோக்க ஜுலைக்கா நங்கை
தன்னரு காகத் தனிகிடந் தமர்ந்த
இன்னெழில் ஓவியம் எதிர்ந்தது, நடுங்கின;
மெல்லணை நின்றும் மெலத்தன் கண்களை
வல்லிதின் மீட்டு, மனங் கலங்காது
அமைதியிற் கண்கள் அமர்ந்திட இடந்தான்
சுமைபெற அணில், சுவரில், கதலில்,
அவ்விடத் தெங்கும் ஆய்ந்து நோக்கினன்;
பவள இதழ்கள் பயக்கும் நகையொடு
அவளும் அவனும் காதலில் ஆழ்ந்து
நிற்கும் நிலையே நிகழ்ந்தது யாங்கணும்;
கற்குஞ் சான்றாங் கடவுள் வைகும்
விண்ணினை நோக்க மென்மெல வுயர்த்திக்
கண்ணினை நேர்தலும்-கண்டது யாதோ?
ஆங்கும் காதலர் அன்புசெய் நிலையே;
உள்ளம் கனிந்தனன் யோசேப் ஒருகணம்
தள்ளரும் அன்புத் தனிக்கன் பார்வை
அருகுள ஜுலைக்கா மீதே அமர்த்தினன்;
''பருதியி னொளிதான் பல்கிருள் அகற்றி
ஐயோ பகல்செய் தலர்ந்திடும் இனியே;
எய்யா இதயத்து எண்ணிய கருமம்
இனிதின் முடியும் ஈண்டு'' என ஜுலைக்கா
கனவை நனவாக் கருதத் துணிந்தனள்;
எண்ணிய அளவில் இதயம் நின்று
கண்ணினை யனவும் சுரந்து கண்ணீர்
வெதும்பிப் பாய்ந்தது; வெய்துயிர்ப் பென்னும்
புயற் காற்றிடையே பொங்கிய குரலில்
மயற்பெரு வார்த்தை வழங்கினள் மாதோ.

## சீனக் கவிதைகள்

(1) விடிந்துபக லாயிற்றே, எழுந்திடுவா யுணர்ந்து;
மென்பாயல், என்கணவ! விட்டொழிவாய்வி ரைந்தே;
கடிந்துமொழி காதலியே! விடிந்ததில்லை யின்னும்,
காரிருள்தான் வைகறையிற் கலந்துமிகத் தோன்றும்

எழுந்திடுவாய். ஈதோ இவ் வலதுதிசை மேலே
 எழிலொளிசேர் விடிவெள்ளி இலங்கிடுதல் காணாய்
அழுந்து துயில் நீத்திடுவாய் அம்பும் வில்லும் ஏந்தி
 அருகுளமென் குருகுகளை அழித்திடுவாய் எய்தே.

அம்புகொண்டு துண்டில்பற்றிக கொன்றவைக வெல்லாம்
 ஆய்ந்துபதப் படுத்தியுனக் காக்கிடுவன் உணவே;
இன்பமொடு நாழிகையொன் றிருவருமே கழிப்போம்
 ஏத்துகனி மதுக்குப்பி இலகொளிதந் திடவே.

என்புருகும் இசையமிர்து நன்குதவி நின்கை
 இனிதமர்ந்த நல்வீணை ஈர்ந்துளத்தை வருந்தும்
துன்பொழியத் தூயவின்ப வாரியினில் நம்மைத்
 தோய்ந்தெடுத்துத் துறக்கமதில் உறப்புகுத்தும்,
 துரையே.

(2) இரவுபகல் இங்கிருந்து ஏக்கமொடு நோக்கி
 என்துயர்கூர் நெஞ்சினுக்கு ஏதேதோ மொழிவேன்;
உரமுளஎன் கணவரவர் வெகுதூரத் துள்ளார்
 ஒன்றுதுயர் நீக்குதற்கே என்றுவரு வாரோ?

(3) விண்ணில் ஒளிரும் வெண்ணிலவு
 மிக்க களிப்பை நல்கினும் என்
கண்ணைக் கவர்ந்தே உள முருக்கும்
 காரிகை தனக்கு நிகராமோ?

நண்ணுங் காதல் விலங்கதனால்
 நன்றென் இதயந் தளைத்திட்டாள்;
எண்ணின் அவளைப் பிரிந்திருக்க
 என்னால் இயலா தியலாதே.

(4) மனைவி மக்களும் மாண்புடைத் தந்தையும்
 மாறு பாடின்றி ஒற்றுமை மன்னவே
இனிதின் வாழ்ந்திடின், யாழொடு தீங்குழல்
 இயைந் தொலித்திடும் இன்னிசை போலுமே;

துனியில் சோதரர் ஒன்றி யிணங்கியே
 தூய வாழ்வின் ஒழுகித் தொடர்ந்திடின்,
நனியிசைக்கும் பலபல இன்னியம்
 நாதமொன்றினை நல்குதல் போலுமே.

இங்கு யாவரும் உள்ளத் தினியராய்
இசையும் ஒற்றுமை யோடன்பு கொண்டுதாம்
தங்கி வாழ்ந்திடின், அன்னவர் தம்மனை
தாங்கு தீப வொளியெனச் சாலுமே;

அங்கு மென் மழலைச் சிறு மக்கள் தாம்
அளியென மகிழ் தந்துடன் தோன்றுங்கால்
துங்க வொண்சுடர் நற்பெரு நாளென்றும்
தொடா நின்றின்பப் பேரொளி துன்னுமே.

(5) வே - ஒட்ஸேயின் கவிதை

நீர்சூ ழுலகம் நிந்திய மாகுங்கான்,
ஒருமந் நித்தியத் தின்உறு காரணம்
ஆருந் தனக்கென வாழ்விலை, ஆதலின்
வேருற்று நின்று விளங்கும் நெடிதே.

ஆதலின்,

அன்னதோர் காரணம் தேர்ந்த இருடியும்
தன்னைமுன் வைக்கிலன் இறுதியில் வைக்குவன்;
அன்னவன் முந்துற் றமைந்திடல் காண்குவன்;
செந்நெறி யாளர் இவ் வுண்மை தெளிகுவார்.

நினைத்தறி யாமலே நேர்த்த துடலென்று
இன்னத்திற் மோர்தவின் நீள்காவ லெய்துமால்
தனைப்பொருட் டாகத் தான்வாழ்தல் இல்லையேல்,
தனையுண்மை யாகத் தானுணரு மன்றோ?

(6) அகல நின்றருள், ஐய என் சிற்றிலை
அணுகிடேல்; இந்தச் சந்தனக் கன்றுதான்
துகள்படும் மிதித்தால்; எனக் கன்னது
துயரஞ் சற்றுந் தருவதன் றென்னினும்,
புகலி லிவ்வுலகஞ் சொலும் தீமொழி
பொறுப்ப தெங்ஙனம்? போகிடு; நின்மிசை
நிகரில் காத லெனக்குள தன்னதை
நெஞ்சத்தால் ஆற்றுமா றறியே ணரோ.

### (6) வீபோவின் கவிதை

இதழ்விரிந்து மலர்ந்தது கண்ணிணை;
    எத்தனை யழகு! எத்தனை எத்தனை!
கதவில் அன்னலள் ஒன்றி நிற்கின்றதிற்
    காணுஞ் சாந்தி கணக்கிட லாகுமோ!
நதமிகுந்த புருவத் துடிப்பினில்
    நலியும் வெந்துயர் நாணிநடுங்குமால்;
மிதஞ்சரிந்த கபோலத்தின் மீதிலே
    வீழும் மென்பணி மின்னி யொளிருமால்
எங்குச் சென்றனன்? இன்னுயிர்க்காதலன்
    எங்குச் சென்றனன்? யாரும் அறிதிரோ?

ஆன்மை இயல்பை வெளியிடுபவன் கவிஞன் என்பது பேராசிரியர் கருத்து. கவிதைக்கு வேண்டும் இயல்புகளைக் 'கவிதை' என்றும் கட்டுரையில் தருகிறார். "முதற்படியாக அவன் கூறுவனவற்றிலே உண்மையின் முத்திரை பதிந்திருத்தல் வேண்டும். உண்மையில்லாமற் போனால் சிறந்த கவிதை தோன்ற மாட்டாது. ஒருவன் நாடகாசிரியனாக இருக்கலாம். பிறபாத்திரங்களின் குணங்களைத் தானே மேற்கொண்டு அவற்றிற்கேற்பச் சொல்லாடலாம்; தொழில் புரியலாம். அப்பொழுதும் அவன் உண்மையாகவே பாத்திரங்களின் குணங் களில் பிரவேசித்தல் வேண்டும். உண்மையாகவே பாத்திரங்களை அவன் சிருஷ்டித்தல் வேண்டும். போலி என்பது சிறிதும் தகாது. ஒருவன் அழகான சிறு செய்யுட்களை இயற்றலாம். சுவையுள்ள கருத்துக்களை அவற்றில் அமைக்கலாம். ஆனால், இக்கருத்துக் களின் அடிப்படையில் உண்மையிருத்தல் வேண்டும். உணர்ச்சி யிருத்தல் வேண்டும். அப்பொழுதுதான் இச்செய்யுட்கள் கவிதை என்று சொல்லக்கூடிய தகுதியை அடையும்."

# ஆய்வுக் களங்கள்

தமிழியல் என்று தற்போது கூறப்படும் அறிவியல் பரப்பு முழுவதையும் அக்காலத்திலேயே, அதாவது ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னரே அறிந்து செயல்பட்டார் என்பது வியந்து போற்றுதற்குரிய ஓர் உண்மை. இலக்கிய வரலாற்றுத் துறை, இலக்கியத்திறனாய்வு, ஒப்பியல் ஆய்வு, பதிப்புப் பணி, அகராதியியல், இலக்கணத்துறை, நாட்டுப்புறவியல், பண்பாட்டுத்துறை, மொழியியல் ஆய்வு, வாழ்க்கை வரலாறுகள் எனப் பல்வேறு துறைகளிலும் தம் முத்திரையை ஆழமாகப் பதித்திருக்கிறார்.

## இலக்கிய வரலாறு

இலக்கிய வரலாற்றுத் துறையிலே முனைந்து ஆய்வு நடத்தியவர் வையாபுரியார். தமிழ் இலக்கியங்களை முற்சங்க காலம், பிற்சங்க காலம் எனத் தொடங்கி பதினொன்று கால கட்டங்களாகப் பிரித்து அடக்கிக் காட்டுகிறார். எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு, ஐம்பெருங் காப்பியங்கள் ஆகியவற்றையெல்லாம் சங்க இலக்கியம் என்ற பெயரால் குறிப்பிட்டுக்கொண்டிருந்த காலம் பேராசிரியர் வாழ்ந்த காலம். அப்போது தம்முடைய இலக்கிய வரலாற்றாராய்ச்சியின் மூலம் சங்க இலக்கியம் என்பது எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் மட்டுமே என்பதை முதன்முதலில் தெளிவுபடுத்திய பெருமை அவருக்கு உண்டு. சங்க இலக்கியம் என்ற தலைப்பில் எட்டுத் தொகையையும் பத்துப்பாட்டையும் மட்டும் அவர் பதிப்பித்த போது அவருக்கு எழுந்த எதிர்ப்பினைத் தமிழுலகம் நன்கறியும், பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் பிற்சங்க காலத்தைச் சார்ந்த நூல்கள் என்பது அவரது கணிப்பு. இந்நூல்கள் நூற்பொருளின் அடிப்படையிலும் அவற்றில் கையாளப்பட்டுள்ள இலக்கண மரபுகளின் அடிப்படையிலும் பிற்சங்க காலத்தைச் சார்ந்த நூல்களாக அறுதியிடுகிறார். சங்க இலக்கியம் என்று தாம் கருதும் எட்டுத்தொகை. பத்துப்பாட்டினுள்ளும்கூட, கலித்தொகை, பரிபாடல், திருமுருகாற்றுப்படை ஆகியவை பிற்சங்க கால நூல்களே என்பது அவர் கருத்து. அவரது Histry of Tamil Language and Literature என்ற நூலும் காவிய காலமும் இலக்கிய வரலாற்றைப் பற்றி எழுந்த நூல்களுள்ளே குறிப்பிடத்தக்கன என்பது அவருக்குப் பெருமை சேர்க்கும் செய்தி. கி. பி. 750 முதல் 1200 வரையுள்ள காலப் பகுதியையே காவிய காலம் என வரையறுக்கிறார் வையாபுரியார். இதற்கு, முதலில் தமிழிலக்கிய வரலாற்றின் காலப் பகுதியைப் பாகுபடுத்திப் பின்னர் காவியங்கள் ஒவ்வோன்றின் காலத்தையும் ஆராய்ந்து அவையனைத்தும் மேற்குறிப்பிட்ட காலப்பகுதியில் இயற்றப்பட்டன என்பதைத் தெளிவுபடுத்துகிறார். இக்காலப் பகுதியில் பிறந்த ஏனைய நூல்கள் பெரும்பாலானவற்றையும் காவிய அமைப்புக்குத் துணைபுரியும் கருவி நூல்களெனவே கொள்கிறார். காவிய

காலத்தை முற்காவிய காலம் (கி.பி. 750-1000) எனவும் பிற்காவிய காலம் (கி. பி. 1000-1300) எனவும் பிரித்துக் காட்டுகிறார் (1957:14).

இலக்கிய வரலாற்றாய்விற்கு அடிப்படை கால ஆராய்ச்சி. நூல்களின் காலத்தை அறுதியிட்ட பின்னர்தான் அவ்வாறு தாம் துணிவதற்கான சான்றுகளைத் தந்து அவற்றை நிரல்படத் தொகுத்துத் தரும் பணியைச் செய்யமுடியும். நூல்களின் காலத்தை ஆராய்வதால் கிட்டும் பயன் என்ன? என்பது பற்றிய தெளிவான சிந்தனை இன்றும்கூட பரவலாக ஏற்படவில்லை என்பதை மறுக்கவியலாது. இலக்கிய நூல்களின் காலத்தை வரையறை செய்வது இலக்கிய ஆராய்ச்சிக்கு இன்றியமையாத ஒன்று என்பது அவரது கணிப்பு. மொழியின் வரலாற்றுப் போக்கையும் மக்களின் பண்பாட்டு வளர்ச்சியையும் திட்ட வட்டமாக அறிய கால ஆராய்ச்சி உதவுகிறது என்ற கருத்தைத் தமிழ்ச்சுடர்மணிகள் நூலின் முன்னுரையிலே எடுத்துரைக்கிறார். "ஒரு நூலின் தன்மையானது, அது தோன்றிய காலம், சூழ்நிலை முதலியவற்றால் நிச்சயிக்கப்படும் என்பது இலக்கிய ஆராய்ச்சியில் ஓர் உண்மை. இவற்றை நன்கு அறிந்தாலன்றி நூலின் பொருள் நுட்பங்களை எல்லாம் நாம் முற்ற அறிந்துவிட்டோம் என்று கூற முடியாது. எனவே இலக்கிய வளர்ச்சிக்கும் இது அவசியம் என்பது எளிதில் விளங்கும். இதனால் இக்கால நிர்ணயம் மிக முக்கியமானதென்று நாம் உணரவேண்டும். "நாராயணனே தனி நாயகனே" என்ற தொடரில் தனிநாயகன் என்பது ஓர் அரசனது சிறப்புப் பெயர்களிலொன்று என அறிந்த அளவில் அவன் காலத்து வாழ்ந்த தமிழ் மக்கள் எத்துணை குதூகலத்தோடு இத்தொடரைக் கேட்டு மகிழ்ந்திருப்பர். சிலர் நினைப்பதுபோல, இலக்கிய நுட்பங்களை அறியும் ஆற்றல் இல்லாதவர்கள் செய்துவரும் வீண் முயற்சியல்ல இந்த ஆராய்ச்சி. நமது முன்னோர்கள்,

காலம் களனே காரணம் என்றுஇம்
மூவகை ஏற்றி மொழிநரும் உளரே

என்று ஆணை தந்துள்ளார்கள். நூலாசிரியர்கள் பலரும் இவ்வாணைக்கு அடங்கி ஒழுகாமற்போனாலும் இது ஒரு முக்கியமான கருத்து என்பதை யாரும் மறுப்பதற்கில்லை.

கால ஆராய்ச்சிக்குப் பலதுறை அறிவு வேண்டும்; ஒரு நூலின் காலத்தைத் துணிய அந்நூலின் நுவல்பொருள், அதன் ஆசிரியர் பற்றிய குறிப்பு, நூலினுள் கிடக்கும் குறிப்புகள், அந்நூல் வெளிப்படுத்தும் சமுதாயச் சூழல் ஆகியவற்றைப் பிற கல்வெட்டுச் சான்றுகள், சாசனச் சான்று, பிற இலக்கியங்கள், பிற மொழி இலக்கியச் சான்றுகள், வரலாற்றாசிரியர் கூறும் கருத்துக்கள் முதலான பல்வேறு கூறுகளோடு பொருத்தி ஆராய வேண்டும்.

தம் ஆராய்ச்சி முடிவுகளைத் தரும்போது, பிற ஆய்வாளர்களின் முடிவுகளையும் தரும் வழக்கமும் அவருக்கு உண்டு. சான்றாக, சிலப்பதிகாரத்தின் காலம் கி. பி. 8-ஆம் நூற்றாண்டு என்று நிறுவும்போது சேரன் செங்குட்டுவன் காலமும் சிலப்பதிகாரத்தின் காலமும் கி.பி. 5–ஆம் நூற்றாண்டு என்று அறுதியிட்ட மு. இராகவையங்கார் கருத்தையும், அம்முடிவு ஏ. வி. சுப்பிரமணிய ஐயருக்கு உடன்பாடன்று என்பதையும் தெரிவிக்கிறார். க. அ. நீலகண்ட சாஸ்திரியார் தமது கருத்தோடு முற்றிலும் உடன்படுகிறார் எனினும் தாம் குறிப்பிடும் காலத்துக்குச் சற்று முற்பட்ட காலத்தையே அவர் கருதுவதாகக் கூறுகிறார் வையாபுரியார்.

எனவே இலக்கிய வரலாற்றாராய்ச்சிக்குப் பிறமொழிப் புலமை, பிறமொழி இலக்கியப் புலமை, பிறதுறை அறிவு முதலான பல்வேறு திறமைகள் வேண்டும். இத்தகைய பல்துறை வல்லுநராக விளங்கினார் வையாபுரியார். தமிழுடன் ஆங்கிலம், மலையாளம், வடமொழி, ஜெர்மன், பிரெஞ்சு ஆகிய மொழிகளில் அவர் பெற்ற தேர்ச்சி ஒப்புநோக்கு முறையில் பல இலக்கண இலக்கியங்களைக் கற்று மொழியாராய்ச்சி செய்ய அவரைத் தூண்டிற்றெனலாம். பல மொழிகளைக் கற்றிருந்ததால், விரிந்த மனத்துடன் பரந்த அறிவுடன் ஆழ்ந்து அலசிப் பார்க்கும் பண்பு இவருக்கு எளிதாக அமைந்துவிட்டது. இம்மொழிகளை நன்கறிந்து, அவ்வறிவைத் தமிழாராய்ச்சிக்கும் தமிழை வளர்ப்பதற்கும் பயன்படுத்தினார்.

பத்தாண்டு கால வழக்கறிஞர் தொழிலில் ஏற்பட்ட சட்டப் புலமையும் வாதம் செய்கின்ற திறமையும் ஆய்வு முடிவுகளைத் தருக்க நெறியில் தெளிவாகப் புலப்படுத்த அவருக்கு உதவின.

ஒரு நூலின் காலத்தை நிறுவுவதற்கு முதற்படியாக அதற்கான முன்னெல்லையையும் பின்னெல்லையையும் ஊகித்துக்

கொள்வது அவரது வழக்கம். காட்டாக, சிலப்பதிகாரக் கால ஆராய்ச்சியில் முற்சங்கத்தை முன்னெல்லையாகவும் கி.பி. 900த்தைப் பின்னெல்லையாகவும் ஊகித்துக்கொண்டு தமது ஆய்வைத் தொடங்குகிறார். இவ்வாறு தாம் முன்னெல்லை பின்னெல்லைகளை அறுதியிடுவதற்கான காரணங்களும் தருக்க ரீதியில் தரப்படுகின்றன. இறுதியில் நீக்கல் உத்தியைக் கையாண்டு, ஒவ்வொரு காலத்தையும் சொல்லி, தருக்க ரீதியில் மறுத்துக்கொண்டே வருகிறார். தமது கொள்கைகளை நிறுவும் பொருட்டு, தாம் கூறும் காரணங்களை ஒன்றன்மேல் ஒன்றாய் முறைப்பட அமைத்துத் தருகிறார். இவ்வாறு தரும்போது, பல சான்றுகளைத் திரட்டித் தந்து தனது முடிவுகளை நிலை நிறுத்துவது இவரது வழக்கம். காட்டாக, சிலப்பதிகாரக் கால ஆராய்ச்சியில் இருபத்து நான்கு சான்றுகளைத் தருகிறார். இவரது சான்றுகள் முழுவதையும் மறுத்து முடிவைச் சரியன்று என்று நிலைநிறுத்த விரிந்த அறிவும் பேருழைப்பும் தேவை.

பண்டைத் தமிழ்ப் புலவர்களின் காலத்தை அறுதியிட்டுத் தருவதுபோல அவர்கள் பின்பற்றிய சமயங்களையும் தமது ஆராய்ச்சியால் வரையறுத்துத் தருகிறார். தொல்காப்பியர், திருவள்ளுவர், பரிமேலழகர் ஆகியோருடைய சமயங்கள் பற்றி விரிவாகவும் ஆராயப்படுகின்றன.

சைவ பரம்பரையில் வந்த பிள்ளையவர்களது சமயப் பற்று ஒருபோதும் ஒரு சார்புடையதாக இருந்ததில்லை. இதற்குச் சான்றாக வைணவ நூல் பதிப்புகளையும் சுட்டலாம். அவருக்குக் கம்பராமாயணத்தின் மீதிருந்த பற்று, தமது இல்லத்திற்குக் 'கம்பன் நிலையம்' என்ற பெயரைச் சூட்டச் செய்தது. தொல் காப்பியர், வள்ளுவர் ஆகியோர் சமண சமயத்தினர் என்று நிறுவினார். இவ்வாறு தம் ஆய்வு முடிவுகள் சமய உணர்ச்சிக்கு அப்பாற்பட்டதென்பதை நிரூபித்தார்.

இவ்வாறு தமிழிலக்கிய வரலாற்றை அறிய அவர் முயன்ற போது அவரது சொல்லாராய்ச்சி முடிவுகளும் கால, சமய ஆராய்ச்சி முடிவுகளும் அவர் காலத்தியத் தமிழறிஞர்களின் மனக் கசப்பைத் தேடித்தந்தன என்பதையும் இங்கு மறுப்பதற்கில்லை. இதனை அவரே தம்முடைய உரையில் குறிப்பிடுகிறார். "இன்று வழங்கும் தமிழ் சங்ககாலத் தமிழ் அன்று; வள்ளுவர் காலத்துத் தமிழும் அன்று. இதனை மறந்து சிலர் பேசும் கூற்றுகள் தமிழ்

வளர்ச்சியைத் தடுக்க முயலும்; தமிழ் மக்களின் ஒரு பகுதியின ருக்குத் திருக்குறள், சிலப்பதிகாரம் இவற்றின் காலம் சமயக் கொள்கைகளைப்போல் ஆகிவிட்டது. இதன் பொருட்டுத் தங்கள் உயிரையும்கூட இழந்துவிடுவார்கள்போல் தோன்று கிறது. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட வையாக இந்நூல்களைக் குறித்தால் அதற்கு அவர்களுடைய மனம் ஒப்புவதில்லை. பிற்காலத்தனவாக இருக்கக்கூடும் என்று யாரேனும் கூறினால் அவரைத் தமிழ்த் துரோகி என்று பட்டம் கட்டி விடுகின்றனர். இந்த அவலம் நமது நாட்டில் உலவிவருவது ஆராய்ச்சியையே நெறித்துவிடும் தன்மையது. உண்மை தனது உயிருக்கே மன்றாட வேண்டியதாகவும் இருக் கிறது''. நடுநிலையோடு விருப்பு வெறுப்பற்ற நிலையில் ஆராய்ச்சியாளன் என்பதற்கு ஓர் இலக்கணமாகத் திகழ்ந்தார் பேராசிரியர்.

## இலக்கியத் திறனாய்வு

இலக்கியத் திறனாய்வுத் துறை இன்று நன்கு வளர்ந்து விட்ட ஒரு தமிழியல் துறை. இத்துறையின் முன்னோடிகளுள் ஒருவராக விளங்கியவர் வையாபுரிப்பிள்ளை. அறிவியல் அடிப் படையிலான அணுகுமுறையில் தமிழிலக்கியங்களை ஆழமாகத் திறனாய்வு செய்கிறார்.

திருவிதாங்கூர் பல்கலைக்கழகத்தில் அவர் நடத்திய சொற் பொழிவுகள் 'தமிழிலக்கிய சரிதத்தில் காவிய காலம்' என்ற பெயரில் நூலாக வெளிவந்தது என்பது முன்னரே குறிப்பிடப் பட்டது. இத்தொடர்ச் சொற்பொழிவு காவிய காலம், காவியங் களின் வரலாறு, காவியங்களின் பொது இயல்புகள், காவியங் களின் ஒடுங்குதசை ஆகிய தலைப்புகளில் நிகழ்த்தப்பட்டது. சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, சூடாமணி, உதயணன் கதை, பெருந்தேவனார் பாரதம், பெரிய புராணம், கம்பராமா யணம், நீலகேசி ஆகிய ஒன்பது காவியங்களைக் குறித்தே இவரது சொற்பொழிவுகள் பெரும்பாலும் அமைந்திருந்தன. பிறவற்றைக் குறித்து உறுதியாகத் தெரியவரும் செய்திகளை உரிய இடங்களில் சுட்டியுள்ளதாகத் தம் முன்னுரையிலே குறிப் பிடுகிறார். காவியங்களின் வரலாறு பற்றிக் கூறுமிடத்து காவிய வளர்ச்சியும் இலக்கிய வளர்ச்சியும் சென்றுள்ள நெறியையே

முக்கியமாக விளக்குகிறார். படிப்படியாகக் காவிய உணர்ச்சி வளர்ந்துள்ள நெறி சுட்டப்படுகிறது.

பொதுவாக, காவியத்தின் கதியை அல்லது போக்கை இரண்டு மாபெரும் சக்திகள் நிர்ணயித்தன என்பதை விளக்குகிறார். ஒன்று சமயம் என்ற சக்தி. மற்றொன்று அற்புதக் கதை மோகம் என்ற சக்தி. சிலப்பதிகாரம், பெருங்கதை ஆகியவை அற்புத விளைவுகளுக்கு எடுத்துக்காட்டாகத் தரப்படுகின்றன. மணிமேகலை, சிந்தாமணி, சூளாமணி ஆகியவை சமயப்பற்று, அற்புதக் கதை மோகம் என்ற இரண்டு சக்திகளாலும் இயக்கப்பட்டன. குண்டலகேசி, பெரியபுராணம், கம்பராமாயணம் ஆகியவை சமயப்பற்றினை அடித்தளமாகக் கொண்டவை. பெரியபுராணத்தில் சமயப்பற்று மேம்பட்டு அற்புதக் கதைக்குரிய கலை உணர்ச்சி குன்றி அற்புதங்கள் மட்டுமே மிகுந்து காணப்படுகின்றன. பிற்காலத்தில் காவியங்கள் புதிதாகத் தோன்றாமல் ஒடுங்கு தசையை அடைவதற்குரிய காரணங்களை ஆராய்கிறார்.

1. பெரியபுராணம் தோன்றிய நெறியிலேயே புராணங்கள் பல தோன்றின. கலையுணர்ச்சி இன்றி அல்லது குன்றி அவ்வுணர்ச்சியோடு கலந்த அற்புத விளைவுகளும் இன்றி காவியம் விளைவதற்குரிய சூழ்நிலை ஏற்படவில்லை. பலவித சமயங்களுக்கிடையே இருந்த உட்பகை காரணமாக சமய உணர்ச்சியும் செவ்வியதாக அன்றிச் சீர்கெட்டது.

2. காவியப் பொருள்களைப் பெறுவதற்குரிய மூலங்களுள் ஒன்றான வடமொழி மூலம் தமிழ் இலக்கிய ஆசிரியர்களுக்குக் கிடைக்கவில்லை.

3. பிறமொழி இலக்கிய அறிவு வரவரச் சுருங்கியதும் ஒரு காரணம்.

4. சோழர்கள் காலத்திற்குப்பின், தமிழ்நாடு பல அரச வம்சத்தினரின் கைகளில் மாறிற்று. ஆட்சியினரின் தாய்மொழியும் தமிழாக இருக்கவில்லை. இதனால் தமிழ் இலக்கிய முயற்சிக்கு அரசு ஆதரவும் அதிகமாகக் கிடைக்கவில்லை.

இலக்கியத் திறனாய்விற்குப் பன்மொழி இலக்கிய அறிவு தேவை என்பதை அவர் வலியுறுத்துகிறார். "நமது மொழியி லுள்ள இலக்கியத்தை ஆராய்ந்து உண்மையாக மதிப்பிடுதற்கும் அதனை வளம்பெறச் செய்தற்கும் பிறமொழி இலக்கிய உணர்ச்சி நம்மவர்களுக்கு இன்றியமையாதது". ஏனைய மொழி களின் ஆதி இலக்கியங்களைப் பற்றிய அறிவு மிகவும் தேவை என்று கூறும் அவர் நமது பண்டை இலக்கியங்களோடு ஒப்பு நோக்கி உண்மையான இலக்கிய உணர்ச்சியை பெறுதற்கு இவைகள் சிறந்த கருவியாகும் என்ற தமது கருத்தைத் தெரி விக்கிறார் (இலக்கிய உதயம் (1) : 12). இலக்கிய உதயம் என்ற நூலின் முதல் தொகுதியில் எகிப்து, பாபிலோனியா, பாலஸ் தீனம், பாரசீகம், சீன இலக்கியங்களைப் பற்றி விரிவாக ஆராய் கிறார். பிறமொழி இலக்கியங்களில் தமிழிலக்கியத்தோடு ஒப்பு மையுள்ள பகுதிகள் கட்டுரைக்குள்ளும் அடிக்குறிப்புகளாகவும் பேராசிரியரால் ஆங்காங்கு தரப்படுவது, பிறமொழிக் கருத்துக் களை உணர்ந்துகொள்வதற்குப் பெரிதும் துணைசெய்வதாகும். எகிப்திய மொழி இலக்கியங்களில் நிலையாமைக் கருத்துக்கள் காணப்படுவதைத் தெரிவிக்கும்போது, இக்கருத்துக்கள் தமிழ் மொழிக்கும் புதியன அல்ல என்பதை விளக்குவதற்கு மேரு மந்திரப் புராணச் செய்யுளொன்றைத் தருகிறார்.

இளமையும் எழிலும் வானத் திடுவிலின் ஈண்ட மாயும்;
வளமையும் கிளையும் வறிப் புதிய தன் வரவு போலும்;
வெளியிடை விளக்கின் வீயும் ஆயவும்; என்று வீட்டுக்கு
உளபகல் ஊக்கஞ் செய்வர் உணர்வினாற் பெரிய நீரார்
(மேருமந்திர புராணம் 109)

இதுபோல பாபிலோனிய அரசியல் வரலாறும் போர்களும் கிரேக்கப் புராணக் கதைகளையும், பாரசீகர் வருணனை கடவு ளாகக் கருதியது 'வருணன் மேய தொன்மறை உலகம்' என்ற தொல்காப்பியர் கூற்றையும் அவருக்கு நினைவூட்டுகின்றன. பிறமொழி செய்யுள் இலக்கியக் கருத்துக்களை உரை நடை வடிவில் பேராசிரியர் தந்துள்ளார் எனினும், செய்யுள் வடிவில் அமைந்தால் மூல நூல்களின் சுவை நன்றாகப் புலப்படும் என்று தோன்றிய இடங்களிலே தாம் செய்யுளாகவே அமைத்துள்ள தையும் முன்னுரையில் அவரே குறிப்பிடுகிறார். ஏனைய மொழி இலக்கியங்களை அனைவரும் அறிந்து பயன்பெற வேண்டு மென்ற பேராசிரியரின் அவாவும் அவ்விலக்கியங்கள் பற்றிய

அவரது ஆழ்ந்த அறிவும் அவர் கட்டுரைகளிலும் பெரிதும் வெளிப்படுவதை உணரலாம்.

தமிழாராய்ச்சிக்கு வடமொழி அறிவு தேவை என்பதைப் பட்டறிவின் மூலம் அறிந்திருந்ததனால் வடமொழி இலக்கியங்களைப் பற்றிய நூலையும் எழுதினார். இலக்கிய உதயம் (தொகுதி-2) என்ற இந்நூலின் முன்னுரையில் "வடமொழி இலக்கியங்கள் வைதிகம், பௌத்தம், ஜைனம் என்ற சமயங்களுக்கு உரியனவும், ஜோதிடம், கணிதம் முதலான விஞ்ஞான சாஸ்திரங்களுக்கு உரியனவுமாகப் பலதிறப்படும். இவற்றில் இப்போது வெளியிடும் நூல் வைதிகம், பௌத்தம் என்னும் இரு பகுதிகளுக்கும் உரியதாகும். இதுவே மிக விரிவாக அமைந்துவிட்டது. பௌதிக இலக்கிய வரலாறு பற்றியும் பௌத்த நூல்களின் வரலாறு பற்றியும் தமிழில் நூல்கள் இல்லை. எனவே இவ்வாறு விரித்தெழுத நேரிட்டது. ஏனைய பொருள்கள் பற்றிய வரலாறு மூன்றாவது பகுதியில் வெளியிடப்படும்" என்று தெரிவிக்கிறார். ஆனால் தமிழுலகிற்கு அந்நல்வாய்ப்பு இல்லாமற் போனதால் அம் மூன்றாவது பகுதி வெளிவரவில்லை. இந்நூலில் பாரத நாட்டில் வடமொழி, பாலி இலக்கியங்களின் தோற்றம், வளர்ச்சி ஆகியவற்றை வரலாற்று நோக்கோடு மட்டுமன்றி விளக்க முறையாகவும் திறனாய்வுக் கண்ணோட்டத்தோடும் ஆராய்கிறார். வேதங்கள், உபநிடதங்கள், மகாபாரதம், இராமாயணம், திரிபிடகம், வடமொழி, பாலி மொழிகளிலுள்ள பிற பௌத்த சமய நூல்கள் முதலியவற்றைத் தெளிவாக விளக்குகிறார். ஒவ்வொரு நூலைப் பற்றி எடுத்துரைக்கும்போதும் அதன் ஆசிரியர், நூல் நுவலும் பொருள், நூலின் பிரிவுகள் முதலியவற்றைப் பற்றிக் கூறுகிறார். மேலும் நூலின் ஒவ்வொரு பிரிவும் பேசும் தத்துவங்கள், சடங்குகள், அறிவுரைகள் ஆகியவையும் அவரால் விளக்கப்படுகின்றன.

தமிழில் சங்க காலத்திலிருந்தே வடமொழி அறிவு பரந்திருந்தது. அது இடைக்காலத்தில் சமயங்கள், தத்துவங்கள், புராணங்கள், இலக்கணங்கள் வழி இன்னும் பரந்து தமிழறிஞர்கள் பலரையும் வடமொழி அறிஞர்களாகவும் ஆக்கியிருந்தது. ஆனால் இந்நிலை தற்காலத்தில் மிகவும் மாறிவிட்டது. வடமொழியை அறிந்திருந்த ஒருசில பேராசிரியர்களுள் வையாபுரிப் பிள்ளையும் ஒருவர். தமிழறிஞர்கள் வடமொழி இலக்கியங்களைப் பற்றி அறிய வேண்டுமென்ற விருப்பினால் அவர் இந்

நூலை எழுதினார் எனலாம். பௌத்த இலக்கியங்களைப் பற்றிக் கூறும்போது, "வரலாற்று முறையில் பௌத்த இலக்கியங்களுக்கு முதன்மையான இடம் உண்டு. இந்திய இலக்கியங்களின் கால நிர்ணயத்திற்குப் புத்தரது வரலாறு ஒரு கலங்கரை விளக்கமாக அமைந்துள்ளது. வைதிக இலக்கியங்களுக்கு அடுத்தபடியாகத் தொன்மை வாய்ந்த மக்களது வாழ்வை ஒழுக்க நெறியில் செலுத்தித் தூயதாக்கிய பௌத்த மதத்தின் இலக்கியங்கள் என்றும் போற்றத்தக்கனவாகவே இருக்கும்" (இலக்கிய உதயம்-II : 486) என்கிறார்.

இலக்கியத் திறனாய்வு என்று மட்டுமின்றி, பிற பதிப்பாசிரியர்கள், திறனாய்வாளர்கள் ஆகியோரின் பணிகளின் குறை நிறைகளும் பேராசிரியரால் மதிப்பீடு செய்யப்பட்டுள்ளன.

திறனாய்வு என்று வரும்போது நடுநிலையுடன் செயல்பட்டிருக்கிறார் வையாபுரியார். உ. வே. சாமிநாதய்யரின் பதிப்புகளைப் புகழ்ந்து அவரது காலத்தை சாமிநாதய்யர் காலம் எனப் பிற்காலத்தவர் புகழ்வர் என்று நெக்குருகிச் சொல்லும் அதே சமயம் அவர் பதிப்பிலுள்ள குறைகளை நயமாகச் சுட்டிக்காட்டவும் தயங்கவில்லை. சீவகசிந்தாமணிக்கு மூன்றாவது பதிப்பு 18 ஆண்டுகளுக்குப் பின்னர் உ. வே. சாமிநாதய்யரால் பதிப்பிக்கப்பட்டபோது பேராசிரியர் அப்பதிப்பிலுள்ள சில குறைகளைக் காட்டி, அவ்வாறு காட்டுவதன் நோக்கம் பற்றியும் குறிப்பிட்டவை பின்வருமாறு :

"மூன்றாம் பதிப்பு சில சில திருத்தங்களைப் பெற்றிருந்த போதிலும் இன்னும் திருத்தப்பாடு எய்தவேண்டும் இடங்கள் பலவுள்ளன. ஆராய்ச்சிக்கு முடிவில்லை, முயற்சி மிகுந்தோறும் பிரதிகளின் உதவி பல்குந்தோறும் திருத்தங்கள் ஏற்பட்டுக் கொண்டிருத்தல் இயல்புதான். தமிழ்க்கல்வி மேன்மேலும் பரவ வேண்டுமாயின், பிழைகளைப் பிழையென உணர்தல் வேண்டும். அவற்றைப் பொதிந்து வைத்தலைக் காட்டிலும் தமிழன்னைக்குச் செய்யும் பெருந்தீங்கு ஒன்றுமில்லை. பிழையுளதெனக் காட்டும் மாத்திரையில் பதிப்பினைக் குறை கூறியதும் ஆகாது. பதிப்பு மேன்மேலும் திருந்த வேண்டும் என்னும் ஒரு நோக்கம் பற்றியே சில பிழைகள் இங்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ளன".

சிறுவயதிலிருந்தே நெருங்கிய நண்பர்களாக விளங்கியவர்கள் பேராசிரியரும் டி. கே. சி. யும். இருப்பினும் டி. கே. சி. யின்

கம்பராமாயணப் பதிப்பு முறை பேராசிரியருக்கு உடன்பாடன்று. டி. கே. சி. யோடு பலமுறை இதுபற்றி விவாதம் நடத்தியதும் உண்டு. பின்னர் டி. கே. சி. பதிப்பு பற்றி இந்துப் பத்திரிகை பேராசிரியரிடம் மதிப்பீடு கேட்டபோது, ஆராய்ச்சியாளன் என்ற முறையில் நடுநிலையில் நின்று திறனாய்வு செய்தார் என்பதைத் தமிழறிஞருலகம் நன்கறியும். ''வரலாற்றுப் பார்வை, சமூக நோக்கு, அழகியல் அக்கறை ஆகிய மூன்றையும் ஒன்றையொன்று சார்ந்தவையாக இருக்கும்வண்ணம் இணைத்து அவற்றின் அடிப்படையில் இலக்கியப் படைப்புகளைத் திறனாய்வு செய்தவர் வையாபுரிப்பிள்ளை'' என்ற கைலாசபதியின் கூற்று (இலக்கியமும் திறனாய்வும் : 134) பேராசிரியரின் இலக்கியத் திறனாய்வு அணுகுமுறையை நன்கு புலப்படுத்தும்.

## ஒப்பியல் ஆய்வு

இன்று தமிழியலில் முக்கியமானதொரு ஆராய்ச்சித் துறையாக விளங்கும் ஒப்பிலக்கிய ஆராய்ச்சியின் முக்கியத்துவத்தையும் அவர் அன்றே வலியுறுத்தியுள்ளார். ஒப்பியல் ஆய்வு என்ற துறையின் பொருளை முழுமையாக அறிந்து உணர்ந்து செயலாற்றியவர்களுள் வ. வே. சு. அய்யரும் வையாபுரிப் பிள்ளையுமே குறிப்பிடத்தகுந்தவர்கள் என்றும், வையாபுரிப்பிள்ளை ஒப்பியல் அணுகுமுறையை தமது ஆய்வுகளுக்கு முழுமையாகப் பயன்படுத்தியதோடு ஒப்பாய்வு முறையை விளக்கிய பெருமைக்கும் உரியவராகிறார் என்று டாக்டர் அ. அ. மணவாளன் சாகித்ய அகாதெமி நடத்திய பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை நூற்றாண்டு விழாக் கருத்தரங்கிலே குறிப்பிட்டது மிகையுரையன்று.

ஒப்பாய்வை, திராவிட இலக்கிய ஆராய்ச்சி, இந்திய இலக்கிய ஆராய்ச்சி என இரண்டு வகையாகப் பிரித்துக் காண்கிறார். நாகபுரியில் நடந்த கீழைக்கலை மாநாட்டின் தலைமையுரையில் ஒப்பாய்வின் தேவையைக் கூறுகிறார். ஒப்பியல் நோக்கில் செய்யப்படும் ஆராய்ச்சி ''குறுகிய மனப்பான்மையாகிய திண்ணிய சுவரை இடித்துத் தகர்த்துவிடும்....இவ் வகைக் கல்வியின் மேல் எழுந்த ஆராய்ச்சிக்கு ஒரு புதிய பொருண்மையும் ஏற்படும்'' (திராவிட மொழிகளில் ஆராய்ச்சி : 27). ''கன்னடம், தெலுங்கு, மலையாளம் என்ற மூன்று மொழியிலுள்ள கல்வியாளர்கள் வடமொழி இலக்கியம் பற்றிய அளவில் தகுதியுள்ளவர்களாக இருப்பார்கள். ஆனால் தற்காலத்திலுள்ள தமிழறிஞர்களைக் குறித்து இவ்வாறு சொல்ல முடியாது என்று

அஞ்சுகிறேன். தமது தாய்மொழியைத் தவிர பிற திராவிட மொழிகள் பற்றிய அளவில் இவ் அறிஞர்களில் ஒவ்வொருவரும் அறியாமையால் பீடிக்கப்பெற்று, நிலையுணராதிருக்கின்றார்கள் என்றுதான் சொல்லவேண்டும். வியாசன், வால்மீகி, காளிதாசன் என்பவர்களைப் பற்றியும், வள்ளுவர், கம்பன் என்பவர்களைப் பற்றியும், பம்பா, ரம்பா, பொன்னா என்பவர்களைப் பற்றியும் எழுத்தச்சனைப் பற்றியும் அறியாதவனைத் திராவிட மொழிகளில் ஒன்றிலேனும் வல்லவன் என்று எவ்வாறு கூற முடியும்? திராவிட இலக்கியங்களையும், இந்திய இலக்கியங்களையும் ஒப்புநோக்கிக் கற்றவனுடைய கல்வியறிவு மிகவும் பரந்துள்ளதாயும் இருத்தல் ஒருதலை'' என்பதை வலியுறுத்திக் கூறுகிறார். தமிழும் மலையாளமும், தமிழும் பிராகிருதமும் முதலான மொழி ஒப்பு நோக்குக் கட்டுரைகளை எழுதியிருப்பதோடு இலக்கிய ஒப்பு நோக்கும் அவர் பெரிதும் விரும்பிய துறை. கம்பராமாயணத்தை ஜைன ராமாயணத்தோடும், திருக்குறளைத் தம்மபதத்தோடும், கிரேக்கத் தொகை நூல்களைச் சங்க இலக்கியங்களோடும் ஒப்பிட்டுக் காட்டியுள்ளார். கவிதைப் படிமங்கள் சில பல்வேறு மொழி இலக்கியங்களிலும் ஒருபோலக் கையாளப் படுவதும் சுட்டப்படுகின்றன சான்றாக, ஞானத்தை உணர்த்தும் படிமமாக ஒளியைக் கூறும் வழக்கம் பல நாட்டு இலக்கியங்களிலும் உள்ளமை சுட்டப்படுகிறது. பாரசீக மொழியில் இப்படிமம் கையாளப்படுகிறது. 'ஞானத்தை விளக்கையேற்றி' என அப்பரும் (4, 45, 3), 'ஞானச்சுடர் விளக்கேற்றினன்' என பூதத்தாழ்வாரும் (1) 'அறிவான ஞான வளரொளியான்' என அறநெறிச் சாரமும் (67) கூறுவது பேராசிரியரால் ஒப்புநோக்கி உணரப்படுகிறது. இலக்கியக் கொள்கைகளை வரையறுக்கும் போது பல கருத்துக்கள் உலகப் பொதுமையுடையனவாக விளங்குகின்றன என்பதைப் பேராசிரியர் தம் ஆய்வின்மூலம் வெளிப்படுத்துகிறார். ஒப்பியல் ஆய்வினைத் தமது இலக்கிய ஆய்விலே பலமுறை பயன்படுத்தி வெற்றி கண்டவர் அவர். சான்றாக, குறுந்தொகைச் செய்யுளில் (113) எருமணம் என்ற சொல்லிற்குப் பலர் பலவாறு பொருள் கண்டபோது, அதன் உண்மைப் பொருளை உணர, கன்னட தெலுங்கு மொழிகளின் உதவியை நாடுகிறார். இச்சொல்லின் முதல் பகுதியாகிய 'எரு' கன்னடத்திலும் தெலுங்கிலும் உள்ள 'எரெ' என்ற சொல்லோடு தொடர்புடையதாகத் தோன்றுவதைக் கண்டறிந்தார். இம்மொழிகளில் இச்சொல் சிலம்பு எனப் பொருள்படுவதைக் கொண்டு 'எருமணம்'

என்பதற்குச் செங்கழுநீர் எனப் பொருள் இருப்பதை உறுதிப் படுத்துகின்றார்.

## பதிப்பியல் பணி

''நமது நாட்டில் பதிப்பு வேலையைச் சிறப்பாகச் செய்தவர் களுள்ளே உ. வே. சாமிநாதையர், சி.வை. தாமோதரம் பிள்ளை, எஸ். வையாபுரிப்பிள்ளை முதலியவர்களைக் குறிப்பிட வேண் டும்'' என்பர் டாக்டர் வ. அய். சுப்பிரமணியம் (சில கட்டுரைகள்: 121). இவர்களுள் காலத்தால் பிந்தியவர் வையாபுரியார். பேரகராதிப் பதிப்பு என்ற பெரும் பணியோடு பழைய இலக் கிங்களை நல்ல முறையில் பதிப்பித்தலும் நல்ல பதிப்புகள் இவ்வாறு இருக்கவேண்டுமென்று விளக்குதலும் பேராசிரியர் தமிழுக்குச் செய்த சேவைகளாகும். இவர் 38 நூல்களின் நல்ல பதிப்புகளை வெளியிட்டிருக்கிறார். இந்தப் பதிப்பு முயற்சிகளை இருவகையாகப் பிரிக்கலாம். ஏற்கனவே பிறரால் பதிப்பிக்கப் பட்ட நூல்களுக்கு மேலும் திருத்திய பதிப்பு தேவை என்ற நோக்கில் செய்யப்பட்ட பணிகள் ஒருவகை. முந்தைய பதிப்பாசி ரியர்களுக்குக் கிடைக்கப்பெறாத ஏட்டுச் சுவடிகள் அவருக்குக் கிடைக்கப்பெற்றதே இம்முயற்சிகளுக்கு முக்கிய காரணம். எடுத்துக்காட்டாக, கம்பராமாயணத்தின் பாலகாண்டம் (1-7 படலம்) புத்தகாண்டம் (1-3 படலம்), சீவகசிந்தாமணி ஆகிய வற்றைக் கூறலாம். அதுகாறும் ஏச்சுவடியும் பெறாமல் அமைந்திருந்த நூல்களை அறிமுகம் செய்யும் அவாவில் காரண மாக அவர் செய்த பதிப்புகள் மற்றொரு வகை. எடுத்துக் காட்டாக தொல்காப்பியம், பொருளதிகாரம் இளம்பூரணருரையை கூறலாம். தொல்காப்பியப் பதிப்பாசிரியர் வரிசையில் பொரு ளதிகாரம் இளம்பூரணருடைய முதன் முதலில் பதிப்பித்த பெருமை பிள்ளையவர்களைச் சாரும். அதுபோன்றே இன்னா நாற்பதுக்கு அதுவரையில் அச்சிடப்படாத பழைய உரையைப் பதிப்பித்ததையும் கூறலாம். இவ்வகைப் பதிப்புகளுள்ளும் புதிய வரலாற்றுச் செய்தியைத் நூல்களுக்கு தரும் முக்கியத்துவம் கொடுத்து அவற்றைப் பதிப்பிப்பதிலே ஆர்வம் காட்டினார். இதன்மூலம் கால ஆராய்ச்சி, சொல் ஆராய்ச்சி போன்ற ஆய்வு களுக்குத் தேவையான வரலாற்றுக் குறிப்புகள் கிடைக்கக்கூடும், என்பது அவர் கணிப்பு. காட்டாக தெய்வச்சிலையார் விறலிவிடு தூது, இராமப்பய்யன் அம்மானை ஆகியவற்றைக் கூறலாம்.

குறிப்பிட்ட ஒருவகை இலக்கியங்கள் என்ற வரையறை யின்றிப் பல்வேறுவகை இலக்கிய நூல்களையும் இலக்கண நூல் களையும் பதிப்பித்தார். இவருடைய முதல் பதிப்பான மனோன் மணியம் வெளிவந்தபோது, கவிமணியவர்கள் திராவிடன் நாளேட்டில் இப்பதிப்பினைத் திறனாய்வு செய்தார். இக் கட்டுரையின் பெயர் ‘மனோன்மணியத்தின் மறுபதிப்பு’. அதில் அவர் மனோன்மணியத்திற்கு இவ்வித மறுபிறப்பு வாய்க்கும் என்று யாரும் எதிர்பார்க்கவே இல்லை. இந்நூலைத் தொட்டா லும் கைமணக்கும். சொன்னாலும் வாய் மணக்கும் என்று கூறுவது ஒருகாலும் புனைந்துரையாகமாட்டாது, உண்மை யுரையேயாம்'' என்று புகழ்வதிலிருந்து முதற் பதிப்பு முயற்சியின் பெருமையை அறியலாம்.

1920க்கும் 39க்குமிடையேயுள்ள காலகட்டத்தில் 21 நூல்கள் பேராசிரியரால் பதிப்பிக்கப்பெற்றன. இலக்கிய வரலாறு எழுதிய பேராசிரியர் கா. சிவத்தம்பி (1988:122) ‘‘இக்கால கட்டத்தில் தமிழின் இடைக்கால இலக்கியங்களின் பதிப்பு அதிகரிப்பதைக் காண்கிறோம். வையாபுரிப்பிள்ளை ஒருவரது பணியே இவ்வுண்மையை எடுத்துக்காட்டுவதாய் அமைகின்றது'' என்று கூறுவது வையாபுரியாரின் பதிப்புப் பணியின் முக்கியத் துவத்தைக் காட்டுகிறது.

தமது பதிப்புகளை நூற்பகுதியின் முற்பகுதியில் ஆராய்ச்சி முன்னுரையையும் பிற்பகுதியில் தேவையான முழுமையான பிற்சேர்க்கைகளையும் அமைத்து, உண்மையான பாடல்களைக் கண்டறிந்து, பதிப்பு விதிகளைத் தெளிந்து பதிப்பித்தன்மூலம் தமது பதிப்புத் திறனை வெளியிட்டுள்ளார். வையாபுரியார் பேரகராதியை வெளியிட்ட அனுபவத்தாலும் கம்பனுக்கு நல்ல பதிப்பைக் கொணரவேண்டும் என்ற ஆர்வத்தாலும் சிறந்த பதிப்புகள் எவ்வாறு இருக்கவேண்டும் என்பது பற்றி அவர் கூறும் கருத்துக்கள் இக்காலப் பதிப்பாசிரியர்களுக்கு வழிகாட்டியாக விளங்கும் என்பதில் ஐயமில்லை. ‘‘தமிழ்நாட்டுப் பதிப்பாசிரியர் உலகிலேயே வான்மணி எனத் திகழ்வார்'' என்று திரு. வி. க. கூறுவது உயர்வு நவிற்சியன்று (திரு. வி. க. வாழ்க்கைக் குறிப்புகள்: 210).

## அகராதியியல் துறை

பதிப்பாசிரியர் என்ற நிலையில் பேரகராதியை (Tamil Lexicon) வெளியிட்டுத் தமது பெயரைத் தமிழுலகில் நிலை நிறுத்தியவர் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை. மொத்தம் ஒரு இலட்சத்து நாலாயிரத்து நானூற்றைந்து சொற்கள் கொண்ட ஏழு தொகுதிகளை (அனுபந்தப் பகுதியும் சேர்த்து) வெளியிட்டுள்ளார். ஒரு பேரகராதியில் இடம்பெற வேண்டிய சொற்களைப் பற்றி அவர் தரும் கருத்து பின்வருமாறு: ''தமிழ் மொழியின் பூர்வ சரித்திரத்தையும் அது வளர்ந்து வந்திருக்கின்ற நெறியையும் தற்காலப் போக்கையும் யாராலும் மாறற முடியுமா? பலமொழிச் சொற்களின் கலப்பு நமது அறிவு வளர்ச்சியையும் நாகரீகத்தையும் பண்பாட்டையும் புலப்படுத்துவதல்லவா...? அகராதி என்பது பொருளை மாத்திரம் விளக்கும் கருவி நூல் என்ற கொள்கை மாறி, இந்த இயல்போடு ஒரு மொழியின் ஆரம்ப காலத்திலிருந்து தற்காலம் வரையுள்ள எல்லா சொற்களுக்கும் ஆதாரமாகவும் அது விளங்குதல் வேண்டும். கொச்சைச் சொல் முதலியவற்றை நீக்குதல் கூடாது. இவற்றால் விளையும் நன்மைகள் மிகப்பல. ஒரு மொழியின் ஒலி மரபு இவற்றில் நன்கு புலப்படும். ஒரு தாய்மொழியினின்றும் கிளை மொழிகள் தோன்றுவதற்கு இவை காரணமாயுள்ளன''.

சங்கப் புலவர்களின் பெயர்களை அகரவரிசைப்படுத்தி, அவர்களால் பாடப்பட்ட பாடல்களையும் அவை இடம்பெறும் நூல்களையும் குறிக்கும்வண்ணம் சங்கப் புலவர் அகராதி ஒன்று அவரால் தொகுக்கப்பெற்றது. இதிலிருந்து சங்கப் புலவர்கள் பாடிய பாடல்களையும் அவர்கள் ஒவ்வொருவரும் எத்தனை பாடல்களைப் பாடியுள்ளனர் என்பதையும் அறிய முடிந்தது. இப்பதிப்பில் சிறப்புப் பெயர் அகராதி, புலவர்களும் அவர்களால் பாடப்பட்டோரும், அரசர் முதலியோரும் அவர்களால் பாடப்பட்டோரும், புலவர்கள் அகராதி என்ற பல தலைப்புகளில் அகராதிகள் தரப்படுகின்றன.

அகராதித் துறையில் பலவகையான அகராதிகள் தொகுக்கப்படவேண்டும் என்ற தமது அவாவையும் வெளிப்படுத்துகிறார். அவையாவன:

1. இலக்கிய அகராதி
2. சொல் வரலாற்று அகராதி

3. வரலாற்று அகராதி
4. கலைச்சொல் அகராதி
5. சங்கேதச்சொல் அகராதி
6. கடினச் சொல் அகராதி
7. ஒருபொருட் பெயர் அகராதி
8. எதிர்ச்சொல் அகராதி
9. மரபுத் தொடர் அகராதி
10. தொடை அகராதி
11. தொகை அகராதி
12. பொருட்பெயர் அகராதி
13. ஊர்ப்பெயர் அகராதி.

பேரகராதிப் பதிப்பில் அவர் ஈடுபட்டிருந்த காலத்தில் நிகண்டுகளிலிருந்து சொற்களைத் தொகுக்கும் தேவை ஏற்பட்டது. ஏட்டுச் சுவடிகளாக இருந்த அவற்றை பதிப்பிக்கும் எண்ணமும் அவ்வமயம் அவருக்கு உண்டாயிற்று.

இந்நிகண்டுகளின் பதிப்புப் பணிக்குப் பிறிதொரு நிகழ்ச்சியும் தூண்டுகோலாக அமைந்தது. வடமொழியில் நிகண்டுகள் பல வெளியிடப்பட்டுள்ளதைக் கண்டு, அதுபோன்று தமிழிலும் பல நிகண்டுகள் பதிப்பிக்கப்பட வேண்டும் என்ற தமது அவாவினை வெளிப்படுத்துகிறார். 'தமிழகராதியின் ஆதார நூற்றொகுதி' (Sources of Tamil Lexicography) என்ற வரிசையில் தாமும் நிகண்டுகளைப் பதிப்பிக்கவிருப்பதாக நாமதீப நிகண்டின் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார். இவ்வரிசையில் முதல் நூல் இது. அரும்பொருள் விளக்க நிகண்டு இரண்டாவதாகவும் பொதிகை நிகண்டு மூன்றாவதாகவும் வெளிவந்தன. கயாதர நிகண்டு சென்னைப் பல்கலைக்கழக வெளியீடு.

## இலக்கண ஆய்வு

வையாபுரியார் இலக்கணத் துறைக்கும் சிறந்த தொண்டாற்றியுள்ளார். பல இலக்கண நூல்கள் இவரால் பதிப்பிக்கப்பெற்றன. தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் இளம்பூரணருரையை மட்டுமன்றி நவநீதப் பாட்டியல், களவியற் காரிகை, ஆகியன

வற்றையும் முதன்முதலில் அச்சேற்றிய பெருமைக்குடையவர். 'களவியற் காரிகை' என்ற பெயரைத் தாமே அமைத்துக் கொண்டதாக அவர் அதன் முன்னுரையில் குறிப்பிடுகிறார். நூற்பெயர் காரணமும் அவரால் தரப்படுகின்றது. 'யாப்பருங் கலக் காரிகை யாப்பிற்குரிய செய்திகளைக் கட்டளைக் கலித் துறைச் செய்யுளை விளக்குவதுபோல், இந்நூல் அகப்பொருள் செய்திகளை அந்தாதித் தொடையில் அமைந்த கட்டளைக் கலித் துறைச் செய்யுளால் சுருங்க உரைக்கின்றது''.

தம் சொல்லாராய்ச்சியில் அவர் இலக்கணக் கூறுகளைப் பெரிதும் பயன்படுத்தினார். சிலப்பதிகாரத்தின் காலத்தைத் துணிய அவர் தரும் சான்றுகளுள் இலக்கணச் சான்றுகளும் அடங்கும். வடமொழி இலக்கணம், பாணினியத்தைப் பற்றிய செய்திகள், தொல்காப்பியத்தின் தனித்தன்மை ஆகிய பல செய்தி களை 'இலக்கணச் சிந்தனைகள்' என்ற நூலின் மூலம் அளிக் கிறார்.

## நாட்டுப்புறவியல் ஆய்வு

நாட்டுப்புற இலக்கியத்திலும் பேராசிரியரின் கவனம் சென்றது. வில்லுப்பாட்டாகப் பாடப்பெற்று வரும் இரவிக்குட்டிப் பிள்ளைப் போர் என்ற நூல் முழுவதையும் தாம் பதிப்பித்த இராமப்பய்யன் அம்மானையின் பிற்சேர்க்கையாக அச்சேற்றி யுள்ளார். 17-ஆம் நூற்றாண்டில் மதுரையை ஆண்ட திருமலை நாயக்கரின் தளபதியான இராமப்பய்யனைப் பற்றிய நூல் இராமப்பய்யன் அம்மானை. முதலில் மைசூரிலும் பின்னர் 1684-இல் திருவிதாங்கூரிலும் படையெடுத்துச் சென்று வெற்றி கண்டவர் திருமலை நாயக்கர். இப்போர்களிளெல்லாம் தளபதி இராமப்பய்யனே படை நடத்தினார். அவர் சேதுபதி சடைக்கத் தேவருடன் நடத்திய போரையே இந்நூல் விவரிக்கின்றது. திருமலை நாயக்கர் நாஞ்சில் நாட்டின் மீது படையெடுத்தபோது, தளபதி இராமப்பய்யனை எதிர்த்த நாஞ்சில் நாட்டுப் பெருவீரர் தளபதி இரவிக்குட்டிப்பிள்ளை. இவர் அரசர் இராமன் பிள்ளை யின் தளபதி. இப்போர் நிகழ்ந்த இடம் நாகர்கோயிலுக்கு மேற் காக இரண்டு மைல் தூரத்தில் உள்ள கணியான்குளம் என்ற ஊர். நடைபெற்ற போரில் இரவிக்குட்டிப் பிள்ளை சூழ்ச்சியால் கொல்லப்பட்டார். போருக்குப் புறப்படும்போது இரவிக்குட்டிப் பிள்ளையின் மீது பல்லி விழுந்ததை அமைத்து ஒரு கற்சிலை

போர்க்களத்தில் எழுப்பப்பட்டது என்று கூறும் வையாபுரியார், அச்சிலையை இன்றும் தக்கலை என்னும் ஊரிலுள்ள பத்மநாப புரம் அரண்மனையில் காணலாம் என்ற செய்தியையும் தெரிவிக் கிறார்.

## வாழ்க்கை வரலாறுகள்

தமிழ் இலக்கிய வரலாற்றில் பெருமை பெற்று விளங்கும் சில ஆசிரியர்களின் வாழ்க்கை வரலாற்றுக் கட்டுரைகளை அளித் துள்ளார். தமிழ்ச் சுடர் மணிகள் என்ற நூலில் 22 ஆசிரியர் களின் வாழ்க்கையையும் அவர்களது தமிழ்த் தொண்டும் பற்றிய குறிப்புகளும் இடம்பெறுகின்றன. இலக்கண ஆசிரியர்கள், இலக்கியம் படைத்த மேதைகள், உரையாசிரியர்கள், புலவர் களை ஆதரித்த வள்ளல்கள், பதிப்பு மேதைகள், வரலாற்று ஆசிரியர்கள், ஆராய்ச்சி அறிஞர்கள், இலக்கிய ரசிகர்கள் போன்ற பலதரப்பட்ட அறிஞர்களின் வரலாறுகள் பேராசிரி யரால் தரப்படுகின்றன. இவர்கள் அனைவரும் தமிழாசிரியர் களாக இருந்தனர் என்று சொல்ல முடியாது. தாமோதரம் பிள்ளை, நீதிபதி; வ.உ சி. ஒரு வழக்கறிஞர்; கனகசபைப்பிள்ளை அஞ்சல்துறை ஆய்வாளர்; சுந்தரம் பிள்ளை தத்துவவியல் பேரா சிரியராகவும் கல்வெட்டாய்வாளராகவும் புகழ் பெற்றவர்.

தொல்காப்பியர், கம்பர், திருவள்ளுவர், மாணிக்கவாசகர், சடையப்ப வள்ளல், புகழேந்தியார், குமரகுருபரர், துறையூர் சிவப்பிரகாச சுவாமிகள், மீனாட்சி சுந்தரம் பிள்ளை, சி வை. தாமோதரம் பிள்ளை, ஆசிரியர் சுந்தரம் பிள்ளை, வி. கனகசபைப் பிள்ளை, உ. வே. சாமிநாதையர், ரா. இராகவையங்கார், பாரதியார், வ.உ.சி., இலக்குமணபிள்ளை, மு. இராகவையங்கார், கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை, டி.கே.சி. ஆகியோர் வரலாறு களை ஆய்வுப் பின்னணியோடு தருகிறார். அவர்களது இலக் கியத் தொண்டுகளைப் பற்றிக் கூறுவதோடு அவர்களின் பெற்றோர், பிறந்த ஊர் முதலிய செய்திகளையும் தருகிறார் அவர்களது இளம்பிராய இயல்புகளையும் தனித்தனியே ஆராய் கிறார். பண்டைக்கால அறிஞர்களின் வாழ்க்கையை ஆராயும் போது அவர்களை இலக்கியப் பணிக்கு ஊக்குவித்த வாழ்க்கைச் சூழல்களை எடுத்துரைப்பதில் அக்கறை காட்டப்படுகிறது. மேலும் பண்டைக்காலப் புலவர்களின் வாழ்க்கை வரலாறு முழு வதும் கிடைக்கவில்லையே என்ற ஏக்கம் அவரது கட்டுரைகளில்

பிரதிபலிக்கின்றது. அறிஞர்களின் இலக்கிய முயற்சியைப் பாராட்டுகின்ற வகையில் அவர் தரும் கருத்துக்களிலிருந்து அவர்கள்மாட்டு அவர் கொண்டுள்ள அன்பும் மதிப்பும் புலப் படுகின்றன.

## பண்பாட்டு ஆராய்ச்சி

ஆய்வுக் கட்டுரை எழுதுபவர்கள் புதியதாக ஏதையாவது கண்டு அதை நிரூபிப்பதில் விருப்பமுடையவர்கள். அதிலும் வையாபுரியார் தம்முடைய ஆராய்ச்சியின் மூலம் அதுவரை நிலவி யிருந்த கொள்கையை மறுத்துப் புதுக்கொள்கையை நிலை நாட் டியவர். இத்தகைய ஆராய்ச்சியாளர்கள் பண்பாடு, சமயம், கலை முதலானவை பற்றிய பண்பாட்டுக் கட்டுரைகள் எழுதுவது மிக அரிது. ஏனெனில் இவற்றில் புதியதாக எதையாவது கண்டு பிடித்துச் சொல்வது என்பது மிகவும் கடினம். பேராசிரியரோ, பண்பாட்டுக் கட்டுரைகள் பல எழுதியதோடு பண்டைத் தமிழக வாழ்க்கையைப் புதிய நோக்கில் கண்டு பல உண்மைகளைத் தெரிவிக்கிறார்கள். பண்பாட்டின் கூறுகளாகப் பண்பு நலம், வாழ்க்கை நலம் ஆகியவற்றைக் கூறுகின்றார். ஒரு சமு தாயத்தின் பண்பாடு அவ்வக்கால இலக்கியங்களை நன்கு அறி வதன் மூலம் தெளிவாகிறது என்பது அவர் கருத்து. ஒரு சமு தாயத்தின் பண்பாட்டை அந்தச் சமுதாயத்தின் ஓர் அங்கமான ஆசிரியனது இலக்கியத்தில் விளக்குகின்ற அவனது பண்பாடு உணர்த்தும்; இவ்விரண்டு பண்பாடுகளில் ஒன்றின் இயல்பு பிறி தொன்றின் இயல்பை அறிய உதவும் என்பதோடு பண்பாட்டு வளர்ச்சியை அறிய இலக்கிய வரலாறு உதவுவதைக் காட்டு கிறார்.

## மொழியியல் நோக்கு

மொழியியல் பற்றிய பேராசிரியரின் கருத்துக்கள் இன்றளவும் அறிஞர்களிடையே உடன்பாட்டுக் கருத்துக்களாகவே உள்ளன. ஒருவரது வாழ்வில் தாய்மொழிக்குரிய இடம் பற்றியும் பிறமொழி கள் பெறவேண்டிய இடம்பற்றியும் அவருக்குத் தெளிவான சிந்தனை உண்டு. தாய்மொழியாம் தமிழைப் பற்றிக் கூறுகையில் ''நமது தாய்மொழிகளும் அவற்றிலுள்ள நூல்களும் வளத்திலும் தொன்மையிலும் வடமொழிக்கு சமமானவைகளாகும். தமிழ் மொழியை எடுத்துக்கொண்டால் இது மிகவும் உண்மை என்பது புலப்படும். தமிழிலுள்ள இலக்கியம் கிறிஸ்து சகாப்தத்திலேயே

தோன்றத் தொடங்கியவை எனலாம். மொழி ஆராய்ச்சி என்ற கண்கொண்டு நோக்கினால் தமிழானது திராவிட மொழிகள் எல்லாவற்றுள்ளும் மிகத் தொன்மை வாய்ந்து பயிலப்பட்டதென் பதும் மிகவும் சொல்வளம் நிரம்பியதென்பதும் ஐயத்திற்கிட மில்லாதபடி மிகப் பழைய சொல் வடிவங்களாகப் பலதிறப்பட்டுச் செழித்து வளர்ந்துள்ளதென்பதும் நன்கு விளங்கும் என்று டாக்டர் கால்டுவெல் கூறியுள்ளார். கவிதையின் பெருமையை நோக்கினாலும் நமது மொழிகள் வடமொழிக்கு ஒரு சிறிதும் பிற் பட்டவையில்லை. இவற்றால் நமக்குள்ள பெருமை நியாய மானதேயாகும்'' என்கிறார். வடமொழியை நாட்டின் பொது மொழியாகச் செயல்படுத்தும் முறைகள் அவர் காலத்தில் நடை பெற்றபோது ''பத்திரிகைகளை வாசிப்பவர்கள் வடமொழியைத் தேசப் பொதுமொழியாக்க வேண்டுமென்றும் அதனை மத்திய அரசாங்கத்தார் இந்தியன் ஒவ்வொருவனுக்கும் கட்டாயப் பாட மாக ஏற்படுத்த வேண்டுமென்றும் பலரும் பல இடங்களிலும் வற்புறுத்தித் தீர்மானங்கள் நிறைவேற்றி வருவதை அறிவார்கள். இம்முயற்சி நமது நாட்டின் நலத்திற்கும் மக்களின் அறிவு வளர்ச் சிக்கும் இடையூறு பயக்கும் என்பதைக்கூட நினைப்பவர்கள் இல்லை. எனக்கு வடமொழியில் நிரம்பிய பற்று உண்டு. அம் மொழியிலுள்ள கலைச் செல்வங்களைக் கற்று அனுபவிக்க வேண்டும் என்ற ஆசை மிக உண்டு. ஆனால், அது ஆராய்ச்சித் துறைக்குரிய மொழியேயன்றி, நாட்டின் முன்னேற்றத் துறை கட்குரிய மொழியன்று'' (கம்பன் காவியம் : 71) என்று கருத்துத் தெரிவித்தார்.

ஆங்கிலத்திலே நல்ல புலமையுடைய ஆங்கில நூல்களை நன்கு கற்று தமது தமிழாராய்ச்சிக்குப் பயன்படுத்திய, ஆங்கி லத்திலே நூல்களையும் கட்டுரைகளையும் எழுதிய நம் பேரா சிரியர் ஆங்கிலத்தை ஒரு கருவி மொழியாகவே பயன்படுத்தினார். ஆங்கிலமொழிப் பற்றாளராக ஒருபோதும் மாறியதில்லை. ஆங்கிலம் கற்றவர்கள் ஆங்கில மோகத்திற்கு ஆட்பட்டு தமிழை மறப்பதை, தமிழை மதியாதிருக்கும் போக்கைக் கண்டிக்கிறார்.

''ஆங்கிலம் கற்ற ஒரு சில தமிழ் மக்கள் 'தமிழ்' என்று கேட்டவுடனேயே வெறுப்புக்கொண்டு தமிழ் நூல்களைத் தொடு வதுகூடத் தமது கௌரவத்திற்கு அழிவு என்று கருதி வந்தார்கள். ஏகதேசமாய்த் தமிழ்ப் புஸ்தகங்களை வாசிக்கவோ அல்லது தமிழில் பேசவோ நேர்ந்துவிட்டால், தமிழ்ச் சொற்

களை ஆங்கிலத் தோரணையில் உச்சரித்துத் தம்மை ஆங்கிலேயன் என்று பிறர் கருதுமாறு நடித்து வந்தனர். சில தமிழ்ப் பேராசிரியர்களும் தமிழை 'டாமில்' என்று உச்சரிப்பதைப் பலரும் கேட்டிருக்கலாம்'' என்கிறார் (தமிழின் மறுமலர்ச்சி : 69).

இன்று நம் சமூகத்தில் காணப்படும் ஆங்கில மோகம் பேராசிரியர் காலத்திலேயே இருந்திருக்கிறது என்பதையும் அறிய முடிகிறது. ''தமிழ்க் குடும்பத்திலுள்ள நண்பர் ஒருவர் ஆங்கிலத்தில் நல்ல பயிற்சி உள்ளவர். சதா ஆங்கிலத்தில்தான் பேசுவார். இவருக்கு ஏற்றாற்போல் இவருடைய மனைவியாரும் ஆங்கிலத்தில் எம். ஏ., பட்டம் பெற்றவர். ஆகவே தப்பித் தவறிக்கூடத் தமிழ் இவர்கள் பேச்சிலே நுழைய இடமில்லை. தங்களுடைய அருமைப் பையனையும் ஆங்கில தர்பாரில்தான் வளர்த்து வந்தார்கள். அவன் பேசுவதும் ஆங்கிலத்தில்தான். தாங்கள் மிக அருமையாய் வளர்த்து வந்த நாயினிடத்தில்கூட ஆங்கிலத்தில்தான் பேசுவது. நாய்க்கு ஆங்கிலத்தில் குரைக்க முடியவில்லையே என்று தம்பதிகளுக்குச் சிறிது வருத்தந்தான்'' (சொற்கலை விருந்து : 41) என்ற கூற்றில் அவர்களிடம் சினத்துடன் நகைச்சுவையுணர்வுடன் கூடிய இகழ்ச்சியும் இழையோடுவது புலனாகிறது.

மேற்கூறிய உரைகள் பிறமொழிகளாகத்தான் அதாவது ஒப்பாய்வு, வரலாற்றாய்வு, திறனாய்வு, இலக்கிய உணர்ச்சி ஆகியவற்றிற்கு உதவுவனவாகத்தான் கண்டார் என்பது புலனாகிறது. ஆராய்ச்சி ஆராய்ச்சிக்காகவே என்ற கொள்கைப் பிடிப்புடன் வாழ்ந்த அவரை அக்காலத் தமிழறிஞர்கள் வடமொழிச் சார்பாளர் என்றே முத்திரை குத்தினர். அவர் வடமொழியைச் சிறப்பித்து அதற்கே அடிமையாகிவிட்டார் என்று ஒரு சிலர் கருதுவது உண்மைக்குப் புறம்பானது. அவருடைய தாய்மொழிப் பற்று, வேறு எந்தத் தமிழனுடைய பற்றுக்கும் ஒரு சிறிதும் குறைந்ததன்று. வடமொழியை ஆராய்ச்சி நோக்கிலே கண்ட வையாபுரியார், அக்கால ஆராய்ச்சியாளர் பலரும் வடமொழியைப் பெரிதாக மதிக்கும் போக்கையும் வடமொழி ஆராய்ச்சிக்கு முக்கியத்துவம் கொடுக்கும் போக்கையும் கண்டித்துள்ளார் என்ற செய்தி கூட தமிழறிஞர் பலருக்குப் புதுமையாகத் தோன்றலாம். வடமொழி தமிழ்மொழி ஆகிய இரு மொழிகளுக்குமுள்ள வேறுபாடு உயிர் நீங்கிய ஒருவனுக்கும் உயிருடனிருக்கும் ஒருவனுக்குமுள்ள வேறுபாட்டை ஒத்தது என்ற கருத்துடையவர். ''வட

மொழி வழக்கிழந்த மொழி. வழக்கில் நின்று உயர்த் தத்துவத்தோடு இருக்கும் தமிழ் மொழியே தமிழ்நாட்டில் தலைமை பெறுவதற்கு உரியதாகும்'' (தமிழன் மறுமலர்ச்சி : 29) என்று அழுத்தம் திருத்தமாக அறிவிக்கிறார். பிற நாடுகளில் அவ்வம் மொழியே தலைமையிடம் பெற்றுள்ளதையும் காட்டி, தமிழ் நாட்டில் தமிழே முதன்மை மொழியாகத் திகழவேண்டுமென் கிறார். ''ஆங்கில நாட்டில் ஆங்கிலந்தான் முதன்மை பெறுகிறதேயன்றி இலத்தீனும் கிரேக்கமும் அல்ல. புராணக் கதைகளையும் அறிவுக்கு முரணான கருத்துக்களையும் கொண்ட வட மொழி இலக்கியத்தால் அஞ்ஞானக் கருத்துக்கள் பல தோன்றி அறிவைக் கெடுத்துவிடும்; ஆதலால் வடமொழிக்கு முதலிடம் கொடுப்பது தகாது''

பயிற்றுமொழிச் சிந்தனை இன்றும்கூட நம்மவர்களிடத்தே வேரூன்றவில்லை. தாய்மொழிக் கல்வி என்பது கொள்கையளவில் மட்டும் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்றாகவே இன்றளவும் இருக்கிறது என்பது கண்கூடு. 'பிறமொழிச் சார்பாளர்' என்று அக்காலத்தில் கருதப்பட்ட வையாபுரியாரின் கூற்றுகளை எண்ணிப்பாருங்கள். கல்வியின் முக்கியத்துவத்தை உணர்வு பூர்வமாக மட்டும் நோக்காமல் அறிவியல் பூர்வமாகவும் எடுத் துரைக்கிறார். ''நம்முடைய வாழ்க்கையில் மிகவும் முக்கிய மானது நம் மனதும் மூளையும் வளர்ச்சியுற்று வரும் பருவமாகும். அப்பருவத்தில் நாம் அருமையாகப் போற்றவேண்டிய சில ஆண்டுகளை அன்னிய மொழிகளைக் கற்பதிலேயே நாம் விரயம் செய்யவேண்டியதாய் முடிகிறது. நம்மில் பலருக்கும் அவ்வகை அன்னிய மொழிக் கருவி ஒரு பாரமாக உள்ளது. அதன்மூலமாக நாம் பெறும் அறிவு உயிர்த் தத்துவம் சற்று ஞாபகமாத்திரையாய் அமைந்துவிடுகிறது. முற்றும் உணரப்படாமல் அறிவோடு அறிவாய் ஒன்றிப் பெருகாமல் போய்விடுகிறது'' (திராவிட மொழிகளில் ஆராய்ச்சி : 6).

தொடர்ந்து, தாய்மொழி வழிக் கல்வி, மொழி வளர்ச்சிக்குத் துணைபுரியும் என்ற கருத்தினை வெளிப்படுத்துகிறார். ''நமது தாய்மொழிகளை நமது கல்வியில் ஒவ்வொரு துறைக்கும் உற்ற உதவும் கருவியாக நாம் கொண்டாலன்றி, நமது மொழிகள் வளரமாட்டா; வளர்ந்துகொண்டே வரும் நமது தேவைகளுக்கு இவை (அன்னிய மொழிகள்) முற்றும் உதவமாட்டா. அறிவு வளர்ச்சிக்கும் பயன்படா மாட்டா; நமது மொழிகள் போஷணை

யற்று மெலிந்து முடிவில் அழிந்துபோக நேரிடும்" என்ற அச்சுறுத்தல் வெளிப்படுகிறது. தாய்மொழியின் வளர்ச்சி அம் மொழியின் மூலமாகக் கல்வி பயில்வதனால்தான் ஏற்படக்கூடும்" என்கிறார் (தமிழின் மறுமலர்ச்சி : 11).

ஆங்கில மொழி வழிக்கல்வி அவருக்கு உடன்பாடன்று. ஆங்கில மொழிக் கல்வி வேறு. ஆங்கில மொழி வழிக் கல்வி வேறு என்பதை நன்குணர்ந்திருந்தார், "நமது நாட்டில் தாய் மொழியைக் கைவிட்டு அந்நிய மொழியாகிய ஆங்கில மொழியிற் கல்வி போதிக்கும் மடமை நன்றாகப் புலப்பட்டது. தாய்மொழி மூலமாகத்தான் எல்லாவகைக் கல்வியையும் போதிக்க வேண்டும் (த. ம. ம. 60) என்று கூறுவதோடு "நாம் அறிவில் முன்னேற்ற மடைய வேண்டுமானால் அது வழக்கில் நிலைத்து நின்று நமது உயிரோடு உயிராய்க் கலந்து ஒன்றிவிட்ட தாய்மொழியின் மூலமாகத்தான் அடைய இயலும்" என்று தமது முடிவைக் கூறுகிறார் (தமிழின் மறுமலர்ச்சி : 30). அத்துடன் பயிற்று மொழியாகத் தமிழைச் சிறப்புறச் செய்யும் வழிமுறைகளையும் தருகிறார். "விஞ்ஞான அறிவைத் தமிழ் மக்களிடையே பரப்பு வதற்கும் அதனை மேன்மேலும் வளர்ப்பதற்கும் நமது தமிழ் மொழி வல்லதாதல் வேண்டும்.

அறிவுத் துறைகள் அனைத்திலும் தமிழில் நூல்கள் பிறத்தல் வேண்டும். நமது தமிழ் மக்களுக்கு விஞ்ஞான நோக்கு ஏற்படத் தமிழ் உதவுதல் வேண்டும்" (தமிழின் மறுமலர்ச்சி : 15) என்ற பேரவாவினை வெளிப்படுத்துகிறார்.

ஆராய்ச்சி என்பது வேறு, மொழிப்பற்று என்பது வேறு என்ற கோட்பாட்டாளராகத் திகழ்ந்தவர் வையாபுரிப்பிள்ளை என்ற உண்மையை மேற்குறிப்பிட்ட உரைகள் தெளிவுபடுத்து கின்றன.

## ஆய்வு முன்னுரைகள்

வையாபுரியாரின் ஆய்வு முன்னுரைகள் இலக்கிய அங்கீகாரம் பெற்றவை. அவருடைய பதிப்பு நூல்கள் அனைத்திற்கும் அவர் தந்துள்ள முன்னுரைகளைப் பார்க்கும்போது அவரது ஆய்வின் பரப்பும் ஆழமும் புலனாகும். சான்றாக, புறத்திரட்டு முன்னுரை யைக் கூறலாம். ஒரு முன்னுரை எவ்வாறு அமையவேண்டும் என்பதற்கு நல்லதொரு வரைவிலக்கணமாக அம்முன்னுரை விளங்குகிறது. புறத்திரட்டு ஒரு தொகை நூல். எனவே,

தொகை நூல் என்ற சொல் விளக்கம், தொகை நூல்களைப் பற்றிய குறிப்புகள், தமிழ் மொழியிலுள்ள பிறதொகை நூல்கள், வடமொழி முதலான பிற மொழிகளின் ஆதித் தொகை நூல்கள் எனத் தொகை நூல்களைப் பற்றிய பல செய்திகளைத் தருகிறார். இவரது 'முன்னுரை' ஆற்றலை நன்கறிந்தவர் கவிமணி. அவர் தமது நூல்களுக்கெல்லாம் தம் நண்பர் வையாபுரியாரிடம் முன்னுரைகளைக் கேட்டுப் பெற்றார். கவிமணியின் நூல்கள் பெரும்பாலனவற்றையும் பிள்ளையவர்களின் முன்னுரை அழகு செய்கிறது.

சில நூல்களுக்கு ஆங்கில முன்னுரையும் (Preface) தமிழ் முன்னுரையும் தரப்படுகின்றன. பிறமொழியாளர்களுக்கு இந் நூலை அறிமுகப்படுத்த வேண்டும் என்ற விருப்பினால் ஆங்கில முன்னுரையை எழுதினாரெனக் கொள்ளலாம். ஆங்கில முன்னுரை சுருக்க உரையாகவும், தமிழ் முன்னுரை மிகவும் விரிவானதாகவும் உள்ளன. சான்றாக, திரிகடுகமும் சிறுபஞ்ச மூலமும் நூலிலே 200 பாடல்களைக் கொண்ட சிறிய நூல்-இதற்கு பேராசிரியர் எழுதிய முன்னுரையோ 63 பக்கங்கள். ஏட்டுச்சுவடிகளின் விபரம், ஏடுகளைப் பெற்ற விபரம், ஏட்டுச் சுவடிகளின் நிலைமை, முக்கிய விபரங்கள் இவரது பதிப்பு நூலின் முன்னுரையில் இடம்பெறும் கட்டாயக் கூறுகள். இதுபோலவே பிற்சேர்க்கைப் பகுதியில் சொல்லாராய்ச்சிக்குப் பயன்படும் பல சொல்லடைவுக்ள் இடம்பெறும்.

தமிழ்ப் பேரகராதிக்கு அவர் எழுதிய ஆங்கில முன்னுரையில் (History of Tamil Lexiccgraphy) தமிழ் அகராதியின் வரலாற்றை முதல் நிகண்டான திவாகர நிகண்டிலிருந்து துவங்கி, கால வரிசைப்படி விளக்குகிறார். அகராதித் துறையில் முதன் முதலில் வெளிவந்த கருத்துக் கருவூலமாகவே இது அமைந்துள்ளது. இந்த முன்னுரைதான் இன்றைக்கும் அகராதியியல் அறிஞர்களுக்கு வழிகாட்டி நூலாக விளங்குகிறது எனலாம்.

## தமிழ் வாழ, வளர

காலத்திற்குக் காலம் மாறும் இயல்புடையது மொழி என்ற கோட்பாட்டினர் வையாபுரியார். 'உலகில் வழங்கும் மொழி களெல்லாம் இடைவிடாது மாறிக்கொண்டும் வளர்ந்துகொண்டும் வரும் இயல்புடையன' என்பது அவர் கூற்று. எனவே அதற்குத்

தக்காற்போல அவ்வக்கால மொழி இயல்புக்குத் தக்கவாறு இலக்கணங்கள் உருவாக வேண்டும் என்பதை வலியுறுத்தினார். அதுபோலவே இலக்கிய வகையிலும் புது இலக்கிய மரபுகள் தோன்றி மொழிக்கு வளம் சேர்க்க வேண்டும் என்பதைச் சுட்டுகிறார். "இலக்கிய இயல்பை நன்குணர்ந்து புதிய மரபினை மேற்கொண்டு புதிய இலக்கியங்களை அமைத்தல் இலக்கிய விவாதத்திற்கு இன்றியமையாதது – பெருங்கடமை" என்று அறிவுறுத்துகிறார். இலக்கியத்தை சமூகத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கும் அணுகுமுறையைக் கீழ்க்கண்டவாறு தருகிறார். "ஒரு சமுதாயம் ஒரு குறிப்பிட்ட காலத்தில் எவ்வகை இலக்கியத்தைக் கற்று மகிழ்ந்து இன்புறுமோ அவ்வகை இலக்கியம்தான் அவ்வக்காலத்து உண்டாவது இயல்பு. சமுதாயத்தின் நிலைக்கும் சூழ்நிலைக்கும் அவற்றில் உண்டாகும் இலக்கியத்திற்கும் மிக நெருங்கிய விட்டு விலகாத தொடர்பு உண்டு" (காவிய காலம்: 22-23).

தமிழ்மொழி அமைப்பு எதிர்காலத்தில் எங்ஙனம் இருக்கக் கூடும் என்பதை ஆராய்ச்சிக் கண்ணோட்டத்துடன் கணித்துக் கூறுகிறார் (கம்பன் காவியம் : 163). "மொழி மக்களது அறிவு வளர்ச்சிக்கும் சமுதாய நிலைக்கும் சூழ்நிலைக்கும் தக்கவாறு காலத்துக்குக் காலம் வேறுபடுகின்ற ஒன்றாகும். மொழி மக்களது வாழ்வின் போக்கிற்குத் தக்கபடி மாறவேண்டும். முன்காலத்தில் ஆசிரியர்கள் வாழ்க்கையின் சாயல் அதிகமில்லாத கவிதைகள் இயற்றினார்கள். தற்காலத்தில் நூற்பொருட்களுக்கும் வாழ்க்கை இயல்புக்கும் தொடர்புடைய நூல்கள் எழுதப்படுகின்றன. தற்காலத் தமிழில் மக்கள் வாழ்வுக்கும் அறிவுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டுள்ளது. ஐரோப்பிய நூல்களையும் தற்காலப் பத்திரிகைகளையும் மக்கள் படிக்கத் தொடங்கினர். கல்வித் திட்டமும் விஞ்ஞான அறிவும் முன்னேற்றமடைந்தன. நூலுணர்ச்சி, அறிவின் உரம், கருத்துத் தெளிவு முதலிய இயல்புகளுக் கேற்பத் தமிழ் நடையும் மாறுபடும். அந்நியக் கருத்துக்களும் தமிழுக்குத் தந்த புது வேகத்தால் தமிழின் நெறி வேறுபட்டு ஓங்கும். வருங்காலத்தில் தாய்மொழி தமிழ் மக்கள் அனைவருக்கும் பொதுவுடைமையாய் அமைந்து, மக்கள் வாழ்வோடு கலந்து புத்துயிர் பெறும். புதுக் கருத்துக்கள், சொற்கள், வாக்கியங்கள், அமைதிகள் முதலியன தம் இயல்பு கெடாதபடிப் பெருகி, சொற்களுக்குப் பொருள் வரையறையும் கருத்து வரையறையும் அறிவியல் பயிற்சியால் உண்டாகும்".

## பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளையின் நூல்கள்

| | | |
|---|---|---|
| ஆராய்ச்சியுரைத் தொகுதி | 1930 | ஆசிரியர் பதிப்பு |
| சிறுகதை மஞ்சரி | 1944 | தினமணி வெளியீடு |
| இலக்கியச் சிந்தனைகள் | 1947 | பாரிநிலையம், சென்னை |
| தமிழர் பண்பாடு | 1949 | தமிழ்ப்புத்தகாலயம், சென்னை (எட்டு பதிப்புகள் வெளிவந்துள்ளன) |
| கம்பன் ஆராய்ச்சிப் பதிப்பு | 1950 | கம்பன் கழகம், காரைக்குடி |
| உரைமணி மாலை | 1951 | ஆசிரியர் பதிப்பு |
| இலக்கிய தீபம் | 1952 | பாரிநிலையம், சென்னை |
| இலக்கிய உதயம் I | 1950 | தமிழ்ப்புத்தகாலயம், சென்னை |
| இலக்கிய உதயம் II | 1952 | தமிழ்ப்புத்தகாலயம், சென்னை |
| கம்பன் காவியம் | 1955 | தமிழ்ப்புத்தகாலயம், சென்னை |
| இலக்கணச் சிந்தனைகள் | 1956 | பாரிநிலையம், சென்னை |
| திராவிட மொழிகளில் ஆராய்ச்சி | 1956 | தமிழ்ப் புத்தகாலயம், சென்னை |
| சொற்களின் சரிதம் | 1956 | பாரிநிலையம், சென்னை |
| சொற்கலை விருந்து | 1956 | பாரிநிலையம், சென்னை |
| காவிய காலம் | 1957 | தமிழ்ப்புத்தகாலயம், சென்னை |
| இலக்கிய விளக்கம் | 1958 | தமிழ்ப்புத்தகாலயம், சென்னை |
| ராஜி | 1958 | |
| தமிழ்ச்சுடர் மணிகள் | 1959 | பாரிநிலையம் (மூன்றாம் பதிப்பு) சென்னை |
| அகராதி நினைவுகள் | 1959 | தமிழ்ப்புத்தகாலயம், சென்னை |
| தமிழின் மறுமலர்ச்சி | 1960 | பாரிநிலையம், (நான்காம் பதிப்பு) |

Research in Dravidian Languages 1946, Madras
Premier Company, Madras

History of Tamil Language and Literature 1956.
N. C. B. H., Madras

## சான்றாதரவு நூல்கள்


அப்புஸ்வாமி பெ. நா. 1957 'ஐம்பது ஆண்டுகளாக' வையாபுரிப் பிள்ளை வாழ்க்கைக் குறிப்புகள் தமிழ்ப் புத்தகாலயம், சென்னை

இராதா செல்லப்பன் 1975 பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்களின் நூல்கள், கேரளப் பல்கலைக் கழகத்திற்கு அளிக்கப்பட்ட முதுகலைப் பட்ட ஆய்வேடு.

இராதா செல்லப்பன் 1991 ஆய்வு நெறியும் வையாபுரியும், ஆசிரியர் பதிப்பு, திருச்சி.

இராதா செல்லப்பன் 1991 'பதிப்பியல் அறிஞர் வையாபுரியார்' தமிழ்ப் பொழில், கரந்தைத் தமிழ்ச் சங்க வெளியீடு, தஞ்சாவூர்.

கல்யாண சுந்தரனார் திரு. வி. 1969 திரு. வி. க. வாழ்க்கைக் குறிப்புகள். கழக வெளியீடு, சென்னை

கைலாசபதி 1977 இலக்கியமும் திறனாய்வும், பாட்டாளிகள் வெளியீடு, சென்னை.

சண்முகம் பிள்ளை மு. 1991 பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை - வாழ்வும் தொண்டும் தமிழ்ப் பல்கலைக் கழகம். தஞ்சாவூர்

சரோஜினி. வை. 1957 வையாபுரிப் பிள்ளை வாழ்க்கைக் குறிப்புகள், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை,

சிவத்தம்பி கா. 1988 இலக்கிய வரலாறு. என். சி.பி. எச்., சென்னை

சுப்பிரமணியம் வி. ஐ. 1961 சில கட்டுரைகள் (தொகுதி–1) மீனாட்சி புத்தக நிலையம், மதுரை

தங்கம்மாள் 1991 என் தந்தையார் பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை, ஆசிரியர் பதிப்பு.



பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்களுக்கு நூற்றாண்டு விழா எடுப்பதென தில்லித் தமிழ்ச் சங்கம் முனைந்தபோது, அவர் எழுதி, இதுவரை வெளி வராத பகுதிகள் இருந்தால் நூலாக வெளியிடலாம் என எண்ணினோம். அவருடைய பேத்தி முனைவர் இராதா செல்லப்பன் மூலம் அவர் எழுதிய கவிதைகள் வெளி யிடப்படாமல் உள்ளன என அறிந்து, நூற்றாண்டு விழாவின் சிறப்பு நிகழ்ச்சியாக நூல் வெளியிடுவதென முடிவு செய்தோம். அதன் விளைவே உங்கள் கைகளில் தவழும் இந்நூல்.

முனைவர் இராதா செல்லப்பன் அவர்கள் பாரதி தாசன் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றுகிறார். 'கலைச் சொல்லாக்கம்', 'வையாபுரி யும் ஆய்வுநெறியும்' ஆகிய நூல்களை எழுதியவர் இவர். வையாபுரிப்பிள்ளை எழுதிய கவிதைகளோடு, அவர் ஆற்றிய ஆய்வுப்பணி குறித்து சுருக்கமாகவும் தெளிவாகவும் எழுதியுள்ளார் நூலாசிரியர்.

தில்லித் தமிழ்ச் சங்கம்